

# ஞானதேவர்

P. Y. தேஷ்பாண்டே



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிறப்புக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச்சிற்பம் - கி.பி. இரண்டாம் நூற்றாண்டு, படஉதவி : நேஷனல் மியூஸியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# ஞானதேவர்

மூலம் :

P. Y. தேஷ்பாண்டே

தமிழாக்கம் :

T. N. சேனுபதி



சாகித்திய அக்காதெமி

*Jnanadevar* — Tamil translation by T. N. Senapathy of P. Y. Deshpande's monograph in English, Sahitya Akademi, New Delhi (1988) Rs. 5.


First Published : 1988

**சாகித்திய அக்காதெமி**

தலைமை அலுவலகம் :

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி - 110001

கிளை அலுவலகங்கள் :

29, எல்டாம்ஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018
பிளாக் V-B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா-700 029
172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் - 400 014.

ரூ. 5.

அச்சிட்டோர் :
ஸ்திரி சேவா மந்திர் பிரஸ், சாலிகிராமம், சென்னை - 93

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| கால எல்லை கடந்த அற்புதம் | ... | 7 |
| அப்பால் இருந்து காண்போர் | ... | 13 |
| அகத்துள் மூண்ட போரும் அருட்பேறும் | ... | 25 |
| 'ஞானேசுவரி' | ... | 35 |
| ஞானதேவருடைய கீதை | ... | 48 |
| அநுபவாம்ருதம் | ... | 60 |
| மனிதன், அநுபவம், மெய்ப்பொருள் | ... | 72 |
| ஞானம், அஞ்ஞானம், மெய்ப்பொருள் | ... | 85 |
| யோகம், பக்தி, மெய்ப்பொருள் | ... | 102 |
| வாழ்வு, சாவு, இறவாமை | ... | 117 |

# கால எல்லை கடந்த அற்புதம்

பல லட்சக்கணக்கான மராட்டி பேசும் மக்களின் உள்ளத்தில் ஞானதேவர் என்ற பெயரைக் கேட்டதும் தனித்ததோர் ஆர்வம் எதிரொலித்து எழும். இந்த ஆர்வம் மனிதனுக்கும், மனிதனுக்கும் அம்மனிதனுக்கும் உலகுக்கும் இடையே மனோபாவத்தால் ஏற்பட்ட தடைகள் யாவற்றையும் தகர்த்து, அவற்றைக் கடந்து செல்லும் ஒன்று ; ஒரே சமயத்தில் தனி ஒருவனது அந்தரங்கத்திலும் சரி, பிரபஞ்ச முழுவதிலும் சரி, பொங்கி எழும் சிறப்புடையது அந்தப் பேரார்வம் ; மனித உள்ளங்களை உருகவைத்துக் கண்ணீர் ஆருக்கி அமைதியாக வாழ்வு எனும் கரைகாணாப் பெருங்கடலை நோக்கிச் செல்வது அது.

மராட்டி மொழி பேசாத (வேற்றுமொழி பேசும்) மக்களுக்கு இந்த ஆர்வத்தின் உட்கருத்தை எடுத்துக் கூறுவது கடினமாகும்; அதிலும், மராட்டிக்கு மட்டுமின்றி, தொன்றுதொட்டு இந்தியாவுக்கே முக்கியமாக உரியவையான மொழிகள் அனைத்துக்கும் மாறுபட்ட (அந்நிய மொழியான) ஆங்கிலத்தில் அதனை விளங்க வைக்க முயன்றால் அத்தகைய முயற்சி எதுவும் பயனற்றுப் போகும். தனிஒரு மனிதனுக்கும் மற்றொருவனுக்கும் சரி, அம்மனிதனுக்கும் அவனைச் சுற்றியுள்ள உலகுக்கும் சரி (இவர்களிடையே) உள்ள நெருங்கிய உறவு, (இவர்களது) உள்ளத்தில் ஆழ வேர் ஊன்றி, இத்தகையது என்று எடுத்துக்கூற இயலாத ஒன்று. மொழி என்பது ஒருவகைப் பண்பாட்டைத் தன்னிடத்தே கொண்டது ; ஒவ்வொரு வகைப் பண்பாடும் மற்ற மொழிகளின் வாயிலாக அமைந்த பண்பாட்டு வகைகளினின்றும் மாறுபட்டது. எனவே, தங்கள் சொந்தப் பண்பாட்டு வகையைச் சேராத ஒன்றன் அடிப்படை அம்சத்தைப் புரிந்துகொள்ள விரும்பும் மக்கள், உள்ளூற அதற்கான முயற்சியை எடுத்துக்கொள்ள வேண்டும் ; அந்த நேரத்துக்காவது அவர்கள் தங்கள் சொந்தப் பண்பாட்டின் எல்லையைக் கடந்து வெளியேறும் ஆற்றல் உடையவர்களாக அமையவேண்டும் ; ஒருவன் தன்னுடையதினின்றும் வேறான ஒரு மனிதனின் பண்பாட்டில் ஈடுபாடு காட்டும் அளவுக்குச் சிந்தனையில் திளைக்க வேண்டும். அந்த

மாறுபட்ட பண்பாட்டைத் தன் சொந்த வாழ்வில், தூய்மையும் எளிமையும் கொண்ட மனிதன் என்ற முறையில், 'நான் இன்ன வகையைச் சேர்ந்தவன்தான்' என்று தன் சொந்தப் பண்பாட்டைக் காக்க வந்தவனுகத் தன்னைக் கருதாமல், எதையும் பரந்த நோக்குடன் புரிந்துகொள்ள முன்வர வேண்டும். எப்படிப் பார்த்தாலும் பண்பாட்டை உருவாக்கியவன் அவன்தானே? அது அவனை உருவாக்கிட வில்லையே!

''வரலாறு நமக்கு அறிவுறுத்துவது என்ன? 'நம்மோடு வாழும் மற்றவர்களையும் அரவணைத்துச் செல்லவேண்டும்' என்பதுதான். மற்றவர்களைப் புரிந்துகொள்ளும் வகையில் நாம் வாழ வேண்டும்; இத்தகைய வாழ்வே பொருள் பொதிந்தது. மற்றவர்களுக்கும் அது தெள்ளென விளங்கும். நமது சொந்த வாழ்வின்மூலமே பிறனது வாழ்வில் உள்ள தனித் தன்மை யையும், இதுவரை அறியாத புதிய போக்கையும் தெளிவாக உணர முடியும். நமது சொந்த வாழ்வே, உலகம் முழுமைக்கும் அறிவுறுத்தும் வகையில் அமைந்திடவேண்டும். நாம் கட்டுப் பாட்டுடன் இருந்திட வேண்டும் என்பதையே இப்படி வரலாற்றின் வாயிலாக அறிகிறேம். முறையாக, மற்றவர் களையும் நம்மில் ஒரு சாராராக ஏற்று வாழ்ந்திடப் பழைய வரலாறு வகை செய்கிறது. 'நாம்' என்பதில் நம்மில் ஒரு பகுதியான 'பிறன்' என்னும் அம்சமும் அடங்கியுள்ளது. இதை நாம் முற்றும் உணர்ந்திட வேண்டும். இப்போது, 'இதென்ன, முரண்பாடாக இருக்கிறதே! இது எப்படிச் சாத்தியம்?' என்ற பிரச்னை தோன்றிப் பகுத்தறிவைச் சோதிக் கிறது.'' (ஒர்ட்டேகா ஒய் காஸெட்)

ஞானதேவரின் வாழ்வையும் அவரது சாதனையையும்பற்றி அறிந்த மராட்டி (மொழி பேசும்) மக்களேகூட இப்படித் திகைக்கும் நிலைக்குள்ளாகிறுர்கள். இத்தகையோர் ஞானதேவ ருடைய இலக்கியம் எனத்தகும் நூல்களை உணர்ச்சி பொங்கிட ஆர்வத்துடனும் ஈடுபாட்டுடனும் பயின்றுலும் அவரது மாபெரும் நூலான 'ஞானேசுவரி'யில் (பகவத்கீதையின் விளக்கமே இது) பழக்கமான ஒரு சில பகுதிகளையும், அவரது பக்திப் பாடல்களையும் பொறுத்த வரையில்தான் இந்த ஆர்வ நிலை பொருந்தும்; அவருடைய மற்ற நூல்களோ அளவிலே சிறியனவாயினும், வாழ்வின் தத்துவத்தை ஆழ்ந்து உணர்ந்த தால் எழுந்தவை. இவை அவரது தனிப்பட்ட மேதையின் ஸாரஸங்க்ரஹம் அல்லது பிழிந்தெடுத்த சாறு எனலாம்.

இவற்றில் மிகத் தெளிவான முறையில் பேருண்மைகளை அவர் உணர்த்துகிறார். குறிப்பிட்ட இந்த நூல்கள் மக்களிடையே பரவவில்லை. எனவே, அவரது பெயரைக் கேட்டதும் எழும் பேரார்வம் இவற்றைப் பொறுத்தவரையில் இன்னும் ஏற்பட்டபாடில்லை. 'அநுபவாம்ருதம்' ''சங்கதேவ பசஷ்டி' (65 பாக்கள் கொண்டது) என்பவைதான் இவை. தனிச் சிறப்புள்ள இந்த நூல்கள், வாழ்வில் ஒருவன், தான் மனிதன் என்ற முறையிலும் சரி, உலகத்தோடு பழகும் போதும் சரி எப்படி இருக்கவேண்டும் என்பதை அறிவுறுத்து கின்றன; மராட்டிய மொழி பேசும் மக்கள்கூட இதனை உணர்ந்திட வேண்டுமானால், தாம் சிறைப்பட்டுக் கிடக்கும் சொந்தப் பண்பாட்டின் எல்லையைக் கடந்துதான் ஆக வேண்டும். உரைகாரர்களின் விளக்கங்களை அறிந்து கொள்வதோடு மட்டுமின்றித் தாமாகவும் ஞானதேவரின் போதனையை உய்த்துணர்ந்திட வேண்டும்.

ஞானதேவர் பிறந்தது கி.பி. 1275-இல்; மறைந்தது 1296-இல். இந்தக் குறுகிய இருபத்தோராண்டு எல்லைக்குள், உலக வரலாற்றில் இவரைப்போல் ஞானத்தில் முதிர்ந்து விளங்கியவர்கள் வெகு சிலரே. ஞானதேவர் மத்தியயுகத்து மகாராஷ்டிரத்திலே, வளைந்து வளைந்து செல்லும் ஒற்றையடிப் பாதைகளிலும், தூசிமண் நிறைந்த பாட்டைகளிலும் நடந்து சென்றார்; வளர்ச்சி பெறாத நிலையில் இருந்த அம்மக்களின் மொழியிலேயே அவர்களுடன் உரையாடினார்; இது நிகழ்ந்து ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகள் ஆகின்றன. இப்படி மக்களிடையே அவர் பேசிக்கொண்டே சென்றபோது, வளர்ச்சி பெற்ற எம்மொழியினரும் ஏங்கி வியக்கும்வண்ணம் இம் மக்களின் (மராட்டிய) மொழி வளம் பெற்று அதில் உள்ள கருத்துக்களும் பொருள் செறிந்தவையாயின. அந்த எளிய மக்களுடன் அவர் அன்று பேசியவை, இன்று மற்ற எந்த வளம் பெற்ற மொழியிலுங்கூட எளிதில் விளக்கக் கூடியனவாக இல்லை என்றால், பாருங்கள்! அந்த அளவுக்குப் பொருட் செறிவு உடையவை அவை எனலாம். அதோடு மனித குலத்தின் விதியை நிர்ணயிக்கும் அளவுக்கு, மக்களின் உள்ளங் களில் விழிப்பை ஊக்கிவிட்டது அவருடைய அந்தப் பேச்சு. ஏழு நூற்றாண்டு ஆகியும் இன்றும் அங்குள்ள பெரும்பாலான பாமரமக்களும் சரி, படித்த ஒருசிலரும் சரி, அவருடைய அந்த அற்புதமான போதனைகளைக் கேட்டு, மந்திரத்தால் கட்டுண்டு கிடப்பதுபோல் மெய்ம்மறந்து நிற்கிறார்கள்!

அவற்றில் 'சொல்லும் சொல்லின்மையும்' என்ற நிலையும், 'காலவரையறையும் அதற்கு அப்பாற்பட்டது' என்ற நிலையும் மாறிமாறிக் கண்ணுமூச்சி ஆட்டம் காட்டுவதை என்ன வென்பது? அவற்றைப் படிக்க ஆர்வம் கொண்ட உலகோர் அனைவருக்கும் சுடர் விளக்காய், ஆழ்ந்த அறிவூட்டி மகிழ் விக்கும் ஆட்டம் இது! வெறும் சொற்களாகமட்டுமே இருந் திருப்பின் ஏதோ அர்த்தமற்ற பிதற்றல் ஆகிக் காலச்சக்கரத்தின் கீழ் நசுக்குண்டு போயிருக்கலாம்; ஆனால் அவை எளிய சொற்களேயாயினும் அழிவற்ற, நிலையான பேரன்பின் ஸ்பரிசம் பட்ட மாத்திரத்தில் கால எல்லைதனைக் கடந்து விளங்கும் அற்புதமாக ஒளிர்வதையே காண்கிறோம். இத்தகைய சொற் சிலம்பம் ஆடிக்காட்டியவர், பிரேமையாம் பேரன்பு கொண்டவர்; எனவே, தலைமுறை தலைமுறையாக மக்களின் உள்ளங்களிலே என்றென்றும் இடம் பெற்று விளங்குகிறார். ஞானதேவர் விட்டுச் சென்றவை வேறெவையுமல்ல, சொற்கள் மட்டுமே என்றாலும் அவை மக்களின் உள்ளத்தில் சிறகு விரித்துப் பறந்து, எங்கே எதுவும் அநித்தியமாகவோ (எனவே) பொருளற்றதாகவோ இராமல் (நித்தியமானதாகவும் பொருள் பொதிந்ததாகவும்) உள்ளதோ அத்தகைய உலகத்துக்கு அழைத்துச் செல்லும் ஆற்றல் பெற்றவை.

ஞானதேவர் இப்படியெல்லாம் மொழிந்திட அவரை ஊக்கிய பேரன்பு, எந்த ஒரு வஸ்துவையோ, விஷயத்தையோ குறித்ததன்று; நம்மை ஐயத்தால் திகைக்க வைத்திடும் 'வஸ்து', 'விஷயம்' என்ற இரண்டுக்கும் ஊடே சென்று, (இரண்டையும் பிரித்துப் பார்த்து அழிக்க முயலும்) விதண்டாவாதப் போக்கைத் தவிர்த்து, ஆக்கசக்தி அவற்றில் ஒளிரும்படி செய்யும் பேரன்புதான் அது. அதன் ஸ்பரிசம் பட்டதுமே மனிதன், வாழ்வு, அநுபவம், உலகம், கடவுள் அல்லது மெய்ப்பொருள் எல்லாமே, திடீரென மேகமோ நிழலோ அற்ற வானம்போல் நிர்மலமான பேரறிவாம் திவ்விய ஒளியாக மாறிக் காணும். ஞானதேவர் தம் குருநாதரைப்பற்றிப் புகழ்ந்து பாராட்டிடும்போது, அந்தக் குருநாதரும் மறைந்து போய் எங்கும் (தானாகவே சுடர்விட்டுச்) சுயம்பிரகாசமாய் யாவற்றையும் அறிந்து விளங்கும் ஒளிப்பிழம்பே காட்சி அளிக்கிறது. இன்னதென வர்ணித்திடவோ, எண்ணிப் பார்த்திடவோ, அறிந்திடவோ இயலாதது அது. யாவற்றையும் அறிந்த நிலையில் ஞானதேவரின் இந்த ஆன்மிகச் சுடரொளி, அவருடைய செஞ்சொற்களில் ஆடி மகிழ்வதைக் காண்கிறோம் – அற்புதச் சிறகுகள் படைத்த பரமாத்மன் (அல்லது பரம்பொருள்) என்னும் பறவைபோல்!

ஞானதேவர் இந்த அற்புதத்தை எப்படிச் சாதித்தார் ?— இந்த வினவுக்கு அவரே ஒரு விடையும் தந்திருக்கிறார். 'அநுபவாம்ருதம்' என்ற நூலில் அவர் சொல்கிறார்: ''நான் கண்ட அழியா அநுபூதி இது; என் அநுபவத்தினால் முற்றிக் கனிந்ததன் விளைவு இது. முக்தி பெற்றோர், பெறுதோர், அதைப் பெற விரும்புவோர் இப்படி யாவருமே அந்த ஒரே பரம்பொருளின் சாரம்தான். அறிவு முதிர்ச்சி ஏற்படும் அந்தக் கணம் வரையில்தான் இவர்களுக்குள் வேறுபாடு; அநுபூதியினால் ஆழ்ந்த பேருண்மை தெளிவானதும் அதற்கு மூலாதாரமான அமுதத்தைச் சுவைத்திடும் பேறு கிட்டுகிறது. எல்லா மனிதர்களுக்குமே பொருந்தும், இந்த ஊழ் அல்லது விதி. குமரிப் பெண்ணிடம் முகிழ்க்கும் இளமை, தன் அன்பு நாயகனுடன் அவள் இணையும்போதுதானே மலர்கிறது? அதுபோலத்தான் இதுவும்; அல்லது மரங்களுக்குள்ளே, அவை பூத்துக் கனியும் ஆற்றல் அடங்கியிருக்கிறது; ஆனால் வசந்த காலம் வரும்போதுதான் கப்பும் கிளையும் பூத்துக் குலுங்கி, வானத்தோடு உறவாடும்படி செய்கிறது அந்த மரங்களின் ஆற்றல்; இது போலவுந்தான் எனலாம்.

''இவ்வாறாகவே எல்லா மனிதர்களுக்குள்ளும் அறிவு முதிர்ச்சி அடையாத நிலையில் வேற்றுமை இருப்பினும், அவர்கள் எனது இந்த அநுபவாம்ருதத்தின் இனிமையைச் சுவைக்கலாம்; இதிலுள்ள ஒவ்வொரு சொல்லின் பொருளையும் உள்ளுறக் கவனித்துப் பார்த்தாலே - நேருக்குநேர் அந்தராத்மனின் சந்நிதியில் நின்றாலே - போதும்; அந்தப் பேறு கிட்டும்! அப்போது ஜீவாத்மாக்களாகிய அவர்களுடைய ஆற்றல் யாவும் இயற்கையாகவே ஓடிடும் ஆறெனப் பொங்கிப் பெரு வெள்ளமாக, வாழ்வென்னும் பெருங்கடலோடு கலந்திடப் பாய்ந்து செல்லும். இந்த நிலை ஏற்பட்டால் இம்மாபெரும் பிரபஞ்சத்தில் சேதனம் அல்லது உணர்வுள்ள பொருள் அசேதனம் அல்லது உணர்வற்ற பொருள் இப்படி எது வாயினும் அநுபவம் என்னும் அமுத வெள்ளத்தில் அடங்கியே தீரும்''. (அநுபவாம்ருதம்: 10 - ஆம் பகுதியில் 19 முதல் 28 வரை உள்ள பாக்கள்)

பிறிதோர் இடத்தில் 'ஞானேசுவரி'யிலே அவர் சொல்கிறார்: ''நான் பேசுவது மராட்டி மொழியில் (தேவபாஷை என்கிறார்களே, அந்தச் சமஸ்கிருதம் போன்றதன்று இது!) — சாதாரண மக்கள் பேசும் இயல்பான மொழிதான் என்றாலும் இந்த எளிய மராட்டிச் சொற்களைக் கவனத்துடன் கேட்டால்,

இவற்றிலுள்ள இனிமை தேவாம்ருதத்தையும் மிஞ்சியதாக இருக்கும்.

''இதில் காணும் சொற்களோ மிகவும் இனிய பண்டங்கள் பரிமாறிய பெருவிருந்து என்பேன்; சுதந்தரம் என்னும் அமுது கலந்த இது எல்லா உயிர்களினுள்ளும் ஊடுருவிப் பரவும் தனிச் சிறப்புக் கொண்டது. ஆனால் இதனை அமைதியாக அமர்ந்து கேட்பவர்தாம் - உள்ளத்தில் விழிப்புநிலை என்னும் ஒளிப் பிழம்பு சுடர் விடும் மாந்தர்தாம் இந்தத் திவ்யாம்ருதத்தின் சாரத்தைப் பருகிட முடியும்; எவரும் அறியாதபடி, தம் எதிரே வைக்கப்பட்டுள்ள இந்த இனிப்புகளை, இத்தகையவர் களாலேதான், புலன்கள் தம்மை மறந்த இன்ப நிலையில் ஓய்வு பெற்றிருக்கும்போது அநுபவித்திட முடியும்.''

ஞானதேவரின் வாக்கு இது. அவர் இப்படிப் பேசும் போது அவருடைய சொற்களினின்று எழும் நாத அலைகள் அவருடன் அவரைக் கேட்போரையும், ஞானத்தை நாடிச் செல்லும் நெடும் பயணத்தில் ஈடுபடச் செய்துவிடும். அதுவும் எத்தகைய ஞானம்? காலம், இடம், சூழ்நிலை இவற்றிடையே புகுந்து சென்றும் இந்த எவற்றாலும் மாசுபடாத பேரறிவு அது!

ஞானதேவர் உண்மையிலேயே கால எல்லையைக் கடந்த நித்திய அற்புதம் என்றுதான் கூற வேண்டும்!

# அப்பால் இருந்து காண்போர்

"ஞானதேவர் யார்? எத்தகையவர்? அவர் எப்படி வாழ்ந்தார்? அவர் புரிந்த சாதனை என்ன? ஞானதேவர் வாழ்ந்தது குறித்தும், அவரது சாதனைகுறித்தும் கிறிஸ்துவுக்குப் பின் இந்த இருபதாம் நூற்றாண்டிலே போய் ஆராய்வது எவ்விதம் பொருந்தும்?'' என்ற வினாக்கள் எழலாம், சிலருடைய மனத்தில்.

எப்போதோ ஒரு காலத்தில் வாழ்ந்த ஒருவரைப்பற்றி, அதிலும் தம் வாழ்வினாலும் சாதனையினாலும் மக்களை இன்றும் ஊக்கிடும் ஒருவரைப்பற்றிப் பொதுவாக இப்படியெல்லாம் கேட்பது சகஜமே; அத்தகையவரைக்குறித்து அறிய ஆவல் ஏற்படுவதும் இயல்பே.

என்றாலும், 'முன் எப்போதோ வாழ்ந்த அல்லது இன்றும் வாழும் ஒருவரைப்பற்றி நாம் அக்கறைப்படுவானேன்?' என்று யாரும் கேட்பது வழக்கமில்லை. நம் சொந்த வாழ்க்கையைப் பற்றி அப்படி அக்கறை கொள்கிறோமா? – 'வாழ்வில் அக்கறை காட்டுவது' என்கிறோமே, அப்படியென்றால் உண்மையில் என்ன? வெறும் 'வாழ்வு' என்பதில் கொள்கிற அக்கறையா அது, அல்லது வாழ்வு நமக்கு அளவற்ற தயையுடன் தந்திடும் பொருள்களின்மீது கொள்ளும் அக்கறையா? இப்படிப் பார்க்கும்போது, வாழ்வு நமக்கு அளித்திடும் எல்லாப் பொருள்களின்மீதுமே அக்கறை கொள்கிறோமா என்ன? நமக்குப் பிடித்த சிலவற்றின்மீதே அக்கறை கொள்கிறோம் என்பதும், நமக்குப் பிடிக்காதவற்றை உள்ளூற ஏற்பதில்லை என்பதுந்தானே உண்மை? நமக்குப் பிடித்தமானவை, பிடித்த மில்லாதவை என்று நம்முள் சிலவற்றை நாமே கருதுகிறோமே, இந்த நீடித்த முரண்பாட்டைக் கவனிக்கிறோமா? முரண்பாடு என்னும் சிறை மதில்களுக்குள் சிக்கிய நம் மனம் அந்த எல்லைக்கு அப்பால் உள்ள எதைக்குறித்தும் உண்மையாகவே அக்கறை கொள்வதில்லை என்பதையாவது கவனித்தோமா? இப்படிச் சிறைப்பட்டுக் கிடக்கும் எல்லைக்குள்ளும் 'ஓரளவே அமைந்த தீமைகளையும் அசௌகரியங்களையும் வேதனைகளையும் குறித்து மட்டுந்தானே கவலை கொள்கிறோம்?' என்பதைக் கவனித்

தோமா ? வாழ்வு என்றால் முரண்பாடு என்றுதானே கருதுகிறோம் ? 'அப்படியானால் இந்த வாழ்வு இத்தகைய போராட்ட — முரண்பட்ட - நிலைதானா ?' என்று நமக்குள் ஓர் ஐய வினா எழுகிறது. அந்த வாழ்வு நேர்முகமானதோ, மறைமுகமானதோ, தனிப்பட்ட மனிதனைப் பொறுத்ததோ யாதாயினும் சரி, அத்தகைய முரண்பாடு உடையதுதானா என்பதையேனும் நமக்குள் நாமே கேட்டுப் பார்த்துக் கொள்கிறோமா ? அல்லது வாழ்வு என்பது முரண்பாடுகளி னின்றும் விடுபட்டு, அறிவும் ஆக்கமும் அமைந்து இயற்கை யுடனும் எல்லா ஜீவன்களுடனும் ஒத்துப்போகும்படி தானா கவே மலர்ந்திடுகிறதே அதுதானா ?

இத்தகைய வினாக்களை எழுப்புவது பொருத்தமாகப் பட வில்லைதான் ; நம்மைத் திகைத்திடச் செய்வதுதான். காரணம், தீவிரமாக இவ்வாறெல்லாம் வினவி, ஆராய முற்பட்டால், ஓயாத வினாவும் அதைக் குறித்துச் சொற்சிலம்பம் கொண்ட மைந்த தர்க்க - விவாதமுமாக மாறி, கோணல்மாணலாக வளைந்து எங்கோ எவ்வாறோ நம்மையே அறியாமல் வழிதவறிய நிலையில் எங்கே தொடங்கினோமோ அங்கேயும் திரும்பவந்து சேர்ந்திட முடியாத நிலையிலேதான் - திண்டாட நேரும். இதனா லேயே நம்மில் பெரும்பாலோர், 'வாழ்வு என்றால் என்ன ? என்றெல்லாம் பெரிய பெரிய வினாக்களை எழுப்பாமல் வாழ்ந்தாலே போதும் என்று இருந்துவிடுகிறோம்; இதுதான் எளிது, இயல்பானதுங்கூட என்றும் தோன்றுகிறது. ஆனால், நாம் கண்டறிய முடியாத காரணங்களால் சில நிகழ்ச்சிகள் நேரிடும்போதுதான், முந்தி எளிதாயும் இயல்பானதாயும் நாம் எண்ணிவந்த வாழ்க்கைப் போக்கு, பெருத்த அளவில் பாதிக்கப்படுகிறது ; இப்படி ஏற்பட்டே தீரும். அப்போது தான் நமக்குத் தொல்லைகள் உண்டாகின்றன.

தொன்றுதொட்டு மனித இனம் பெரும்பாலுமே இப்படி, 'ஏதோ உலகம் நடக்கிறது ; நம் காலத்தை எப்படியாவது கடத்தி விடுவோம்' என்றும், அதே சமயத்தில், 'எந்த நேரம் என்ன நேருமோ ?' என்ற பரபரப்புக் கொண்டும் வாழப் பழகிவிட்டது. வெகுசிலரே இந்த வாழ்வுச் சுழலிலிருந்து தப்பி ஓடி ஒளிய முனையாமல், 'இதை எதிர்நோக்கிச் சென்று சமாளித்தே ஆகவேண்டும்' என்பதை உணர்ந்திருக்கிறார்கள். இத்தகையவர்களே, 'வாழ்வு என்றால் என்ன ?' என்பதை - 'நமக்குப் பழக்கமான சமூகநிலை' என்று எண்ணி வருகிறோமே, அவ்விதமானதோர் அன்றாட வாழ்க்கைக்கு முற்றும் மாறான

ஒரு திவ்விய வாழ்வுப் பேறு இன்னதென - உணர்ந்திருக்கிறார்கள். 'உலகத்தோடு நாமும் ஒருசேர வாழ்கிறோம்' என்று எண்ணி நடத்தும் வாழ்வில், 'எந்த நேரம் என்ன நேருமோ?' என்ற பரபரப்பு இருந்துகொண்டேதான் இருக்கும். 'இதுவே செயல் நிறைந்து, பொருள் பொதிந்த வாழ்க்கை' என்றும் வெளிப் பார்வைக்குத் தோன்றும். ஆனால், வாழ்வை எதிர் நோக்கிச் சென்று சமாளிக்க முனைந்தவர்கள் கண்ட புதுநெறி, 'முன்பு வாழ்ந்த வாழ்வினின்றும் விடுதலை பெற்று என்றென்றும் நிலைத்து நிற்கும் பெருவாழ்வு உண்டு' என்பதை உணரும்படி தூண்டுகின்றது; அன்றாடம் பழக்கமான சூழ்நிலையின் எல்லைக்கு அப்பால் உள்ள வழியே வாழ்ந்திட நமக்கு அறிவுறுத்துகிறது. இந்தத் தீய சமூகபந்தம் முழுவதையும் அப்பால் இருந்து நோக்கும் நெறிமுறையாகும் இது; உண்மையான வாழ்வின் பேராற்றலை உணர்ந்திடுமாறு மனித இனத்தை அழைப்பது இது. இப்படி இதினின்று அறிய வேண்டியதை அறிந்து உள்ளூற இதன் பொருளை உணர்ந்து வாழவேண்டும். அத்தகைய பேரறிவு பெற்ற வாழ்வு அல்லாத எதுவும் வெறும் விலங்குகள் - மிருகங்கள் - வாழும் வாழ்வுக்குத்தான் ஈடாகும் — அதை நாகரிகம் என்றாலும் சரி, அநாகரிகம் என்றாலும் சரி!

ஞானதேவரது வாழ்க்கை வரலாறே இப்படி அப்பால் இருந்து உலகைக் கண்டுணர்ந்த ஜீவாத்மாவின் கதைதான். இங்ஙனம் தீவிர முயற்சியால் கண்ட ஞானநுபவம், இம்மையில் காணும் நிலையற்ற அநுபவங்களின் எல்லையைக் கடந்து, அமரத்துவம் பெற்று ஒளிரும் ஒன்றாகும். இத்தகைய திவ்விய அநுபூதியினால்தான் வேதநெறியைக் காட்டும் மனித நூலாகப் போற்றப்படும் 'பகவத்கீதை'யைப் பற்றிய விளக்கங்களை எடுத்துரைத்தார். இவ்வாறு ஒவ்வொரு நாளும் அவர் மொழிந்த அருள்வாக்கே ஏட்டில் எழுதப்பெற்று, கீதையைப் பற்றிய சிறந்த பேருரையாக அமைந்தது; 'ஓவி' என்னும் யாப்பு வகையைச் சேர்ந்த பாக்கள் தொள்ளாயிரம் கொண்டது இது. இந்த வகை யாப்பு லாகவமாய், சந்தக்கட்டும் அமைந்ததாய் உரைநடையின் ஆற்றொழுக்கையும், கவிதையின் கவர்ச்சியையும் கொண்டு விளங்குவது. இதற்கும் மற்ற விளக்கவுரைகளுக்கும் வேறுபாடு, இதன் தனிப் பண்பேயாகும். மூலத்திலுள்ள 'பகவத்கீதை'யில் வழங்கும் சம்ஸ்கிருதச் சொற்களுக்கும் வாக்கியங்களுக்கும் பொருள்மட்டும் தந்து சாரமற்றுக் காணும் வெற்று விளக்கமாகவோ, மெருகேற்றி (தாத்பர்யமாகக் கடுமையான தர்க்க ரீதியில் தம் தம்) சொந்தக்

கருத்துக்களைச் சுடச்சுட வெளியிடும் உரைநூலாகவோ இதைக்கொள்வதற்கில்லை. அதற்கு மாறாக, வியாசருடைய மூல (சம்ஸ்கிருத) நூலான பகவத்கீதைக்கு, எலும்பின்மீது சதைப் பற்றும் உள்ளே ரத்த ஓட்டமும் செலுத்தும் வகையில் விளக்கமாய் அமைந்த தனிப் படைப்பேயாகும் இது.

இவ்வாறு அமைந்த ஞானதேவரின் கீதை உரையினுடைய சாரமான அம்சம், மானிடனை (அல்லது நரனை) அர்ஜுனனுக்கும், மானிட வடிவில் வந்துள்ள கிருஷ்ணபகவானுக்கும் - பரம்பொருளான நாராயணனுக்கும்-இடையே மானிட வடிவில் நடைபெறும் சம்பாஷணையேயாகும்; மனித வாழ்வில் உள்ள பேராற்றலின் தன்மையினால் வலிமை பெற்று விளங்குகிறது இந்த உரையாடல். அர்ஜுனனது உள்ளத்தில் ஒரு பெரும் போராட்டம் மூண்டதால் கண்டதுண்டமாக எழுந்த வினாக்கள் அவை. வாழ்வு என்று மொத்தமாக எடுத்துக்கொண்டால், அதில் என்றென்றும் உள்ள அடிப்படைப் பிரச்னைகளைக் குறித்து நேரிய முறையில், நேரிய செயலால் அந்த வாழ்வின் பொருளை ஆய்ந்து அறிந்திட அமைந்த உரையாடலாகும். இப்படித் தொடங்கிய அது, எதிர்ப்படும் சூழ்நிலை என்னும் அக்கினி பரீட்சையில் ஈடுபட நேரிடுகிறது. முரண்பட்ட நிலையில், வாழ்வு தன்னைத் தானே இன்னதெனத் தீவிரமாக முனைந்து கண்டறிவது போன்ற அது, வாழ்வே முற்றும் ஒளிர்ந்து காண்பதையொத்த நிலையாகும். இப்படி ஒளிரும் வாழ்வாகும் ஜீவாத்மா அல்லது மானிடன் பெருவாழ்வாகும் பரமாத்மனைப் புத்தறிவொளி பெற்றுக் காண்கிறான். இங்ஙனம் ஊடுருவிப் பாயும் புத்தறிவொளியிடையே இறைவன் மேன்மேலும் மானிடப் பண்பு அமைந்தவனாகவும், மானிடன் மேன்மேலும் தெய்வத்தன்மை அமைந்தவனாகவும் தோற்றம் அளிக்கிறார்கள். போகப் போக இருவருக்குமிடையே வேற்றுமை நிலை நீங்கி இருவரும் ஒன்றும் நிலை ஏற்படுகிறது; அதற்குப்பின் இறைவனும் சரி, மானிடனும் சரி, வேறு பிரித்தறிய இயலாதபடி ஆகி விடுகிறார்கள். இருவரும் மறைந்து, வாக்கு அல்லது நாதம் மட்டுமே செவிப்புலனாகிறது - உண்மையின் வாக்குத்தான் அது!

ஞானேசுவரியை (பகவத்கீதைக்கு ஞானதேவர் அருளிய உரைதான் இது) எழுதி முடித்ததும் ஞானதேவர் மற்றும் ஒரு நூலை எழுதலானார். இது அளவில் சிறியதாக இருந்தாலும் உள்ளடங்கிய கருத்தில் பெரியது. இதற்குப் பெயர் 'அநுபவாம்ருதம்' அல்லது அநுபவ அமுதம். இது முழுக்க முழுக்கத் தனிச் சிறப்புள்ள மூல நூலாகும். ஈடு இணையற்ற ஆழ்ந்த கருத்தழகும், தத்துவச் சிறப்பும், என்றென்றும் நிலைத்து நிற்கும் அறிவுப் பெட்டகமுமாக ஒளிரும் படைப்பு.

இந்த இரண்டு நூல்களுமே ஞானதேவர் இயற்றிய முக்கிய நூல்களாகும். பிறகு 'சங்கதேவ பசஷ்டி'யையும், பரம பொருளிடம் அத்யந்த பிரேமை அல்லது பேரன்பினால் எழுந்த சுவைமிக்க 'அபங்கம்' என்ற பாடல்களையும் எழுதினார்.

இனி இந்த நூல்களில் அமைந்த கருத்துக்களை கவனிக்கலாம். முதலில் இத்தகைய அரிய நூல்களைத் தந்தருளிய அந்த மகாபுருஷருடைய அற்புதப் படைப்பாற்றலை எடுத்துக் கொண்டால், இவை இன்றும் உயிரும் உணர்வும் கொண்டு மராட்டி பேசும் லட்சக்கணக்கான மக்களின் உள்ளங்களில் எதிரொலிப்பதைக் காணலாம்; இத்தனைக்கும் அவர் இவற்றை இயற்றி ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகள் ஆகின்றன! தனிப்பட்ட முறையிலும் சரி, பிரார்த்தனைக் கூட்டங்களிலும் சரி, மக்கள் இந்த நூல்களினின்று, ஆழ்ந்த ஈடுபாட்டுடனும் பக்தியுடனும் பல பகுதிகளைப் பாடி வருகிறார்கள். இதை என்னென்பது? இத்தகைய அற்புதமான நூல்களைப் படைத்தவர் யார்? அவர் எத்தகையவர்? பதினெட்டு அல்லது பத்தொன்பதே வயதுக்குட்பட்டவர் அவர்! வரலாற்று ஆராய்ச்சியாளர்கள், ''ஞானதேவர் பதினைந்தே வயதில் ஞானேசுவரியை எழுதினார்'' என்கிறார்கள். இரண்டோர் ஆண்டுகளுக்கெல்லாம் 'அநுபவாம்ருத'த்தையும் எழுதி முடித்தாராம். மற்றவை அவருக்கு இருபது வயது ஆவதற்கு முன்பே இயற்றப்பட்டவை. பின்பு தம் இருபத்தோராம் வயதில் அவர் தம் இச்சையாகவே தம் இரு சகோதரர்களும் சகோதரியும் ஏராளமான அன்பர்களும் பக்தர்களும் கண்டு வியந்திட, மகாசமாதியில் ஆழ்ந்தார். ஆலந்தி என்ற ஊரில் உள்ள ஸ்ரீ சித்தேச்வரி கோயிலுக்கு அருகில் குகைபோல் தோண்டிப் பூமிக்கடியில் அமைந்த இடத்தில், மரத்தால் ஆன மேடையில் அசைவற்று, கண்மூடித் தியானத்தில் லயித்தார். அந்தஜீவாத்மா உடலை விட்டு, எவரும் காண இயலாதபடி வாழ்வு-மரணம் என்ற சிறகு படைத்துப் பரமாத்மனுடன் கலந்திடும் பறவையெனப் பறந்து சென்றது.

பதினெட்டு, பத்தொன்பது பிராயத்துக்குட்பட்ட ஒரு பிள்ளை, எழிலும் ஆழ்ந்த கருத்தும் அமைந்த இத்தகைய நூல்களை ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்கு முன் படைத்தார் என்றால் அது நம்மைப் போன்ற மக்களின் அறிவுக்கு அறைகூவல் விடும் அளவுக்குத் திகைப்பூட்டும் பேரற்புதமாக அல்லவா இருக்கிறது! ஞானதேவர் வாழ்ந்தார் என்பதும், அவர் இந்த நூல்களை இயற்றினார் என்பதும் ஐயத்துக்கு இடமின்றி,

யாவரும் ஒப்பிய வரலாற்று நிகழ்ச்சிகள்; அதனுல்தான் இதை எண்ணும்போது, இது உண்மைதான் என அறிந்து மேலும் வியப்புறுகிறேம்.

ஞானதேவர் உயிருடன் வாழ்ந்த மாமனிதர்களில் சிறந்து விளங்கிய ஒருவர் என்பது முற்றும் உண்மை என்றே படுகிறது. மனித வாழ்வில் என்றென்றும் இருந்து வரும் நிலேயான தன்மை, அறைகூவித் தன்னே உணர்ந்திடுமாறுஅழைக்கும்போது அதற்கு விடை அளிக்கும் முறையில் அமைந்தவை அவருடைய நூல்கள் ; (மனித அறிவுக்கு அறைகூவல் என அமைந்த) இவற்றைப் பதினேந்து முதல் பத்தொன்பது பிராயத்துக்குள் அவர் இயற்றினுர் என்ருல் இதிலிருந்து ஒன்று முடிவாகத் தெரிகிறது : 'இத்தகைய மெய்ஞ்ஞானம் அல்லது பேரறிவு ஒருவருடைய வயதையோ, வாழ்ந்த காலத்தையோ பொறுத்த தன்று' என்பதுதான் அது. ஒவ்வொரு தனி மனித உயிரிலும் இந்த அறிவு அமைந்துள்ளது. விலங்கு அல்லது மிருக இயல் புக்கும் சமூக வரம்புக்கும் குருட்டுத்தனமாகப் பணிந்திடும் போக்கு ஒரு புறமும், 'இந்த உலகில் சமூகம்-அரசியல் - நிலே யற்ற வாழ்வு இவற்றிடையே நாம் பெயரும் புகழும் 'மதிப்பும் பெற்று வாழவேண்டும் என்ற போக்கு மறு புறமும் மெய்ஞ் ஞானத்துக்குப் புறம்பானவை' என்ற உண்மையைக் கண்டறிந்து, இந்தச் சமூக பந்தம் நிலேயற்ற உலக வாழ் வென்னும் சிறையை விட்டு வெளியேறுவதுதான் விடுதலேக்கு - முக்திக்கு - முதல் அடிவைத்தது போன்றதாகும். ஆக்க பூர்வ மான மெய்ஞ்ஞானம் பிறப்பது இந்த விடுதலே அல்லது முக்தியினின்றுதான். இத்தகைய விடுதலேயையே வாழ்வில் மூச்சாகக் கொண்டு வெளிநடப்பதுதான், அப்பால் இருந்து எதையும் கண்டிட விழைபவனுக்குரிய லட்சணமாகும்.

ஞானதேவர் இப்படிப்பட்ட பந்தமற்ற நிலேயில் பிறந்து வளர்க்கப் பெற்றவர். அவருடைய தந்தை சொத்து எதுவும் இல்லாத ஏழை அந்தணர் ; என்ருலும், சாதுக்களின் வழி வந்தவர்; இறைவனிடம் பக்தி கொண்டவர். கி.பி. 1207-வாக்கில் ஞானதேவருடைய கொள்ளுப்பாட்டனுர் தரியம்பக் பந்த், மத்திய யுகத்து மகாராஷ்டிரத்தின் சமயம், பண்பாடு இவற்றின் கேந்திரமாக விளங்கிய பைடணிலிருந்து ஏறத்தாழ எட்டுக்கல் தொலேவிலுள்ள (தம் மூதாதையரின் ஊரான) ஆபேகாம் என்ற இடத்தை விட்டு, யாதவ அரசின் தலேநகரான தேவகிரிக்கு வந்து சேர்ந்தார். த்ரியம்பக் பந்த், நாத பந்த் என்ற குரு பரம்பரையைச் சேர்ந்த அத்யாத்ம (ஆன்மிக)

நெறியைக் கடைப்பிடித்த மகாபுருஷரான கோரக்நாத் என்பவரிடம் ஞானதீட்சை பெற்றவர். த்ரியம்பக் பந்தின் புதல்வர் கோவிந்த பந்த் ஞானதேவருடைய பாட்டனுர். கோவிந்த பந்தும் அவருடைய பத்தினி நிராயியும் 'நாத' என்ற அதே குரு பரம்பரையில் வந்த மற்றெரு மகானுன கஹிநீநாத் என்பவரிடம் ஞானதீட்சை பெற்ருர்கள். கோவிந்த பந்தின் புதல்வரும் ஞானதேவரின் தந்தையுமான விட்டல் பந்த் பிறவியிலேயே வைராக்கியம் (துறவு மனப்பான்மை) கொண்டவர். குழந்தைப் பருவத்திலிருந்தே அவர், உலக வாழ்வில் ஈடுபாடு இல்லாதவர். வாழ்வின் அடிப்படையான மெய்ஞ்ஞானத்தை உணர வேண்டும் என்ற தீவிரமான தாகம் அல்லது ஆர்வம் அவருக்கு இருந்தது. எனவே, அந்த ஞானமார்க்கத்தை அறிவுறுத்தும் பழைய நூல்களைப் பயின்ருர். ஒவ்வொரு புண்ணியத் தலமாக, தம்மை உய்விக்கக் கூடிய ஒரு சத்குருவைத் தேடிச் சென்றபடி இருந்தார். அப்போது புணே (புனு) நகரம் மத்திய யுகம், அதற்குப் பிற்பட்ட சமீபகாலம் இரண்டிலுமே சிறந்து விளங்கிய கல்வி-கலாசாரக் கேந்திரமாக இருந்தது. அந்த நாளில் புணேயிலிருந்து ஏறத்தாழப் பதினைந்து கல் தொலைவிலுள்ள ஆலந்தி என்ற கிராமத்துக்கு விட்டல் பந்த் போக நேர்ந்தது; அங்கே அவர் சித்தோ பந்த் குல்கர்ணி என்பவரின் விருந்தாளியாகத் தங்கினுர். இருவரும் நெருங்கிப் பழகலானுர்கள். அதன் விளைவாகக் குல்கர்ணி, தம் மகளான ருக்மிணியை விட்டல் பந்துக்கு மணம் செய்து கொடுக்க நேர்ந்தது. ஆனுலும் தம்மை நுட்பமாக ஈர்த்த அந்தச் சம்சார பந்தத்தில் - நிலையற்றுக் கட்டுண்டு வாழும் சமூக வாழ்க்கையில் சிக்கி உழலும் போக்கில்-ஏற்பட்ட விரக்தி காரணமாக, மெய்ஞ்ஞானத்தை உணர வேண்டுமென்ற அடங்கா ஆர்வம் அவரிடம் எழுந்தது. காசி நகரம் தொன்றுதொட்டும் சரி, அந்த மத்திய யுகத்திலும் சரி, எல்லாச் சமய நெறிகளும் கொண்டமைந்த முக்கிய கேந்திரமாக விளங்கியது. எனவே, அவர் அங்கே போவதாகச் சொல்லிவிட்டு ஆலந்தியை விட்டே கிளம்பிவிட்டார். காசியில் ஸ்ரீபாதஸ்வாமிகள் என்ற துறவியை அவர் காண நேர்ந்தது. விட்டல் பந்தை, ஸ்வாமிகள், தம் சீடராக ஏற்றுக் கொண்டார். விட்டல் பந்த் தாம் இன்னுர், தாம் மணமானவர் என்பதையெல்லாம் தெரிவிக்காமலே, தமக்குச் சந்நியாச தீட்சை அருளும்படி (அதுவரை இருந்த உலக பந்தங்களை விடுத்துப் பற்றற்ற நிலையிலிருந்து வாழ்வைக் காண வாய்ப்பு அளிக்கும்படி) குருவிடம் வேண்டினுர். இதனுல் பூர்வாச்ரமத்தில் விட்டல் பந்த் ஆக இருந்தவர் 'சைதன்யாச்ரமர்' என்ற

தீட்சா நாமம் பெற்ருர். உலகத்தைப் பொறுத்த வரையில் விட்டல் பந்த் என்ற மனிதர் இறந்து விட்டதாகவே கருதும் நிலே அது ; இப்படி ஊர் ஊராகச் சுற்றும் பரதேசியாக வாழும் வாழ்வை அவர் கடைப்பிடிக்கலாஞர்.

ஒரு சமயம் யாத்ரா மார்க்கத்தில் விட்டல் பந்தின் குரு ஸ்ரீபாதஸ்வாமிகள் ஆலந்திக்குப் போக நேர்ந்தது. அப்போது விட்டல் பந்தின் பத்தினியிடமிருந்து குருதேவருக்கு உண்மை விவரம் தெரிந்தது. கணவர் பிரிந்து சென்றதால், அவள் 'தெய்வமே துணே' என்று தன் விதியை எண்ணி மவுனமாகத் துன்பத்தை ஏற்றுக்காலந்தள்ளி வந்தாள், பாவம்! அவளது துயரக் கதையைக் கேட்டதும் குருதேவர் திடுக்கிட்டுப் போஞர். அந்த இளமங்கை தன் கணவரிடம் கொண்ட தூய்மையான ஆழ்ந்த அன்பைக் கண்டு வியந்து, தாம் காசி திரும்பியதும் விட்டல் பந்திடம், ''நீ துறவறத்தை விட்டு உத்தமியான அன்பு மனேவியிடம் போய்ச் சேர்'' என்று கட்டளேயிட்டார் ; ''பொய் சொல்லி ஏமாற்றி உன்னே நீ அறிந்திட முடியாது, தெரிந்துகொள்!'' என்றும் கடிந்து கொண்டார்.

விட்டல் பந்த் பாடு திண்டாட்டமாகிவிட்டது. இருந் தாலும், தம் குருவின் கட்டளேக்குப் பணிந்து போஞர். ஆஞல் வைதிக சமூகம் (ஆசாரத்தைக் கடைப்பிடிக்கும் பிராம்மண சமூகம்) உடனே விட்டல் பந்தை ஜாதியை விட்டு விலக்கியது. ஒருவன் சந்நியாசி ஆஞன் என்ருல், மறு பிறவி எடுத்தமாதிரிதான் ; உலகத்தைப் பொறுத்த வரையில் அவனது பழம் பிறவி நீங்கி அவன் இறந்தது போலத்தான். இப்படி 'இறந்த'வனேச் சமூகம் மீண்டும் ஏற்றுக்கொள்ளக் கூடாது. அவன் இல்லறத்தாஞக இராமல் அதற்கு அப்பால் - வெளியே - திரிய வேண்டியதுதான்!

விட்டல் பந்த் உண்மையாகவே இப்படி வெளியே தள்ளப் பட்ட நிலேக்கு வந்துவிட்டார். இருந்தாலும், அவர் தொடர்ந்து சாத்திரம் பயின்றுதான் வந்தார். கற்புடைய அன்பு மனேவியின் ஆதரவில் இப்போது 'தன்னேத்தான் அறியும்' ஆன்ம அநுபூதி நெறியை நாடி நின்ருர் விட்டல் பந்த். 'புத்தம் புதிய வகையில், சம்சாரத்தில் இருந்தபடியே அன்பும் துறவும் இணேந்திட வாழலாம்' என்ற உண்மையை உணர்ந்தார் ; அதஞல் ஆழ்ந்த அறிவு முதிர்ச்சி ஏற்பட்டது, அவருக்கு. குருட்டுத்தனமாக வாழ்வை வெறுப்பதோ, ஏற்பதோ இரண்டுமே நேர்வழியாகமாட்டா, அன்புடன் தன்னேத் தானே

அறிந்திட வேண்டும் என்ற தீவிர ஆர்வமும் இணைந்தால்தான் மெய்ஞ்ஞானம் கிட்டும், இதுதான் நேர்வழி என்பதே அது. இந்தப் புத்தம் புது வாழ்வின் விளைவாக நான்கு மக்கள் - மூன்று புதல்வர்களும் ஓர் அரும்புதல்வியும் - அவருக்குப் பிறந்தார்கள். இவர்கள்தாம் நிவ்ருத்தி, ஞானதேவர், ஸோபானர், முக்தா என்பவர்கள். தனிப் பிறவிகள் என்றே இவர்களைக் கூறவேண்டும். இவர்கள் வாழ்ந்தது சொற்ப காலமே என்றாலும், சுதந்தரமான சூழ்நிலையில் வளர்ந்து இறுதிவரையில் அப்படியே வாழவும் வாழ்ந்தார்கள். மாசு படுத்தி உள்ளத்தைச் சிறையில் அடைத்தது போன்ற சமூக நிலை, அதன் கட்டுப்பெட்டிப் போக்கு இவற்றினின்றும் விடுபட்ட வாழ்க்கை அது. இருபத்தைந்தே ஆண்டுக்குள்தான் இந்த ஞானக் குழந்தைகள் வாழ்ந்து மறைந்தார்கள் என்றாலும் எவ்வளவு காலம் ஆனாலும் அழிக்க இயலாதபடி மகாராஷ்டிர மக்களின் வாழ்வு, பண்பாடு இவற்றில் இவர்களது அநுபவ முத்திரை ஆழப் பதிந்துவிட்டதென்றே கூற வேண்டும்.

இவர்களில் மூத்தவரான நிவ்ருத்தி, தம் தந்தை ஏற்றி வைத்த அழியா ஆன்மிக விளக்கை ஏந்தி, மெய்ந்நெறி காண முந்தினார். ஒரு சமயம் இவரும் இவருடைய சகோதரர் சகோதரி இவர்களும் சிறு குழந்தைகளாக இருக்கையில், நாசிக்குக்கு அருகிலுள்ள புண்ணியத்தலமான த்ரியம்பகேச்வரம் சென்றிருந்தார்கள். அப்போது நிவ்ருத்தி யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் மகாதேவருடைய ஆலயத்தருகில் உள்ள மலைக் குகை ஒன்றினுள் சென்றார்; அவர் அங்கே தம்முடைய பாட்டனாருக்கும் பாட்டியாருக்கும் ஞானதீட்சை அளித்த குருநாதரான கஹிநீநாதரிடமே தாமும் தீட்சை பெற்றார். பின்னால் அதேபோல் நிவ்ருத்தியிடம் ஞானதேவரும், ஞானதேவரிடம் ஸோபானரும் முக்தாவும் ஞானதீட்சை பெற்றார்கள்.

ஞானதேவர் தீவிரமான பக்தியுணர்வு பொங்கத் தம் குருவும் மூத்த சகோதரருமான நிவ்ருத்தியைப் போற்றிப் புகழ்கிறார். ஞானதேவரின் வாழ்வும் அவரது சாதனைமார்க்கமும் எங்கும் பரிமளித்திடும் நிலையில் அந்த அருள்மொழிகளை யார்தாம் புறக்கணிக்க முடியும்? தாம் செய்வது, சொல்வது எல்லாமே அந்தக் 'குரு'வின் அருள்திறமே என்கிறார் ஞான்தேவர். இப்படி ஞானதீட்சை பெற்றதால், இந்த இரு சகோதரர்களின் ரத்த உறவு என்பது அறவே நீங்கி, இன்னதெனக் கண்டுணர இயலாத அற்புத குரு - சிஷ்ய

பாவம் அல்லது பரமாத்ம - ஜீவாத்ம நிலை என்னும் உறவு முறையாக அடியோடு மாறிவிடுகிறது ! வெளிப்படக் காணும் உறவுமுறை திடீரென ஆன்மிக உறவாகிவிடுகிறது ! எனவே தான் ஞானதேவர் நிவ்ருத்தியை ரத்த உறவினால் வந்த சகோதரர் என்று எங்கேயும் குறிப்பிடவில்லை. சாமான்யமான சகோதரபாவம் முற்றும் உருமாறி அம்ருதானுபவமாகி-அழியா அநுபவமாகி விளங்குகிறது.

'ஞானதீட்சை' என்றால் என்ன ? இந்தப் பேரற்புதத்தைக் குறித்து ஞானதேவரே ஓரளவு விளக்கியிருக்கிறார் : ''ஒரு ஜீவனுடைய பேராற்றல் மற்றொன்றுக்குள் பாய்ந்து ஒளிர்வதேயாகும் இது ; அதாவது, சிவ-சக்தி ஐக்கியம். ஓர் உள்ளத்தில் இருப்பதை மற்றொன்றில் பொருந்த வைப்பது 'அஹம்' அல்லது 'தான்' என்ற அகந்தையைத் 'தத்' அல்லது மற்ற 'அது' என்ற அகந்தையற்ற பொருள் விழுங்கிடும் நிலை இது. இந்த 'அஹம்', 'தத்' என்பவற்றுக்கெல்லாம் ஆழ்ந்த ஆன்மிகப் பொருள் உண்டு; பரிணாம நிலையில் மனிதன் அடியோடு மாறுவதைக் குறிப்பவை இவை ; அதாவது, பண்படுவதன்மூலம் மனிதன் என்பவன் உண்மையான சுதந்தர புருஷனாகிறான். தன்னைத்தான் முற்ற அறிந்திடும் பரிணாம நிலை இது.''

'ஞானதீட்சை' என்றால் ஏதோ வசியசக்தியால் மயக்கி வைப்பது என்றோ, ஆன்மாவை அடிமையாக்கிவிடுவதென்றோ அர்த்தமில்லை. மானிடர் ஒவ்வொருவரிடமும் உறங்கிக் கிடக்கும் ஜீவனின் ஆற்றலைத் தட்டி எழுப்பி விழித்திடச் செய்வது என்பதே அதன் பொருள் ; இந்த ஆற்றலே எங்கும் ஒளிவீசும் தனியொரு விளக்காகிறது. தான், தனது என்னும் சகல ஆசைகளையும் காரண பூதங்களையும் அறவே ஒழித்திடும் நிலையைக் குறிப்பிடுவது அது. அதனால் தூண்டப்பட்ட உணர்வு காரணமாக, விலங்கு அல்லது மிருக இயல்பு, சமூக மரபு வழியாகக் குவிந்துள்ள மாசு யாவும் உள்ளத்தினின்று அறவே அகன்றுவிடுகின்றன. 'நான்' என்ற அகந்தையைக் காட்டும் உணர்வை முற்றும் ஒழித்துவிட்ட அந்நிலையில் அந்த 'நான்' என்பதை வெறும் அநாமதேயப் பொருளாகவே கருதும் மனப்பாங்கு உண்டாகிறது (நஹிபநா). இப்படிப் பழக்கப் பட்டுவிட்ட மனநிலை அல்லது உணர்வுநிலை காரணமாகப் பழமை யாவும் இறந்தொழிந்து, தன்னையும் தான் இருக்கும் உலகையும் இன்னவை எனக் காணும் விழிப்பு நிலை ஏற்படு கிறது. கடந்துபோன யாவற்றினின்றும் விடுபெற்றுக் கால

எல்லை அனைத்தையும் மீறித் தன்னைத் தானே உணர்ந்திடும் உண்மையான அந்நிலையில் பேரறிவு கிட்டுகிறது.

ஞானதேவர் சொல்கிறார் : "என்னைப் பொறுத்தவரையில் இப்போது பழமையான 'ஞானம்' என்ற பேரறிவும், 'அஞ் ஞானம்' என்ற நிலையும் (பிறவியிலேயே கூட வந்திடும் குருட்டு உணர்வு அல்லது அறியாமையும்) ஆகிய இரண்டுமே அர்த்த மற்றவை. என் குருநாதர் (குருவே இறைவனுமாகிறார்) என்னை முழுமை பெற்றவனாக்கிவிட்டார்." (அநுபவாம் ருதம் - அத்தியாயம் 8) "எனவே, ஆத்ம அநுபூதியைக் காட்டும் ஞானதீட்சை என்பது என்றென்றும் உள்ள தன்னைத்தானே இன்னான் என அறிந்துகொள்ள மனிதனுக்குத் துணைபுரிவதாகும். இங்ஙனம் தன்னை இன்னான் என்று உண்மை யில் அறிந்தவன், 'மனித சமூகத்திடையே தூங்கி வழிந்து கொண்டு நிலையில்லாத எதிர்காலத்தில் புதியதோர் இன்ப உலகில் வாழப்போவதாகக் கருதுபவன் வீண் கனவு காண் கிறான்' என்பதை உணர்ந்திடுவான் ; என்றென்றும் விழிப்பு நிலையில் இத்தகையவன் இருந்திடுவான் ; அதனுடன் தன்னந் தனியே பற்றற்றவனாய் (உலகுக்கு) அப்பால் இருந்து எதையும் காண்பவனாக விளங்குவான்."

இப்படி அனைத்துக்கும் அப்பால் இருந்து காணும் தீர்க்க தரிசிகளின் (அல்லது மகாபுருஷர்களின்) அருள்மொழிகள், விலங்கு (அல்லது மிருக) இயல்பு, சமூக பந்தம் இவற்றில் கிடந்து உழலும் மனிதர்களை விழித்தெழச் செய்து எல்லா வகைத் தளைகளினின்றும் விடுபெறும்படி போதிக்கின்றன. சாமான்ய மனிதர்களையும், "சுதந்திர புருஷர்களாகி அப்பால் இருந்து உணரும் மெய்யறிவு பெற்றவர்களாய் நீங்களும் உண்மை மானிடர்களாக உலவுங்கள்" என்று அழைக்கின்றன. இத்தகைய ஞானிகள் ஒவ்வோர் இடமாகச் செல்லுங்கால், "தன் உண்மை நிலையை உணராத மனிதன் என்னதான் 'நாகரிக' வடிவெடுத்தாலும் வெறும் பித்தனே ; காட்டு மிருகத்தை யொத்தவனே" என்று முழங்குகிறார்கள்.

மனித வரலாறே போராட்டங்களின் பழைய விவரந் தான் ; சமூக - அரசியல் துறைகளில் குறிப்பிட்ட ஒரு வட்ட எல்லைக்குள் காணும் ஏதோ ஒன்றன்று அது. 'நம் மிருகத் தன்மை குன்றி, மேன்மேலும் நாம் மனிதத் தன்மை பெற்றிடு வோம்' என மக்களின் உள்ளங்களில் எழுந்திடும் பேருணர்வு தான் அது ; குருட்டுத்தனமான மிருக இயல்புகள் மாறிப்

பண்பாடு, படைப்பாற்றல் இவற்றின்மூலம் தன்னைத்தான் உணரும் விழிப்பு நிலையே அது ; மனிதனின் அந்தரங்கத்தில் ஏற்படும் பரிணமம் முழுவதுமே தன்னை உணர்ந்திடுவதாக அமைந்த வரலாறுதான் அது. இத்தகைய அற்புத மொழிகள் 'ஞானதேவரின் வாழ்வையும் அவரது சாதனையையும் நமக்குப் பேருண்மையை விளக்கும் வரலாற்றுச் சான்றுகள்' என்பதை நன்கு தெளிவுறுத்துகின்றன.

# அகத்துள் மூண்ட போரும் அருட்பேறும்

தந்தையான விட்டல் பந்தினுடைய வரலாறே (இந்திய மகான்களுள் மிக்க ஒளி பொருந்திய தாரகையாக விளங்கிய) ஞானதேவர் என்ற மலராக மலர்வதற்கு மூல காரணமாய் அமைந்தது.

மற்றச் சாதாரண மனிதர்களைப் போன்றவர்தாம் விட்டல் பந்த்; என்றாலும், தமக்கென ஒரு லட்சியம் உள்ளவர் அவர். அந்த நோக்கின்படியே உலகையும் கண்டார். ஆனால் அந்த நோக்கு மற்றவர்களுடைய நோக்கினின்றும் மாறுபட்டது. தாம் இன்னார் என்ற மெய்யுணர்வு ஏற்பட்டதுமுதல் மற்றவர் களோடு தமக்கு எவ்விதத்திலும் பொருத்தமில்லை என அவர் அறிந்தார். தன்னந்தனியே தாம் இந்த உலகில் எவருடனும் சம்பந்தமில்லாமலும், 'ஏதோ இவர்களிடையே பிறந்து விட்டோம் என்ற ஒன்றைத் தவிர எதன் பொருட்டும் நாம் வாழ்வதாகத் தெரியவில்லையே! நம் வாழ்வுக்கோ மற்றவர் களுக்கோ நம்மால் ஒரு பயனுமில்லையே!' என்பதை உணர்ந்த வராயுமே வாழ்ந்து வந்தார்.

'இது ஏன்?' என்ற அடக்க முடியாத ஒரு சிந்தனை அவரை உந்தியது. தம்மைத் தாமே அறிந்திடவும் இது ஊக்கியது. அவர் பல இடங்களுக்குச் செல்வார். அப்போதுதான் திடீரென அவர் மணம் புரிந்திட நேர்ந்தது; இனி வாழ்நாள் முழுவதும் தாம் தம் மனைவிக்குக் கட்டுப்பட்டு இருக்கவேண்டு மென்பதை அவர் உணர்ந்தார். இத்தகைய கட்டுண்ட நிலை ஏற்படவே, தமக்கு ஈடுபாடு இல்லாத சமூக மரபினோடு தாம் எவ்விதத்திலும் ஒத்துப்போக முடியாதபடி பொருத்தமற்று அவர் வாழ நேர்ந்தது. இந்தத் திருமணம் அவரது இல்லற வாழ்வைப் பொறுத்தவரை தோல்வியே. எனவே, அவருடைய மாமனாரும் மற்றும் தந்தை - தாய்வழி உறவினரும் 'இந்தத் திருமணம் இவரை ஒருநிலைப்படுத்தும்' என எதிர்பார்த்தது இவரைப் பொறுத்தவரையில் பலிக்கவில்லை. பல புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை போய் வருவதாகச் சொல்லி, அவர் தம் மனைவியை விட்டுப் பிரிந்தார். மீண்டும் பழையபடி தம்மைத் தாமே அறிந்திட வேண்டும் என்ற மெய்யுணர்வில்

ஈடுபட்டார். தாம் விரும்பியதுபோலவே ஒரு குருவும் இவருக்குக் கிடைத்தார். அந்தக் குருநாதர் இவருக்குத் துறவறத்தில் தீட்சை அருளினுர். முன் அத்தியாயத்தில் குறிப்பிட்டதுபோல், மீண்டும் இவர் இல்லற வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டியதாயிற்று; சம்சார சாகரத்தில் விழும் நிலேக்கு உள்ளானுர். இளமையும் கணவனிடத்தில் பக்தி சிரத்தையும் கொண்ட பத்தினிக்குத் தெரியாமலும், அவளது சம்மதம் இல்லாமலும் விட்டல் பந்த் துறவியானதை அவருடைய குரு அறிந்துகொண்டதால்தான் இப்படி மறுபடி அவர் சம்சாரியாக நேர்ந்தது! தூணியை விட்டுச் சென்ற அம்பு மீண்டும் தூணிக்கே வந்து சேர்ந்தால் எவ்வாறு இருக்குமோ அதுபோன்ற நிலேயே இது! காலம் இப்படிப் பின்னேக்கி வருவது அசாதாரணமல்லவா? இவ்வாறு விட்டல் பந்த், வைதிக மரபுப்படி வந்த இல்லறத்தின் நான்கு ஆசிரமங்களுக்கு அப்பாற்பட்ட 'இங்குமில்லே அங்குமில்லே' என்ற அவலநிலேக்குத் தள்ளப்பட்டார். சமூகமோ அவரை ஒதுக்கி வைத்துவிட்டது. துறவறத்தில் ஈடுபட்டவர்களும் அவரைச் சேர்த்துக்கொள்ளாமல் புறக்கணித்தார்கள். தம் அன்பு மனேவியிடமே வந்து சேரும் நிலேதான் ஏற்பட்டது அவருக்கு. சமூகத்தால் கிடைக்கும் பாதுகாப்போ, ஆன்மிக விடுதலே அல்லது முக்தி பெறத் துறவறத்தாரின் ஆறுதல் மொழியோ கிட்டாத இரண்டுங்கெட்டான் நிலே இது! இந்நிலேயில் தாமும் தம் மனேவியும் ஒருவரையொருவர் நம்பித்தான் ஆக வேண்டும், மூன்றும் பேர்வழி எவரையும் சார முடியாது என்ற ஒரு வரையறைக்கு அவர் உட்பட வேண்டியதாயிற்று. 'இதற்குள்ளேதான் நாம் நம்மை இன்னுன் எனக் கண்டறிந்துகொள்ள வேண்டும்' என்ற முடிவுக்கு வந்தார். இப்படி ஒரு நூதனமான உறவு தோன்றிட, தாமும் தம் மனேவியும் மட்டுமே பிற மூன்றும் ஒருத்தரின் துணேயே இன்றிச் சமூகத்தில் எவ்விதப் பாதுகாப்புமின்றி, 'தன்னேத்தான் அறிந்திடுதல் வேண்டும்' என்ற முக்திவழியை நாடும் பேரார்வத்துடன் இருந்தார். இருள் நிறைந்து, கருவின் நிலேயிலிருந்த ஓர் உலகு சிதைந்திடவோ, அல்லது புதியதொரு படைப்பு பரிணமித்திடவோ உள்ள ஒரு நிர்ப்பந்தமான மனநிலே அது!

விட்டல் பந்துக்கும் அவருடைய மனேவிக்கும் மற்றும் இவ்வுலகத்துக்கும் நல்லகாலம் போலும்! இருள் சூழ்ந்த கருவினேக் கொண்ட அவ்வுலகு-அவர் தம் உள்ளத்தில் கண்ட கற்பனே உலகு-சிதைந்திடாமல் அதியற்புதமான படைப்பாக மலர்ந்தது. அந்த உலகு, முதிர்ந்த அநுபவம் கொண்டதாக விளங்கியது; அதோடு, நான்கு அதிசயப் பிறவிகளான குழந்தை

கள்-மூன்று புதல்வர்களும் ஒரு புதல்வியும் - அந்தத் தம்பதிக்குப் பிறந்தார்கள். விட்டல் பந்திடம் இப்போது முற்றும் அறிந்த ஓர் உள்ளுணர்வு பொருந்தியிருந்தது. அதன் விளைவாக, அவர் அனைத்தையும் தெளிவுறக் கண்டார்; எனவே, தம் முதல் மகனுக்கு 'நிவ்ருத்தி' என்றும், இரண்டாம் மகனுக்கு 'ஞானதேவன்' என்றும், மூன்றும் மகனுக்கு 'ஸோபானன்' என்றும், கடைசிக் குழந்தையான மகளுக்கு 'முக்தி' என்றும் பெயரிட்டார். இதுபற்றி வரலாற்று ஆசிரியர்களிடையே இப்படிப் பல ஊகங்கள் எழுந்தன: 'இந்தப் பெயர்கள் உண்மையிலேயே உயிருடனும் உடலுடனும் வாழ்ந்த நபர்கள் என்பதைவிட வெறு குணங்களையே குறிப்பனவாகும்.'

'இவை வெறும் கற்பனைக்கும் அதற்கு மாறுன உண்மை விவரங்களுக்கும் இடையே ஊசலாடும் ஒரு சங்கட நிலையையே குறிப்பன. ஆன்மிக சாதனையில் மட்டுமே வெறும் குறியீடாகக் கொள்ள வேண்டிய இந்தப் பெயர்கள் உன்மையாகவே வாழ்ந்தவர்களின் பெயர்கள் இல்லை; உண்மையில் நாலு குழந்தைகள் இல்லை. விட்டல் பந்த் ஒருவர்மட்டுமே உயிருடன் வாழ்ந்தவர். அவர் ஜாதியைவிட்டு ஒதுக்கப்பட்டதால் தனியே வாழ்ந்து குழந்தைகுட்டி இராமலே காலமானுர்' என்பது இந்த ஊகங்களில் ஒன்று; எனவே, 'ஞானதேவர் இயற்றியதாக வழங்கிவரும் நூல்கள் யாவும் விட்டல் பந்த் எழுதியவையே' என்பதே இந்த ஊகத்திலிருந்து எழுந்த முடிவு.

ஆனுல் தக்க பல சான்றுகளைக் கொண்டு, நன்கு ஆராய்ந்ததன் விளைவாக இந்தக் கற்பனை ஊகத்தைப் பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் புறக்கணித்துவிட்டார்கள். இருந்தாலும், ''பதினைந்தே வயது பாலகரான ஞானேசுவரரால் வியத்தற்குரிய 'ஞானேசுவரி' போன்ற நூல்களை - 9000 பாக்களை-முதிர்ந்த அநுபவ ஞானமும் ஆழ்ந்த தத்துவமும் ஆன்மிகத்தில் ஊன்றி நன்கு உணர்ந்த நோக்கும் உடையனவாக எவ்வாறு இயற்ற முடிந்தது?'' என்ற வினு எழுகிறது. இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் காரணம், விட்டல் பந்தைக் குறித்து-இப்படி அவர் தம்மைத் தாமே அறிய விழைந்ததுபற்றி-ஆராய்ச்சியாளர் ஏதோ மேல்வாரியாக அறிய முற்பட்டதேயாகும். அவர் தாம் நாட விரும்பிய குறிக்கோளை பொருத்தமான முறையிலேயே நாடி அதில் நிறைவும் கண்டார். லோகாயதமான-(உலகரீதியான) அந்த வாழ்வில் சமுதாயத்துப் பெருந்தலைவர்களும் சரி, அதற்கு அப்பாற்பட்டதான ஆன்மிகத் துறையில் தலைமை பெற்று விளங்கியவர்களும் சரி, விட்டல் பந்துக்குப் பலத்த

எதிர்ப்புத் தெரிவித்த நிலையில், மற்றும் பல இடையூறுகளும் இருந்தபோது, அவர் இப்படி விழைந்தார் என்றால் பாருங்கள் !

'தன்னைத்தானே இன்னான் என்றறிய விழைவது - நிரந்தர உண்மையாக அதுவே மலர்ந்திடுவது - அன்றாடம் காணும் போக்குக்கு மாறாகத் தோன்றும் வெறுங் கற்பனையன்று' என்பதை ஆராய்ச்சியாளர்கள் எங்ஙனம் அறிவார்கள் ? அறிஞர் ஓர்ட்டேகோ குறித்துள்ளது போன்ற முறையில் விட்டல்பந்தின் வாழ்க்கை வரலாற்றை, கிடைத்துள்ள சொற்பத் தகவல்களின் துணைகொண்டு (அவை நம்பத் தகுந்தவையே) ஆழ்ந்து ஆராய்வோர், 'அவர் எத்தகைய தீவிரமான சோதனையில் ஈடுபட்டிருந்தார்' என்பதை எளிதில் புரிந்துகொண்டு பாராட்டவும் செய்வார்கள். முந்திய உலகரீதியான (லோகாயதமான) சமூக வாழ்வு வாழவும் இயலாமல், தம் விருப்பப்படி எதிர்காலத்தில் ஆன்மிக லட்சிய வாழ்வு வாழவும் இயலாமல் இருந்தார் விட்டல் பந்த் ! 'தான் யார்' என்பதை அவர் அறிய விழைகையில், நிகழ்காலத்துக்கு உட்பட்ட குறுகிய எல்லையிலேயே அவர் நிற்கவேண்டியதாயிற்று ; கடந்த காலமோ எதிர்காலமோ அதனுடன் தொடர்புடையதாக இல்லை. இந்தத் தீவிரமான சோதனைதான் அவருக்கு வாழ்வின் ஆழ்ந்த உட்கருத்தைக் கொண்ட வழிமுறைகளை உள்ளது உள்ளபடியே, தூய்மையாகவும் ஆதாரபூர்வகமாகவும் எடுத்துக்காட்டியது. இந்தவழிமுறைகளையே அவர் நிவ்ருத்தி, ஞானம், ஸோபானம், முக்தி என்று குறிப்பிட, இந்த முறையிலேயே அவருடைய குழந்தைகளின் பெயர்களும் அமைந்தன.

'நிவ்ருத்தி' என்றால் எந்தவிதப் பற்றினின்றும் விடுதலை பெறுவதுதான். அதாவது, ஞானதேவர் தம் 'அநுபவாம்ருத'த்தில் மிக அழகாக விவரித்துள்ளபடி, மனம் அதீத நிலையில் முற்றும் அமைதியுடன் விளங்குவது. 'ஞானம்' என்றால், திவ்வியமான மெய்யறிவு நிலை அல்லது முதிர்ந்த அறிவுநிலை என்று பொருள். இது ஒருவர் 'நிவ்ருத்தி' நிலையில் இருக்கும் போது ஏற்படுவது. 'ஸோபானம்' என்றால் ஏணிப்படி என்று பொருள். இது தன்னைத்தானே அறிந்திடும் முறையில் அமைந்தது ; திவ்விய ஞானத்தினால் உண்டாவது ; நித்திய வாழ்வு காண வகை செய்வது ; அதே சமயம் கண்டறிய இயலாத முழுமையான முக்தி நிலைக்கு வழிகாட்டுவது. 'முக்தி' என்றால் முற்றும் விடுதலை பெறுவது.

இந்த வழிமுறைகள் யாவும் ஞானதேவரால் தம் நூல்களில் - அவற்றுள்ளும் அவரது 'அநுபவாம்ருதம்' என்ற நூலில் -

அற்புதமாக விளக்கப்பட்டுள்ளன. ஆனால் இதனை ஏதோ ஊகத்தினால் தோன்றும் சித்தாந்தம் என்றோ, தத்துவக் கருத்துக்கள் திணிக்கப்பெற்ற கோட்பாடு என்றோ எண்ணி விடக் கூடாது !

ஒவ்வொரு நபரும் தீவிரமாக முயன்று செய்யவேண்டிய சாதனையாகும் இது. எப்போதும் விழிப்பு நிலையில் இருந்தவாறு வாழ்வு இன்னதெனத் தீவிரமாக அறியமுனைவது இது ; அன்றாட அநுபவத்தின்மூலம் அந்த வாழ்வினிடையே சுயம்பிரகாசமாக விளங்கும் மெய்ப்பொருளை அறிந்திடப் புரியும் மகத்தான சாதனை இது !

விட்டல் பந்த் தம்மைத்தாம் அறிந்திட மேற்கொண்ட இந்த நாலு வழிமுறைகளையும் குறிப்பிடத்தான் தமக்குப் பிறந்த நாலு குழந்தைகளுக்கும் இப்படிப் பெயரிட்டார்.

தம் குழந்தைகளைப்பற்றி மனம் போனவாறு என்ன என்ன வெல்லாம் அசாதாரணமான கற்பனை அல்லது கனவுகளில் ஈடுபட்டிருந்தாரோ, அவை நிறைவேறுவதைக் கண்டு வியப் புற்றார். இதனால் அளவற்ற மகிழ்ச்சி கொண்டார். அதன் விளைவாகத் தம் குழந்தைகளின் ரத்தத்திலேயேகூட—ஏன், உயிர் மூச்சிலுங்கூட — வாழ்வின் முழுக் கருத்தையும் அறிந்திடும் சுதந்திரமான போக்கு அமைந்திருப்பதைக் கண்டார். இப்படி அவர் உணர்ந்த உண்மைகள், கடந்தகால நிகழ்ச்சிகளால் பாதிக்கப்படவில்லை. எனவே, அவை என்றென்றும் புத்தம் புதுப் படைப்புகளாக மலர்வதற்குரிய நிலையில் இருந்தன. இப்படி உண்டான புது நம்பிக்கை காரணமாகத்தான் அவர், ஆசாரத்தையே வலியுறுத்தும் புரோகிதர்கள், குருமார்கள் இவர்களை நாடினார். தம் குழந்தைகளை மீண்டும் அந்தச் சமூகத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும் என அவர்களிடம் வேண்டிக்கொண்டார். ஆனால் விட்டல் பந்தை வாழ்நாள் முடிய ஜாதியை விட்டு விலக்கிவிட்ட அந்த வைதிகர்கள், ''இதற்குச் சாஸ்திரத்தில் என்ன தண்டனை விதித்திருக்கிறது, தெரியுமா ? சந்நியாசி ஆனவன் மறுபடியும் இல்லறத்தானாக மாறுவானானால், அவன் தன் உயிரைவிட்டுத்தான் ஆகவேண்டும் என்கின்றன'' என்றார்கள்.

விட்டல் பந்த் எதிர்பார்த்ததற்கு மாறாக இப்படி ஒரு பேரதிர்ச்சிதான் அவருக்கு ஏற்பட்டது. என்றாலும், அவர் தம் குழந்தைகள் நல்லபடியாக வாழவும், சமூகமும் மனித சமுதாயமும் சீர்குலையாமல் இருந்திடவும், அந்த வைதிகர்கள்

வழங்கிய தீர்ப்பைச் சிரித்த முகத்துடன் ஏற்றுக்கொண்டார். பிரயாகையில் கங்கை, யமுனை, ஸரஸ்வதி நதிகள் த்ரிவேணி என்ற பெயரில் ஒன்று கூடும் இடத்தில், நீரோட்டத்திலே வீழ்ந்து விட்டல் பந்த் தம்மையே மாய்த்துக்கொண்டார்; கூடவே அவருடைய மனைவியும் அந்த நீரில் மூழ்கி மாண்டாள்!

இது உண்மையில், சிலுவையில் அறையப்படும் மரண தண்டனைக்கு ஒப்பானதே. ஆனால் இரண்டுக்கும் ஒரு வித்தியாசம்: மெய்ப்பொருளை அறிந்திட மேலைநாட்டுப் பண்பாடு ஒருவிதமாகவும், கீழ்நாட்டுப் பண்பாடு வேறுவிதமாகவும் முனைந்ததுதான் அது. மேலைநாட்டுப் பண்பாட்டிலே சங்கடமான சூழ்நிலையில் ஏற்பட்ட மாறுதல், கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட நிகழ்ச்சி; நிலையற்ற உலக வாழ்வினின்று விலகி, ஆன்மிகம் அல்லது இறைவனை நாடி ஏங்கும் நிலை அது. கீழ்நாட்டிலும் இந்தச் சங்கட நிலையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. உள்ளத்தில் மெய்ப்பொருளை அறியும் நோக்குடன் மந்த்ரத்ரஷ்டாக்களான (மெய்ப்பொருள் தத்துவத்தை உணரக் கூடிய நிலையில் இருந்த) வேதகால முனிவர்களும், பௌத்த தீர்க்கதரிசிகளும் சிந்தனையில் முனைந்தார்கள். இப்படிக் கண்டிடுவது ஒவ்வொரு தனி மனிதனுக்கும் சாத்தியமே என்பதுதான் அவர்களது முடிபு. இது, அவரவர் தமக்கு இன்னது வேண்டும் என உள்ளூற விரும்புவதைப் பொறுத்தது. இப்படி விழையும் இந்த மனநிலை தானாகவே அமைத்துக் கொண்ட விருப்பு-வெறுப்புகளின் விளைவாக ஏற்பட்டதுதான். இந்த மனமே எல்லாத் துயரத்துக்கும் மூலகாரணம் என்ற இந்த உய்த்துணர்வு உண்டானதும், மனச் சஞ்சலம் சிறிது சிறிதாக ஓய்ந்து அடங்கிவிடுகிறது. காலச்சக்கரமே ஓய்ந்து நின்று மனிதனை உலகுக்கு அப்பாற்பட்ட எங்கோ ஓர் இடத்துக்கு இட்டுச் செல்வது போன்றது இந்நிலை. அப்போது அவன் தன்னைத்தானே அறியும் வாய்ப்புக் கிட்டுகிறது. நிலையான 'தான்' என்பது இன்னதென அவன் உணர்கிறான். இதுவும் ஒருவகையில் சிலுவையில் அறையப்படுவது போன்றதே. ஆனால் தன்னைப் பிறன் ஒருவன் அறைவது போன்றதன்று இது; உலகில், தான் வாழும் வாழ்விடையே பகுத்தறிவு அல்லது விவேகம் என்னும் கூரிய ஆயுதத்தால் தன்னையே மனமார வதைத்துக்கொண்டு உய்த்துணரும் நிலையாகும் இது. கிறிஸ்து பட்ட துன்பம் தெய்விக அநுபவத்தைக் குறித்த உபதேசமாக இருக்கிறது. ஆனால் கீழ்நாட்டுப் பண்பாட்டில் தன்னைத்தானே வருத்திக்கொள்ளும் நிலை, தெய்விக அனுபவம் என்ற நிலைக்கும் அப்பாற்பட்டதாய் விளங்குகிறது. இப்படி

அப்பாலும் காணும் அநுபவம் அவசியமான ஒன்ருகும் என்பதைக் கீழ்நாட்டுத் தீர்க்கத்தரிசிகள் உணர்ந்தார்கள்... இந்த உலகவாழ்வில் ஓர் எல்லேக்குள் கட்டுப்பட்டுக் குழப்ப நிலேயில் நின்றுவிடுகிறது, தெய்வத்தைக் குறித்த அநுபவம் பற்றிய பேச்சு. ('தெய்வம் பற்றிய உபதேசமும் அதற்கு அப்பாலும்' என்ற நூலேக் காண்க - எழுதியவர் : ட்ராய் ஆர்கன் ; க்வெஸ்ட் பத்திரிகை, அக்டோபர் - டிசம்பர் 1970).

கீழ்நாடு, மேல்நாடு இரண்டுக்கும் இடையே, மெய்ம்மை காணும்நோக்கில் உள்ள இந்தவேற்றுமையைநாம்எப்போதும் கருத்தில் கொண்டாக வேண்டும். இதனே உணராத நிலேயில், மானிட உலகில் காணும் பேராற்றல்களே அறிய ஞானதேவர் அருளியுள்ள அமரத்தன்மை வாய்ந்த உபதேசங்கள் விளங்க மாட்டா. உலகமரபுக்கும், பழைய ஆன்மிக மரபுக்கும் அப்பாற்பட்டு விட்டல் பந்த் ஆற்றிய சாதனேயினுல், தம்மைத் தாமே வதைத்துக்கொள்ளும் நிலேக்கு அவர் ஆளாஞர். தம் குழந்தைகளின்மூலம் படைப்பாற்றல், கட்டுப்பாடின்றி மலர இது துணே புரிந்தது. 'இதன் வாயிலாக மானிட உலகம் முழுவதும் என்றேனும் ஒருநாள் நிச்சயமாக உண்மை ஒளி இன்னதென உணர்ந்திடும்' என்பது அவரது நம்பிக்கை.

விட்டல் பந்த் இப்படி 'ஸ்வ ஸம்வேத்யா' என்ற (தம்மைத் தாமே அறியும்) நிலேயை எய்திஞர். இது பிறப்பு - இறப்பு என்னும் பரிணும வட்டத்துக்கு அப்பாற்பட்டதாகும். இந்த அரும்பண்பு மெய்ப்பொருளாம் இறைவனேக் காண்பதற்கு இன்றியமையாத ஒன்ருகும். உடலுக்கு உணர்வும் உயிரும் ஊட்டும் ரத்த ஓட்டம் போன்றது இது. வேதசாஸ்திரங்கள், பௌத்த நூல்கள் இவற்றின்படி இந்த விழிப்பு நிலேயே மிகச் சிறந்ததும் விலேமதிக்க வொண்ணுததுமாகும்.

தம் தாய் தந்தையர் பணயமாகத் தம் உயிரையே அர்ப் பணித்த (அறைகூவலே யொத்த) இந்த மகத்தான லட்சியத்தைச் சிரமேற்கொண்டார் ஞானதேவர் ; தம் தமையஞர் என்ற முறையைக் கைவிட்டுக் குருவாகவே நிவ்ருத்தியை ஏற்றுக் கொண்டார். அப்போது நிவ்ருத்தியிடம் ஞானதேவர், "இந்த மகத்தான லட்சியத்தின் உட்கருத்தை இறுதிவரையில் தொடர்ந்து கண்டறிந்திட வேண்டும் - அது எவ்வளவு கஷ்ட மானதாக இருந்தாலும் சரி" என்று கேட்டுக்கொண்டார்.

இந்த அறைகூவலேயும்சமூகத்தையும்பற்றிய சர்ச்சையையும் கைவிட்டு விடவேண்டுமென்று நிவ்ருத்தி அப்போது சொன்ஞ

ராம் ; என்றாலும், முடிவில் ஞானதேவரை அவரது விருப்பப் படியே நடந்துகொள்ள அநுமதித்தாராம்.

தம்மையே மாய்த்துக்கொண்ட தியாக சீலரான விட்டல் பந்தின் நாலு அற்புதக்குழந்தைகளும் வைதிகர்களிடம் சென்று, ''முன்போலவே எங்களுக்கு உங்கள் மரபின்படியும், சமூக மரபின்படியும் வாழ உரிமை தரவேண்டும்'' எனக் கோரினார்கள். ஞானதேவரே முன்நின்று வாதாடினார். அதன் விளைவாகத்தான் அவர் இப்படித் தம் கருத்தை வெளியிட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது :

''நீங்களோ தர்மாதிகாரிகள் ; அனைவரும் உங்களை மதித்துப் போற்றுகிறார்கள். அப்படி இருந்தும் எங்கள் தந்தையை அவரது வாழ்நாள் முழுவதும் சமூகத்தில் 'மகாபாபி' என்பது போல் ஒதுக்கிவைத்து விட்டீர்களே ! அவர், நீங்கள் இட்ட கட்டளையை ஏற்றுக்கொண்டும் அவரை விலக்கியே வைத்தீர் கள். இத்தனைக்கும் தாமே தம்மிடம் குறைகாணும் அளவுக்கு தம் மனச்சாட்சிக்கு மாறாக நடக்காதவர் அவர்.

''நீங்கள் விதித்த கடுந்தண்டனையை ஏற்று, அவர் தமக்காக ஏதும் வேண்டுமென்று விரும்பாமல், எங்களுக்காக - எங்களை மீண்டும் வைதிக சமூகத்தில் ஏற்றுக்கொள்ளும்படி - உங்களை வேண்டிக்கொண்டார். தர்மாதிகாரிகளான நீங்களோ அதற்கும் மேலே போய், அவர் செய்யாத பாவத்துக்காகத் (துறவறம் பூண்டபின் மீண்டும் இல்லறத்துக்கு மாறியவர் என்ற காரணத்தால்) தம் உயிரையே கூட மாய்த்துக்கொள்ள வேண்டும் என்ற மிகக் கடுமையான தண்டனையை விதித்தீர்கள். அவரும் அப்படியே தம் உயிரைப் பணயமாக வைத்தார். ஆனால் இதோ அவர் பிராயச்சித்தம் செய்துகொண்டபின்னும், 'எங்களை நீங்கள் மீண்டும் ஜாதியில் சேர்த்துக்கொள்ள வேண்டும்' என்று கேட்கும் இப்போதும் ஏன் தயங்குகிறீர்கள் ? தர்மம் என்பது உண்மையை நிலைநிறுத்துவதேயாகும். அப்படி நீங்கள் நடந்துகொள்ளாதிருப்பது பொருத்தமா ?'' என வாதாடினார்.

வைதிக புரோகிதர்களால் ஞானதேவரின் வாதத்திறமையை மறுத்துக் கூற முடியவில்லை என ஆதாரபூர்வகமான தகவலி லிருந்து தெரிகிறது. அப்படி இருந்தும் அவர்கள், அற்புத ஆற்றல் படைத்த அந்தச் சிறுவரிடம், ''நீங்கள் நாலுபேரும் தூய்மையாக வாழ்ந்து வருகிறீர்கள் என்பதற்கு அத்தாட்சி காட்ட முடியுமா?'' என்றார்கள். அதோடு, ''உன் தந்தை தன்

உயிரைப் பணயமாக வைத்துத் தன்னை மாய்த்துக்கொண்டு தன் தூய்மையை உலகம் அறியும்படி செய்தது உண்மைதான் என்று நீ நம்பும் பட்சத்தில், உன் ஆற்றலைக் காட்டு, பார்ப் போம்'' என்றும் கிண்டினார்கள். அப்போது ஞானதேவர், ''நீங்கள் என்ன வேண்டுமோ கேளுங்கள்; பகவானுடைய அருளால் அப்படியே செய்வேன்'' என்றார்.

அவர்கள் அப்போது அந்தப் பக்கமாகப் போய்க்கொண் டிருந்த எருமைக்கடா ஒன்றைக் காட்டி, ''இந்த எருமைமாடு வேதம் ஓதும்படி நீ செய்வாயா?'' என்றார்கள். அவரும் அந்த எருமைக்கடாவைத் தட்டிக் கொடுத்து அது வேதம் ஓதும்படி செய்து காட்டினாராம்; அதிசயமாக இல்லையா?

இது உண்மையோ, கட்டுக்கதையோ எதுவாக இருந் தாலும் சரி ஆழ்ந்ததோர் உட்கருத்தை வெளியிடுவதாகும். இப்படிப் பழைய மரபில் ஊறிய சமயத்தையும் அதனை முரட்டுப் பிடிவாதத்துடன் கடைப்பிடித்த தர்மாதிகாரிகளான வைதிக புரோகிதர்களையும் பலரும் பார்த்து, ''சீச்சீ!'' என்னும்படி ஞானதேவர் அவர்களது மதிப்பைத் தவிடு பொடியாக்கி விட்டார்! அதன் விளைவாக, 'ஞானதேவரும் பழைய வைதிகக் கிரியைகளைக் கடைப்பிடிக்கும் மரபினைச் சேர்ந்தவர்தாம்' என்று சிலர் அவரை வைதிகராகக் காட்டுகிறார்கள்! இத்தகைய வர்களுக்குத் தாம் பேசுவது இன்னதெனப் புரியவில்லை என்று தான் கூறவேண்டும்!

இப்படிப் படுதோல்வி அடைந்து கேலிக்குள்ளான அந்த வைதிக புரோகிதர்கள், 'விட்டல் பந்தின் நாலு குழந்தைகளும் தம் தந்தைக்கு ஏற்பட்ட மாசினின்று (சந்நியாசி யாக இருந்தவர் பின்னால் சம்சாரியாகிப் பிள்ளைகளும் பெற் றார் என்பதுதான் அது) நீங்கியவர்கள்' என்று அறிவிக்க இசைந்தார்கள். இருந்தாலும், அதே சமயம், அவர்களால் தங்கள் முரட்டுப்போக்கையும் அற்பத்தனத்தையும் விட்டுவிட இயலவில்லை. அப்போதும் தாங்கள் எழுதித் தந்த 'சுத்தி பத்திர'த்தில் (தூய்மையானவர்களே இந்த நாலு குழந்தைகளும் என்ற ஒப்புதல் ஓலையில்) ''இவர்கள் நாலுபேரும் மணம் புரிந்து கொண்டு வம்சவிருத்தி செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் இந்தச் சமூகத்தின் தூய்மை கெட்டுவிடும்'' என்றுதான் குறிப் பிட்டிருந்தார்கள்!

இந்துமதம் எவ்வளவு இழிநிலைக்கு அந்நாளில் வந்து விட்டது என்பதற்கு இந்த நிகழ்ச்சி ஒன்றே போதாதா?

இதனால் தமக்கு விளைந்த வேதனை காரணமாக, ஞானதேவர், இறுதியில் கருணை கசிந்திடும் சிறந்த மனிதாபிமானியாக விளங்கலானார். துன்புறும் மனித சமூகம் உய்யவேண்டுமென்ற அவரது இந்த ஆர்வந்தான், தானாகவே மலர்ந்த ஒரு புதிய படைப்புக்கு வழி வகுத்தது. தர்மம் என்றால் என்ன என்ற நூதனமான நோக்கு - நிலைபெற்ற வாழ்வு இன்னதெனக் காணும் திவ்விய நோக்கு அது; ஞானதேவருடைய இலக்கியப் படைப்புகள் யாவற்றுக்கும் அடிப்படையாக அமைந்தது இந்த நோக்குத்தான்.

விட்டல் பந்திடம் தொடங்கி ஞானதேவருடன் முடிந்த இந்த அகப்போரே அருட்பேறாகப் பரிணமித்தது. இதுவே அவருடைய அற்புதமான - ஆக்கம் பொருந்திய - நூல்களில் சுடர்விட்டு ஒளிர்கிறது.

# ‘ஞானேசுவரி’

சுத்தி பத்திரத்தைப் பெற்றுக்கொண்ட பின் ஞானேசுவரர் ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் பைடணில் தங்கியிருந்தார். அங்கேதான் முன்சொன்ன நிகழ்ச்சி நடந்தது. பைடண் அப்போது வேத அத்தியயனம் செய்வதற்கு உரிய மையமாக விளங்கியது. மகாராஷ்டிர புரோகிதர்களின் தலைமை இடமாக அது இருந்து வந்தது. அவர்களைத் தோற்கடித்தபின் ஞானேசுவரர் அவர்களிடமிருந்தே மிகப் பணிவுடன் என்ன என்ன கற்க முடியுமோ அவ்வளவும் கற்றுத் தேர்ந்தார். இதற்கு மூன்று ஆண்டுகள் ஆயின.

பிறகு அவர் அங்கிருந்து ஆலந்திக்குக் கிளம்பினார். தமையரான நிவ்ருத்தி, தம்பி ஸோபானர், தங்கை முக்தா இவர்களுடன் தம் தாயின் பிறந்த ஊரான அந்த ஆலந்திக்குச் சென்றார்.

ஆனால் பைடணை விட்டுக் கிளம்பியதிலிருந்து ஞானேசுவரர் மனக் கொந்தளிப்புடன் காணப்பட்டார். பழமையான நம் வேதத்தில் மறைந்துள்ள அரும்பெரும் ஞான நிதிக்கும், பண்டை மரபில் ஊறி இருந்த காரணத்தால் வேததர்மத்தைப் பேணுவோராக மக்கள் மதித்துவந்த தர்மாதிகாரிகளின் மட்டமான மனப் போக்குக்குமிடையே உள்ள பெருத்த மாறுபாடு அவரைப் பெரிதும் கலங்க வைத்தது. ஆனால் ஆலந்திக்குச் செல்லும் வழியில் ‘நேவாஸே’ என்ற ஊரில் தங்கினார். அங்கே தம் குருவான நிவ்ருத்தியிடம் பணிவுடன், ‘‘தர்மத்தை, அதன் பழமையான தூய்மை, அழகுப் பொலிவுடன் மக்களுக்கும் உலகுக்கும் விளக்க எனக்கு அநுமதி தாருங்கள்’’ என்று கேட்டுக்கொண்டார். நிவ்ருத்தியும் அதற்கு இசைந்தார். ஞானேசுவரர் வேததர்மத்தை விளக்க, பகவத்கீதையை எடுத்துக்கொண்டார். காரணம், வைதிக மரபினர் உயரிய வேத நெறியை உருத்தெரியாமல் சிதைத்து மட்டமாக்கியிருந்ததுதான்!

ஆதிசங்கரர் தம் பாஷ்யம் அல்லது பேருரையை அருளியதுமுதல் பகவத்கீதைக்குத் தனிச் சிறப்பு ஏற்பட்டிருந்தது. வேதநெறியின் சார நூலே கீதைதான் என்ற பெருமை

யும் ஏற்பட்டதே அதற்குக் காரணம். அதற்குப்பின் கீதைக்குப் பல்வேறு உரைகளைப் பலர் இயற்றினர்கள். இப்படிப் பின்னால் வந்த உரை ஒவ்வொன்றும், தாம் தாம் குறிப்பிட்ட விளக்கந் தான் சரியானது, மற்ற உரைகளில் காணும் கருத்துக்களை ஒதுக்கிடவேண்டும் என வலியுறுத்தியது. இதனால், பெருங் குழப்பமும், பிளவுகளும் மிகுதியாயின. எனவே, வேதநெறி முழுவதற்குமே இழுக்கு நேர்ந்தது. இதன் விளைவாக, வேத நெறிக்கும் புறம்பான ஜைனம், லிங்காயத்து நெறி, மகாநுபாவ மார்க்கம் போன்றவை மேலோங்கின. அவை பலரைத் தத்தம் நெறியில் ஈர்த்துச் சீடர்கள் ஆக்கிக்கொண்டன. மொத்தத்தில் பொதுமக்களிடையே அவை செல்வாக்குப் பெறலாயின. அவற்றுள் முக்கியமாக, மகாநுபவ மார்க்கம், மராட்டி பேசும் மக்களிடையே வெகுவாகப் பரவியது.

இங்கே ஒன்றைக் குறிப்பிட்டாக வேண்டும்: மேலை நாட்டில் 'மதம்' என்ற கருத்துப்பட அமைந்த சமயக் கோட்பாட்டை நம் 'தர்மம்' என்பதோடு ஒப்பிடுவதற்கில்லை. 'புவி ஈர்ப்புச் சக்தி' என்ற ஒரு விதி உலகம் முழுவதும் பொருந்தியிருப்பது போல வேதக் கருத்துப்படி அமைந்த தர்மம் என்பது பிரபஞ்சம் முழுவதும் பரந்த வாழ்வென்னும் விதியுடன் பொருந்துவதாகும்; ஆனாலும் இத்தகைய பொருத்தம் பொதுப்படையில் ஒன்றுபோலத் தோன்றினாலும், புவி ஈர்ப்புச் சக்தி என்பது, பௌதிக ஆற்றல் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு இயங்குவது; 'தர்மம்' என்பதோ ஜீவசக்தி அல்லது நீடித்த வாழ்வின் ஆற்றலைக் குறிப்பதாகும். முன்கூறிய புவி ஈர்ப்புச் சக்தி, இரண்டாம் பட்ச விதியாகிய வெப்பத்தாலும், இயந்திர இயக்கம் போன்ற செயற்கைச் சக்தியாலும் விளையும் ஆற்றல்; இந்த ஆற்றல் ஒரேமாதிரியாக அமைந்து நின்றுவிடும் போக்குள்ளது. ஆனால் தர்மம் என்பது குறிக்கும் ஜீவ ஆற்றலோ, பௌதிகமான வெப்பம், இயந்திர இயக்கம் போன்ற ஆற்றலைப் போலன்றி, அதற்கு மாறான முறையில் செயல்படுவது. இந்த ஜீவ ஆற்றல் எல்லாப்பொருள் களின்மூலமும் செயல்படுவது என்றாலும், அதனால் பாதிக்கப் படாதது; அதற்கும் அப்பாற்பட்ட ஒன்றாகும். வேதம் விதித்த படி, இந்தப் பிரபஞ்சம், ஒரேமாதிரியான அமைப்புடன் நின்றுவிட்டால், மகாப்பிரளயம்-அதாவது, ஜீவ ஆற்றல் - தோன்றி அந்தப் பிரபஞ்சத்தை மீண்டும் படைக்கிறது. ஜீவ ஆற்றல் என்பது எப்போதும் புதுமையுடன் பொலிவது; கணந்தோறும் தன்னைப் புதுப்பித்துக் கொள்வது. இந்த ஜீவ ஆற்றல் என்னும் விதி, நிலையான முக்தி அல்லது விடுதலையை

உணர்த்துவதாகும் ; அதோடு எப்போதும் புதிய புதிய படைப்பு களை அமைக்கவல்லது.

இதுதான் 'தர்மம்' அல்லது பிரபஞ்சம் முழுவதும் பரவி விளங்கும் ஆத்மனின் (ஜீவனின்) விதியாகும். இது இன்ன வரலாறு உடையதென்றோ, இன்ன இடத்தைச் சார்ந்ததென்றோ அறுதியிட இயலாதது ; மனிதனிடம் விடுதலை வாயிலாகவும் புதிய படைப்பின்மூலமாகவும் இது செயல்படுகிறது. இவ்வாறு இது, பலவகைப் பண்பாடுகளைத் தோற்றுவிக்கிறது. எந்தப் பண்பாட்டிலும் இது ஒட்டாமல் சுதந்திரமாகப் புதுமையுட னேயே விளங்கி, மேலும் புதிய பண்பாடுகளைத் தோற்றுவிக் கிறது. ஆனால், மனிதன் தன்னிடம் இயங்கும் ஜீவ ஆற்றலை அறியாததாலும் அதன் தன்மையை உணராததாலும் தன்னை 'இந்தப் பண்பாட்டைச் சேர்ந்தவன்', 'அந்தப் பண்பாட்டைச் சேர்ந்தவன்' என்று சொல்லிக்கொள்கிறான். இதனால்தான் சுதந்திரமாகச் செயல்படும் தன்மையையும், படைப்பாற்றலையும் இழந்துவிடுகிறான். இதையே கீதை, 'தர்மத்துக்கு நேரும் இழுக்கு நிலை' என்று கூறுகிறது. ஜீவ ஆற்றலின் சாரத்தை உணராதது காரணமாகச் சோர்வு மனப்பான்மை, மந்த நிலை' ஓய்ச்சல் இவை ஏற்படுகின்றன.

தர்மத்துக்கும், மதக்கோட்பாட்டுக்கும் உள்ள வேற்றுமை இதுதான் : எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்ட ஏதோ ஒன்று-, 'கடவுள் அல்லது பிரம்மம் (பரம்பொருள்) என்ற ஒன்று உள்ளது. அது மனிதனையும், உலகத்தையும் ஆட்டிப்படைக்கும் வல்லமை உள்ளது' என்ற உணர்வு மனிதனிடம் இருப்பது தான் அது. 'ஒவ்வொரு பொருளினுள்ளும் உறைவது அது ; மற்றும் ஒவ்வொன்றோடும் அதற்குத் தொடர்பு உண்டு, எனலாம். மதக் கோட்பாட்டின்படி பார்க்கும்போது மனிதனுக்கும் உலகுக்கும் அப்பாற்பட்டுத் தன்னந்தனியே ஒட்டாமல் உள்ள தெய்வத்தன்மையை மட்டுமே அது குறிக்கிறது.

'தர்மம்' என்பது என்றென்றும் மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ளதொடர்பை எடுத்துரைக்கிறது. அந்த நிலையில் கீழ்நாடு, மேல்நாடு இவற்றில் காணும் 'தான்' என்ற அகந்தையையே வலியுறுத்தும் பண்பாடுகளுடன் பொருந்தாத ஒன்றாக விளங்கு கிறது இந்தத் 'தர்மம்'. இது வலியுறுத்தும் போதனைகளில், 'இறைவன் மனிதனாக அவதரித்தான் ; அவன் புராண புருஷன்' என்றெல்லாம் எடுத்துரைக்கும்போது, 'இது ஏதோ கற்பனை ஒன்றுக்கு ஒன்று முரணான பேச்சு' என்று படுவதற்கு, அந்த

இறைவனின் தன்மையை விளக்குதற்குரிய சொற்கள் மனிதனிடம் ஓரளவுக்கு மேல் இராததே காரணமாகும். 'அநிர்வசனீய'' மானது (சொல்லாற்றலுக்கு அடங்காதது) இறைவனின் ஆற்றல் என்பார்கள் இதனை. வேதசாஸ்திரங்களில் காணும் அறிவுரைகளை, அப்படியே சொல்லுக்குச் சொல்லாகவோ தர்க்க வாதரீதியாகவோ விஞ்ஞான நோக்கிலோ கொள்ளக்கூடாது. உள்ளது உள்ளபடியே அதனை உணர்ந்திட வேண்டும். இப்படி யெல்லாம் சொல்கிறேனே என்று நீங்கள் வினவலாம். தற்காலத்தில் புழங்கும் தத்துவரீதியான முறையோடு நான் குறிப்பிடுவது பொருந்தி வராததுதான். ''நான் இருக்கிறேன்'', ''இந்த உலகம் இருக்கிறது'', ''ஒன்றுக்கொன்று சம்பந்தமுண்டு'' என்றெல்லாம் எளிமையாகக் குறிப்பிடுவது அவற்றுள் பொதிந்த ஆழ்ந்த கருத்தையும் உள்ளடக்கிய முறையில்தான்; ஏன் ஆழ்ந்த கருத்துள்ள சொற்கள் என்கிறேன் என்றால், அதனால் சில வினாக்கள் எழும்; ''நான் என்பது யார்?'', ''உலகம் என்பது என்ன?'', ''நான், உலகம், வாழ்வு'' என்றெல்லாம் சொல்லும்போது எதனைக் குறிப்பிடுகிறேன்?'' என்பன போன்ற அடிப்படையான வினாக்கள் அவை. இப்படிப் பல வினாக்களை மனிதன் தனக்குள் தானே கேட்டுக்கொள்ளும்போது அவற்றில் அடங்கிய உட்பொருளின் பெருமையை எண்ணி வியக்கத்தான் வேண்டியிருக்கிறது. இதனால் அவன் அசைவற்று, மவுனியாகி விடுகிறான்; என்றாலும், மிகவும் நுட்பமான விழிப்பு நிலையிலும் எதையும் உணரும் நிலையிலும் இருக்கிறான்.

'தர்மம்' என்பது, '' 'நான்', 'உலகம்' என்ற இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையவை. வெறும் கருத்துக் களாலோ, சொற்களாலோ இயற்கை முழுவதையுமோ அதன் அமைப்பையுமோ உணர்ந்திட முடியாது'' என்னும் பொரு ளுடையது. இவ்வாறாகச் சொற்களால் விவரிக்க முடியாத ஆழ்ந்த ரகசியப் பண்பைக் கொண்ட ஓர் உறவே தர்மம் அல்லது பிரபஞ்ச வாழ்வின் விதியை உணர்த்துகிறது. இத்தகைய பின்புலம் அல்லது அடிப்படையை ஆதாரமாகக் கொண்டுதான் வேதங்கள், உபநிடதங்கள், கீதை, ஞான தேவரின் வாக்கு இவற்றை நோக்க வேண்டும். 'நான்', 'அது' என்பதன் உட்பொருளை, 'நான்' (அஹம்) 'நீ' (த்வம்) என்று மவுனமான தியான நிலைமூலம் உணர்ந்து வெளியிடும் அருள் மொழிகளே அவை. பிரம்மன், ஆத்மன், பரமாத்மன் என்ற சொற்பிரயோகம் வரும்போதெல்லாம் அவை 'தத்' அல்லது 'அது' என்ற பேருண்மையை உணர்த்துவன எனவும், மனித னுடைய பிரக்ஞை அல்லது உள்ளறிவு உட்பட இந்தப்

பிரபஞ்சம் முழுவதையுமே இந்த 'அது' என்பது தன்னுள் கொண்டது எனவும் கொள்ள வேண்டும்.

ஞானதேவர் தர்மம் அல்லது இந்தப் பிரபஞ்ச விதியின் மூலம் அமைந்த பழமையான உறவைத்தான் எடுத்துரைக்க முற்பட்டார். அவர் இப்படிச் செய்ய முனைந்ததற்குக் காரணம் வைதிக தர்மத்தின் அதிகாரிகளான புரோகிதர்கள், என்றென்றும் பரிமளிக்கும் தெய்விகப் பண்பை மறந்து, சாரமற்ற ஒன்றைமட்டும் விடாப் பிடியாகக் கொண்டிருந்தார்கள். இது ஓர் எலும்புக் கூட்டின் கைவிரல் மோதிரத்தைப் பதித்தது போன்றதுதான்.

'தர்மம்', 'கர்மம்' என்ற இரண்டு சொற்களும் வாழ்வின் தத்துவத்தை வேதநோக்கின்படி உணர்த்துபவை. 'கர்மம்' என்றால் வினை அல்லது செயல்முறை. இந்தச் செயல்முறை இரண்டு வகைப்படும். ஒன்று இயந்திர ரீதியானது. மற்றொன்று அதற்கு மாறானது; ஆனால் மிக முக்கியமானது, ஜீவன் அல்லது வாழ்வு என்பது; செயற்கையான இயந்திரப் போக்குக்கு மாறாக உள்ள (நீடித்த) இயக்கத்தை உணர்த்துவது அது.

நவீன உயிர்நூல் அறிஞர்களும் சொல்கிறபடி அது பௌதிக ரீதியான வெப்ப சக்திக்கும் செயற்கையான இயந்திரசக்தி போன்றவற்றுக்கும் நேர்மாறான இயக்கமே. பௌதிக உலகில் காணும் காலப் போக்கு செயற்கையான வெப்ப இயந்திர சக்தி போன்றவற்றுடன் சம்பந்தப்பட்டது. இது விஞ்ஞானப் போக்கிலேயே செல்லும் இயக்கமாகும். முடிவில் இது தன் ஆற்றல் முற்றும் இழிந்திட அப்படியே அசைவற்று நின்று விடும். ஆனால் இதற்கு மாறான இயக்கம் ஜீவ இயக்கம்; இது இழிந்து நின்றுவிடாமல் செல்வது. மானிட உலகில் உள்ள வினை அல்லது செயல் முறைகள் யாவும், மேற் சொன்ன இரு வேறு விதமான அம்சமும் கொண்டனவாகும். மனித உடல் என்பது உலகத்துடன் பொருந்திய பொருட் சேர்க்கையால் ஆனது. ஆயினும் இது நிலையற்ற உடலிலும், அதன் மூலமாகவும் ஜீவ ஆற்றல் நிலை பெற்றதாயும், வெறும் பௌதிகமான (வெப்பம், இயந்திரம் போன்றவையும் செயற்கைச்) சக்திக்கு மாறான முறையிலும் இயங்குகிறது. இப்படிப் பௌதிக நிலைபெற்றும், செயற்கைச்சக்திக்கு மாறாகவும் இயங்கும் முறையே பௌதிக ஆற்றலினின்று ஜீவனின் (வாழ்வின்) நீடித்த ஆற்றலைத் தெளிவுற வேறுபடுத்திக் காட்டுகிறது. மனிதனிடம் இந்த ஜீவ ஆற்றல் தன்னைத் தானே உணரும்

வாய்ப்புப் பெறுகிறது. எனவே, மனித உலகில் காணும் 'வினை' அல்லது செயல்முறை இந்தப் பிரக்ஞை என்ற (தன்னைத் தானே அறிந்திடும்) ஆற்றல் கொண்டதாக அமைகிறது. இது தான், மனித வாழ்வை இயற்கை நிலையினின்று பண்பட்ட நிலைக்குக் கொண்டு விடுகிறது.

இயற்கையின்படி அமைந்த மிருகம் அல்லது விலங்கு மரபினின்றும் விடுபெற்று, மேன்மேலும் சுதந்தரமாகப் பண்பாட்டு நிலையைநோக்கிச் செல்கிருன் மனிதன். இந்த வாழ்வு முறை என்றென்றும் புதுமை பெற்று மலர்கிறது. இந்த விடுதலை அல்லது சுதந்தர நிலையே, பிரக்ஞை அல்லது தன்னைத் தானே அறிந்திடும் நிலையாகும்; உயிர் மூச்சுப் போன்றது இது என்ருலும் பொருந்தும். ஆனால் பின்நோக்கி இழுக்கும் விலங்கியல்பு (மிருக சுபாவம்), இந்தப் பிரக்ஞையுடன் முன்னேறுவதற்குத் தடையாக அமைகிறது. இப்படிப் பின்னுக்கு இழுக்கும் தடைதான், மனிதனை அங்கங்கே அமையும் பண்பாட்டு வகையினுள் கட்டுண்டு கிடக்கச் செய்கிறது; இந்த நிலையில் மனிதவாழ்வு முன்னேருமல் நின்று விடுகிறது. ஆனால் எல்லாவிதமான பந்தங்களினின்றும் விடுபடவேண்டும் என்ற பெருவிருப்பம் மட்டும் உள்ளத்தினின்று அழிவதில்லை. இந்த 'முமுக்ஷும்' என்ற பெருவிருப்பந்தான் எல்லை காண இயலா விடுதலையாற்றலையும் புதிய படைப்பாற்றலையும் கண்டுணரச் செய்கிறது. இதைத் தீவிரமாக உணர வேண்டும் என்னும் பெருவிருப்பம் காரணமாகவே வேத காலத்து முனிவர்களும் பௌத்த தீர்க்கதரிசிகளும், பிரபஞ்சம் முழுவதும் பரவி விளங்கும் பெருவாழ்வின் நோக்கத்துக்கு ஒரு வடிவு தந்து, அதையே 'தர்மம்' என்று குறிப்பிட்டார்கள்.

தர்மத்தின் ஆற்றல் பெருத கர்மம் அல்லது வினைதான் விடுதலை (முக்தி)க்கும் புதிய படைப்பாற்றுலுக்கும் இடங் கொடாதபடி செய்கிறது. தர்மத்தோடு பொருந்தாத கர்மம் அல்லது வினை, மனிதனை எவ்வித ஆற்றலும் அற்ற ஜடமாக்கி விடுகிறது. இப்படி நிலையற்ற ஒரு தன்மை ஏற்பட்டு மனிதன் இழிந்து ஒரே மாதிரியான அமைப்பில் அடங்கிவிடுகிருன். எனவே, கரும விதி மனிதனைக் கட்டுண்ட நிலையிலேயே வைத்துவிடுகிறது. வாழ்வு விதி அல்லது தர்மமோ வினைப் பயனுல் விளைந்த சகல பந்தங்களினின்றும் மனிதனை விடுபெறச் செய்துவிடுகிறது. விடுதலைபெற வேண்டும், புதிய படைப்பாற்றல் வேண்டும் என்பதை உணர்ந்து செயல்படுவதுதான் தர்மம் அல்லது அறம்; அது மனிதனை மெய்யான பரம் பொருளை நேருக்கு நேர் காணவைக்கிறது.

வேத நோக்கின்படி அமைந்த வாழ்வை விளக்க வியாசர் அருளிய நூல்தான் பகவத் கீதை. ஒவ்வோர் அத்தியாய முடிவிலும், ''பகவத் கீதை என்பது பிரம்மவித்யை அல்லது பரம்பொருளை அறிந்திடும் ஞானத்தை விளக்கும் யோக விளக்கம் கொண்ட உபநிடதம்'' எனக் குறிப்பிடப்படுகிறது. ஸ்ரீ கிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும் இடையே நடந்த இந்த உரையாடல் முழு முதற்பொருளையும் உணர்ந்திட ஏது வாகிறது. 'பகவத் கீதை'யின் முதல் அத்தியாயம் அர்ஜுனனின் மனக்கவலையை உணர்த்திடுவதாகும். 'யோகம்' என்பது தர்மத்தோடு பொருந்திய கர்மம் அல்லது செயல் ஆகும். இந்த விதமான அறத்தையே பகவத் கீதை முழுமையாக உணர்த்துகிறது. கீதையின் உட்பொருளைக் கண்டிட உதவும் திறவுகோல் போன்றது, அதன் முதல் அத்தியாயம். இந்த முதல் அத்தியாயத்தையும் இதிலுள்ள உரையாடலையும் நீக்கி விட்டால் நமக்கு ஒன்றுமே புலப்படாது ; மற்றப்படி தத்துவமும் ஒழுக்கமும்பற்றிய குழப்பம் நிறைந்த பேச்சாகவே அது படும். அதுமட்டுமா? இந்தப் பேச்சு, வாழ்வின் உண்மையான ஆற்ற லோடு பொருந்தாமல், எக் காலத்திலும் எல்லா இடங்களிலும் மக்கள் வாழும் வாழ்வுநிலைக்கும் பொருந்தாமல் வெறும் பேச்சாகவே நின்றுவிடும். கண்ணிழந்தோர் தம் கண்ணுக்குப் புலனாகாத வாழ்வெனும் நீரோட்டத்தின் சக்தியால் அடித்துச் செல்லப்படுவதுபோல், மனிதர்கள் வாழ்க்கை நடத்துகிறார்கள். இடைவிடாது தொடர்ந்து செல்லும் வாழ்வின் போக்கு, பழமை காரணமாக அவர்களைப் பின்னுக்கு இழுக்கும் அதே சமயம், அவர்கள் அதுவரை கண்டறியாத ஒரு லட்சியத்தைக் குறித்த நம்பிக்கையும் அவர்களை முன்னேறும்படி ஈர்க்கிறது. எப்படி, ஏன், எப்போது, எங்கே என்ற வினாக்களெல்லாம் மனத்தில் எழாமல் செல்லும் வாழ்க்கை அது. குறிப்பிட்ட ஒரு வகையான கருத்துக்கள், நம்பிக்கைகள், விருப்பு-வெறுப்பு களுடன் உள்ளத்தில் பரபரப்பும், புறவாழ்வில் சச்சரவும் உண்டாகும் விதத்தில் செல்லும் போக்கு அது.

சக்கரவட்டம் போன்ற இந்தப் போக்கு அன்பு-வெறுப்பு, போர்-அமைதி, அழிவு-ஆக்கம் சிறிய இன்பங்கள் பெருந் துயரங்கள் ஆகியவற்றைக் கொண்டது ; தன்னையே அறிந்திடா மல் செல்லும் வாழ்வின் போக்கு அது.

அப்போது திடீரென்று ஏதோ அசாதாரணமானதும், இது வரை நினைத்துப் பார்க்காததுமான ஒரு நிகழ்ச்சி நேரிடுகிறது. எதிர்பாராத இந்த நிகழ்ச்சியினிடையே மனிதன் உள்ளும்

புறமும் உணர்வற்றுப் போகும் நிலைக்கு வந்துவிடுகிறான். அப்போது வாழ்வுப் போக்கின் தொடர்பு அற்றுவிடுகிறது. உள்ளத்தில் குழப்பமும் செயலற்ற நிலையும் ஏற்பட்டு விடுகின்றன. தான் இன்னது செய்ய வேண்டும், இன்னது செய்யக் கூடாது என்று விளங்காத நிலைக்கு வந்துவிடுகிறான். அவனுடைய கண்ணெதிரே பழமை முழுதும் சிதைந்து உருக் குலைந்துவிடுகிறது. எதிர்காலமோ, அச்சம் என்னும் பேய் அவனை பயமுறுத்தும் நிலையில் காண்கிறது. அப்போது எங்கும் கும்மிருட்டு இருப்பது போன்று தோன்றுகிறது; இதனால் மனம் எத்திசையிலும் செல்ல அஞ்சுகிறது. காலம் அல்லது கர்மசக்கரம் நின்றுவிடுகிறது; 'ஏன் இந்த வாழ்வு வாழ்கிறோம் ?' என்ற வேதனை வாட்டுகிறது. வெற்றி, தோல்வி இரண்டில் ஒரு முடிவுக்கு வரவேண்டிய நிலையில் கௌரவர் படையும் பாண்டவர் படையும் போருக்குத் தயாராக நிற்கின்றன. அதைக் கண்டபோது அர்ஜுனனுக்கு, இதே குழப்பமான மனநிலைதான் ஏற்பட்டது. கௌரவர்களின் தலைவனான துரியோதனன் ஓர் அங்குலங்கூடப் பாண்டவர்களுக்கு விட்டுக் கொடுக்க மறுத்ததால் போர் மூண்டேயாக வேண்டும் என்ற நிலை. இத்தனைக்கும் பாண்டவர்களின் தந்தையான பாண்டுவே தன் திறமையால் வெற்றிகொண்ட ராஜ்யம் அது! பாண்டவர்களுக்குத் துணைவராகவும், நல்லுரை கூறுபவராகவும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் இருந்தார். அவருடைய முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின; இத்தனைக்கும், 'கௌரவர்களுக்கே சாதகமான ஒரு முடிவு ஏற்பட்டாலும் பரவாயில்லை; ஒருவிதத்தில் இரு சாராருக்குமிடையே சமாதானம் நிலவச் செய்து, போரைத் தவிர்க்க வேண்டும்' என்றுதான் அவர் முயன்றார்.

இந்த நிலையிலேதான் மிக்க மனவேதனையும் சோர்வும் கொண்டான் அர்ஜுனன், இப்படிப் போர் மூண்டது அவனுக்குப் பெருத்த பயங்கரமாகத் தோன்றியது. இது, கோழைத்தனமும் அல்லாத திகிலும் அல்லாத ஒரு நிலை. காரணம், ஏற்கனவே அவன் சிவபெருமானுடன் போர் புரிந்தது உட்படப் பல சண்டைகளில் ஈடுபட்டிருந்தவன்; பிறவியிலேயும் சரி, பயிற்சியிலும் சரி, அவன் மாவீரன். அவனது ரத்தத்திலேயேகூட அந்த வீர உணர்வு ஊறியிருந்தது. அவனது உள்ளத்தில் திடீரென, தர்மம் அல்லது அறத்தை அடிப்படையாகக் கொண்ட அமைதி நிறைந்த வாழ்வை இந்த உலகில் கண்டிட வேண்டும் என்ற விழிப்பு நிலை ஏற்பட்டது; இந்த விழிப்பே அவனுக்குப் பழக்கமான

மனநிலையைச் சிதற அடித்துவிட்டது ; மனித இனம், பிற உயிர்கள் இவை பொருந்திய இந்த உலகத்துடன் அவன் கொண்டிருந்த உறவு முழுவதையும் குலைத்துவிட்டது. உலகத்திலே அவனுக்கு (இவ்வாழ்வில்) ஒரே வேதனையும், இனி எதனாலும் பயனில்லை என்ற ஒரே ஏக்கமுந்தான் மிஞ்சின. இதுதான் யோகம் ; அதாவது உலகத்தோடு உறவு கொண்டு அவன் வாழும் நிலை. இவ்விதமாகத் திடீரென்று ஏற்பட்ட விழிப்புநிலை, ஆழ்ந்ததோர் ரகசியம் பொருந்தியது. இதனால் முன்னே உலக மரபின்படி பழகிய உறவு முறைகள் - சூழ்நிலைக்கு ஏற்பப் பழக்கப்பட்ட அறிவும், அது காரணமாக இருந்த உறவும்-அர்த்தமற்றவையாக அவனுக்குத் தோன்றின. 'தத்' (அது) என்ற மெய்ப்பொருளோடு பொருந்தா இந்த நிலையில், மனிதர்களுடன் வாழ்வதில் ஒரு பொருளும் காணாத சூழலில் தான் தன்னந்தனியே இருப்பது போல் உணர்ந்தான், அநாதையாகவும், திக்கற்றவனாகவும், பாதுகாப்பற்றவனாகவும், வேதனைமிக்கவனாகவும் இருப்பதை அறிந்தான்.

அப்போது இந்த வேதனையும் ஏமாற்றமுமே, உலகுக்கும் அவனுக்குமிடையேயுள்ள ஒரே தொடர்பாக அமைந்தன. இதுதான் கீதையின் முதல் அத்தியாயத்தில், 'அர்ஜுனனின் ஏக்கநிலை அல்லது யோகம்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இங்கே ஒரு விஷயத்தை முக்கியமாகக் கவனிக்க வேண்டும் : ''பகவத் கீதையை நன்றாகப் புரிந்துகொள்வதற்கு, இப்படி உலக வாழ்விலே காணும் ஏக்க நிலைதான் வேண்டும்'' என்ற உண்மையே அது. இந்த நிலையை உள்ளூறவும், தம் வாழ்விலேயும் உணராதவர்களால் பகவத்கீதை முழுவதிலும் தொடர்ந்து வரும் உரையாடலைப் புரிந்துகொள்ள முடியாது. மனிதனுக்கும் கடவுளுக்கும் (நர-நாராயணர்களுக்கு) இடையே அமைந்த உரையாடலன்றோ இது! அன்றாட வாழ்வில் இத்தகைய ஓர் ஏக்கம் ஏற்படுவது, மனிதன் இறைவனை நேருக்கு நேர் கண்டிட வழி வகுக்கிறது. ஏதோ தற்சமயத்துக்கு ஏற்படும் ஏக்கமோ, இன்ன கருத்தைக் கடைப்பிடித்தால் வாழலாம் என்று சமாதானப்படுத்திக்கொண்டு அடங்கிவிடும் மனப்போக்கோ அல்ல இது. தன்னிடமே இரக்கம் கொள்வதும் எதிலும் நம்பிக்கையற்றதுமான நிலை என்றும் இதைச் சொல்வதற்கில்லை. கடந்த காலம், எதிர்காலம் இவற்றோடு அறவே தொடர்பைவிட்ட நிலையில் தோன்றிடும் மகத்தான ஏக்கம் இது. மனம் எத்திசையிலும் பாயாமல், எந்தக் கருத்துக்களுடனும் பொருந்தாமல் அசைவற்று நின்றுவிடும் நிலைதான் இது. மொத்தத்தில், 'இருள் நிறைந்த வாழ்வில் மனிதனுள் எழும்

உண்மையான ஏக்க நிலை இது' என்று சுருக்கமாகக் கூறலாம். இப்படி மனம் பழைய 'சம்ஸ்காரம்' அல்லது பழைய வழக்கங்கள் என்னும் மாசுகள் யாவும் நீங்கி விளங்கும்போது தான், மெய்ப்பொருள் அல்லது கடவுளை உள்ளத்தில் நிரப்ப முடியும்; அப்போதுதான் இறைவன் இருப்பதை (அஸ்தி என்ற உண்மையை) அறிந்தும் கண்டும் உணரலாம்; புத்தம் புது நோக்கிலும், முற்றும் அமைதியான மனநிலையிலும், நுண்ணறிவைக் கொண்டும் அந்த உண்மையைக் காணலாம்.

இப்படிப் புயல் போல் எழுந்த ஏக்கந்தான் அர்ஜுனனைப் பழமை முற்றிலுமிருந்து அடியோடு பெயர்த்தது. இதனால் அப்போது அர்ஜுனன் தன்னோடு நெருங்கிப் பழகிய நண்பனை கண்ணனைக் காணவில்லை; இறைவனே தன் முன் இருப்பதைக் கண்டான். இப்படி நேருக்கு நேர் இறைவனைக் காணும் இந்நிலையில் அவன் இவ்வாறு சொல்லி வியக்கிறான்:

''என் வாழ்வே அவலமாகி நிற்கிறதே! 'தர்மம் எது? அதர்மம் எது?' என்று எனக்கு விளங்கவில்லையே! எனவே, 'எனக்கு எது என்றென்றும் நன்மை பயக்கும் என்பதைத் தெளிவாக விளக்கியருளுங்கள்'' என்று பணிவுடன் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். என்னை உங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களையே மூலாதாரமான பொருளாகக் கொண்டு சரணடைந்தேன். எனக்கு உபதேசித்து, இருண்ட வாழ்வில் நான் கலங்கித் தவிக்கும் இந்நேரத்தில் அந்த வாழ்வின் உட்பொருளையும், நான் எதைச் செய்தால் சரி என்பதையும் தெளிவாக உணர்த்துங்கள்!''

மேல்வாரியாக ஒன்றை அறிவுறுத்துதல் என்பது ஒன்று; வாழ்வினுள் நன்கு பொருந்தும்படி அறிவுறுத்துதல் என்பது வேறு. இதைத்தான் 'ஆன்மிகமான உபதேசம்' என்பார்கள். கீதையின் இந்த உட்கருத்தை ஞானதேவர் ஒருவர்தாம் நன்கு அறிந்து உணர்த்தியிருக்கிறார். அவரைப் பொறுத்த வரையில் (மற்றப் பழைய நூல்கள் புனிதமானவையோ அல்லவோ, எப்படியிருப்பினும் சரி) கீதை ஒன்றே மெய்ஞ்ஞானத்தை உணர்த்தும் அரும்பெருநிதியமாகவும், எல்லா அறிவுக்கும் மூலமான ஒன்றாகவும் அமைந்துள்ளது; 'கீதை ஒன்றே சொற்களால் விவரிக்க இயலாத பேரானந்தம் கொண்டது; கரைகாணமுடியாத பெருவாழ்வை உணர்த்துவது' என்பதே அவர் கண்டறிந்த உண்மை. இதனை விளக்க ஞானதேவர் ஒரு புராணக் கதையை நமக்கு எடுத்துரைக்கிறார்: அதில் சிவபெருமானின் தேவியான அம்பிகை பவானி, அனைத்தும்

அறிந்த அப்பெருமானை, ''கீதை என்பது என்ன ?'' என்று கேட்கிருள். அதற்குச் சிவபெருமான், ''என் அன்பே ! அந்த உண்மை எனக்கே தெரியவில்லையே ! ஒவ்வொரு கணமும் உன் அற்புதப் பேரழகு எவ்வாறு ஒளிர்ந்து, புத்தம் புதிய கவர்ச்சியுடன் திகழ்கிறதோ அது போன்றதுதான் கீதையின் சாரம்'' என்கிருர்.

எனவே, முன் அமைந்த சித்தாந்தங்களான அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சிவாத்வைதம், த்வைதம் போன்று கீதையை ஒரு வரையறைக்கு உட்படுத்தப்பட்ட ஒன்ருகக் கொள்வது தவறு. கீதையை அறிந்திட வேண்டுமாளுல், பழைய மனமாசுகளையெல்லாம் அகற்றி விட வேண்டும். 'வைராக்யம்' அல்லது முழுமையானதோர் ஏக்கநிலை உள்ளத்தில் தோன்ற வேண்டும். இரண்டாவதாக, நுண்மையாக உணர்ந்திடும் புலனுற்றல் ஏற்பட வேண்டும்; ஒவ்வொரு கணமும் 'நம் உள்ளும் புறமும் என்ன இருக்கிறது ?' எனக் கண்ணுக்குப் புலனுகாமல் உந்தும் உணர்வு ஏற்படவேண்டும். ''இத்தகைய ஒரு தீவிர விழிப்புநிலையின் மூலமாகத் 'தான்' என்பதை உள்ளூற உணர்ந்து, துரும்பிலும் சரி அகன்ற பெருவானத்திலும் சரி இறைவனை நேருக்கு நேர் காண விரும்பினுல் 'தத்' அல்லது 'அது' எனும் மெய்ப்பொருளை மிகப் பணிவுடன் கவனித்து அறிந்து உய்த்துணரவேண்டும் என்ற நம்பிக்கை மிக அவசியமாகும். இந்த நிலையில்தான் இறைவன், 'நான்' (அஹம்) 'அது' (தத்) என்பவற்றிற்கிடையே இருந்த வேற்றுமையை மாற்றி, என்றென்றும் நிலைத்திருக்கும் 'நான்' (அஹம்) 'நீ' (தவம்) என்னும் உறவை-அதாவது, ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள உறவை அமைக்கிருன்.

கீதைக்குத் தாம் அருளிய உரைக்கு ஞானதேவர் 'பாவார்த்த தீபிகை' என்று பெயரிட்டிருக்கிருர். அதாவது, 'ஞானேசுவரி' என்று பிரபலமாக வழங்கும் இந்நூல் கீதையின் சாரப் பொருளை உணர்த்துகிறது ; எனவே, 'ஞானேசுவரி' என்பதற்குத் 'திவ்விய அறிவு' எனப் பொருள் கொள்ளலாம்.

ஞானேசுவரர் அருளிய கீதையின் சாரப்பொருளை விளக்குவதற்கு இது தக்க சந்தர்ப்பமன்று. அவருடைய இந்த உரையே மூலம் போன்றது ; தனிச் சிறப்புடையது. இதையே மூலநூல் எனக் கூறினுலும் தகும். மனிதனுக்கும், 'அறியவொண்ணுததான' பரம்பொருளுக்குமிடையே உள்ள நிலைத்த உறவை எடுத்துரைக்கும் அதிகாரபூர்வமான ஒரு நூல் என்றே 'ஞானேசுவரி'யைக் கூறிவிடலாம். எப்போதும்

மாறிக்கொண்டேயிருக்கும் வாழ்வில், மனிதமனம் முடிவின்றிச் சிக்கி உழல்வதால் இந்தப் பெரிய ரகசியத்தை உணராத அறிவிலியாக மனிதன் இருக்கிறுன். இந்த எதிர்விளைவுகள் யாவும் 'தான்' என்ற அகந்தையினுலேயே ஏற்படுவன ; இந்த எதிர் விளைவுகள் மனிதன் தானுகவே அமைத்துக்கொண்ட விருப்பு - வெறுப்புகளினுல் தோன்றுவன. இதனுல் ஒரு வரையறைக்கு உட்பட்டு அமைந்து தன்னைப்பற்றியே எண்ணிக் கொண்டிருக்கும் போக்கு அவனிடம் உண்டாகிறது. எனவே, உள்ளதை உள்ளபடி நோக்க இயலுவதில்லை ; பொருள்களை உள்ளவாறே நோக்கும் பாங்கு அவனிடம் அமைவதில்லை ; தன் அகந்தையைத் திருப்தி செய்துகொள்ள உதவும் கருவிகளாகவே அந்தப் பொருள்களைக் காண்கிறுன். இப்படிச் செயற்கையாக அமைத்துக்கொண்ட அறிவு அல்லது பிரக்ஞையினுல் தன்னையே அவன் எல்லாம் அறிந்தவனுகவும் கருதிக் கொண்டிருப்பதால், உண்மை அல்லது என்றும் நிலைத்துள்ள மெய்ப் பொருள் அவனுக்கு, ஏதோ புறம்பான ஒன்ருகப் படுகிறது. 'நான்' (அஹம்), 'தத்' (அது) என்பவற்றுக்கு இடையே உள்ள மொத்த உறவை - மெய்ப்பொருளை - மனிதன் காண முயல வேண்டுமானுல், அது தனக்குப் புறம்பானது என்ற மனப்பான்மை மாறியே ஆகவேண்டும்.

இப்படிச் சீராக மாறிய உறவுதான் பிரபஞ்சம் முழுவதும் பொருந்திய 'தர்மம்' (நிலைபெற்ற அறம்) ஆகும். இந்த மாற்றம் ஏற்படாவிட்டால், மனிதன் 'கர்மம்' அல்லது வினையென்னும் சக்கரத்தில் சிக்கித் துன்புறுகிறுன் ; இதனுல் தன்னைப் பற்றியே எண்ணமிட்டபடி, செயற்கையாக அமைத்துக் கொண்ட சிற்றறிவுக்கு உட்பட்டுக் கிடக்கிறுன். இதுதான் கடுமையான நியதியாம் 'கர்மம்' அல்லது வினையின் போக்கு. இந்த வினை காரணமாக வந்த 'நான்' (அஹம்) - 'தத்' (அது) என்பவற்றுக்குள்ள உறவுமுறை, முடிவற்ற துன்பத்திலேதான் கொண்டு விடுகிறது.

துன்பம் தருவதான இந்த உறவு முறையை, என்றென்றும் நலம் தரும் அகந்தையற்ற 'நான்', 'தத்' என்ற திவ்விய உறவாக மாற்றுவதே மனிதனுக்கு உள்ள பிரச்னை. 'ஞானேசுவரி' இதனை அற்புதமாகவும் சிறந்த முறையிலும் விளக்கித் தெளிவுபடுத்துகிறது. ''இப்படி ஞானதேவரது கருத்திலே ஒன்றிப் பற்றற்ற நிலையில் வாழ்பவர்கள் இத்தகைய திவ்விய நலம் பெறுவார்கள். 'ஞானேசுவரி'யின் முடிவுரையில் அவர் அருளும் பின் வரும் நல்லாசிக்கும் அவர்கள் பாத்திரமாகிறுர்கள்'' எனலாம்.

''இறைவன் தனக்கு அர்ப்பணமாக நான் தரும் இந்த உரையைக் கேட்டு உலகையே ஆட்டியருளும் **அவன்** மகிழ் வானாக.

''தீயவர்கள் தங்கள் போக்கைக் கைவிட்டு, நல்ல செயல் களில் ஈடுபட்டு நலமே காண்பார்களாக. எல்லா உயிர்களும் நேசப்பாங்குடனும் பரஸ்பர அன்புடனும் கூடி மகிழ் வனவாக.

''தீயவர்களின் உள்ளத்திலிருந்து அஞ்ஞான இருள் நீங்கு வதாக. சூரியனாய் ஒளிரும் 'ஸ்வதர்மம்' அல்லது நிலையான தன்மைகொண்ட 'நாம் யார்?' என்ற திவ்விய ஞானத்தை எல்லா உயிர்களும் கண்டு உணரவேண்டும். அப்போது அவர்கள் தாம் விரும்பிய யாவற்றையும் அடைந்து மகிழ்வார் களாக.

''தெய்வபக்தியிலும் தியானத்திலும் திளைக்கும் சாதுக் களுடன் இடைவிடாமல் சேர்ந்து இவ்வுலக மக்கள் யாவரும் நலமே பெறுவார்களாக.

''இத்தகைய சாதுக்கள், எல்லா விருப்பங்களையும் நிறை வேற்றி எங்கும் நிழல்தந்திடும் கற்பக விருட்சத்தைப் போன் றவர்கள்; தொட்ட மாத்திரத்தில் எல்லாக் கவலைகளையும் போக்கிடும் 'ஸ்பர்சவேதி' என்ற அரிய ரத்தினக்கல் போன்ற வர்கள்; மக்களின் உள்ளத்தில் அழியாப் பேரின்பம் நிறைந் திட அருளும் தேவாம்ருத சாகரமான அமுதப் பெருங்கடலுக்கு ஒப்பானவர்கள்.

''எல்லாக் காலத்திலும் எல்லோருடைய உள்ளத்திலும் நலமே விளையும்படி அருள்வதால் இந்தச் சாதுக்கள் மக்கள் யாவருக்கும் நெருங்கிய உறவினர்களாக விளங்குவார்களாக. இவர்கள் களங்கமற்ற சந்திரனுக்கும், சுட்டெரித்திடும் தன்மை நீங்கித் தண்ணளி தந்திடும் பகலவனுக்கும் ஒப்பாவார்கள்.

''மூவுலகும் ஒன்றுபட்டு, ஒரே பேரின்ப நாடாக விளங்கு வதாக. அனைத்துயிர்களின் உள்ளத்திலும் உறங்கிடும் ஆதி புருஷனாகிய பரம்பொருளை அடையும் ஏக்கம் தோன்றிடுமாறு மக்கள் யாவரும் என்றென்றும் விழிப்புநிலையில் இருப்பார் களாக.''

# ஞானதேவருடைய கீதை

வியாசர் அருளிய இதிகாசமான மகாபாரதத்தின் ஒரு பகுதிதான் கீதை; இது யாவரும் அறிந்ததே. ஆனால் வழக்க மாக ஒரு மூலநூலுக்கு உரை எழுதுபவர்கள் தத்தம் கருத்துக் களையே மிகுதியாகக் கூறி விளக்கம் தருகிறார்கள். மக்களால் மதித்துப் போற்றப்படும் இத்தகைய (உரையாசிரியர்கள் கூறும்) முரண்பட்ட உரைகளால், வியாசர் அருளிய கீதைக்கு, பலவகை யான மாறுபட்ட பொருள்கள் தோன்றுவதால், அவற்றைப் படிப்பவர்கள் குழப்பமும் திகைப்புமே அடைகிறார்கள். சங்கரர், ராமானுஜர், மத்வர் ஆகியோரின் கீதை விளக்கங்களையும், தற்காலத்தில் திலகர், காந்தி, விநோபா இவர்களின் கீதை விளக்கங்களையும் தவிர இன்னும் பல விளக்கங்களும் உள்ளன.

ஆனால் 'ஞானதேவருடைய கீதை' என்னும்போது, அதன் தனிச் சிறப்பே என்முன் நிற்கிறது. பேரறிவாளர்களான மற்ற உரையாசிரியர்கள் 'இதுதான் (தம்முடையதுதான்) கீதையின் உட்பொருள்; அது அல்ல' என்றெல்லாம் தம் கருத்தையே வலியுறுத்துவார்கள். ஆனால் அவ்வாறெல்லாம் தம் கருத்துக் களைத் திணிக்காமல் இயல்பான போக்கில் எதையும் எடுத்துச் சொல்வதாலேயே ஞானதேவரது விளக்கம் தனிச் சிறப்புடைய தாக எனக்குத் தோன்றுகிறது; மற்ற உரையாசிரியர்கள் போலன்றி, தாம் முற்றும் அறிந்த நிலையிலும் மிகப் பணிவுடன், தமக்கு ஏதும் தெரியாதது போலவே 'கீதை'யின் பொருளை விளக்குகிறார். முன்பு சிவபெருமான் அம்பிகை பவானியிடம் கூறியதுபோல், ''நமக்கு ஒன்றும் தெரியாது. பணிவினால்தான் எதையும் அறிந்திட முடியும்'' என்பதே ஞானதேவரின் கருத்து. முன்னதாக, ''கீதை அப்படி இருக்கும்; இப்படி இருக்கும்'' என்று கற்பனை செய்வதில் நம்பிக்கை கொள்ளாமல் அதனை ஆழ்ந்து படிக்க வேண்டும். இன்றேல் நாம் எதைக் காண வேண்டுமென்று எண்ணுகிறோமோ அதுதான் புலப்படுமே தவிர, மூலத்தின் ஆதாரபூர்வமான உட்பொருள் விளங்காது. ஞானதேவர் இப்படியெல்லாம் தவறான முறையில் கீதையை நோக்கவில்லை. அவர், தொன்றுதொட்டு வரும் வேதமுறைப் படியே-தம்மையே அர்ப்பணம் செய்யும் முறையில் (சமித் என்ற சுள்ளியைக் கையில் கொண்டு வேள்வித்தீயின் முன் அமர்ந்து

அகந்தை முற்றும் நீங்கிப் பணிவுடன்) கீதையை அணுகுகிருர். எதையும் நேரிய முறையில் அணுகி அறியும் அறிவுதான் நிலையான வேள்வித்தீ ஞானக்கினி. இந்த மெய்யறிவை நாட விழைபவன் 'தான்' 'தனது' என்ற அகந்தையை விட்டு எதையும் அர்ப்பணிக்கும் முறையில் (இதம் ந மம-இது என்னுடையதன்று; கிருஷ்ணர்ப்பணம் - எல்லாம் இறைவனுக்கே உரியவை என்ற முறையில்) அந்த ஞானக்கினியை அணுக வேண்டும். வேதகாலத்தில் 'சமித்' என்ற சுள்ளியை வேள்வித் தீயில் இடுவது இந்தக் கருத்தில்தான்.

கீதையை இவ்வாறு அணுகுவது ஏன் என்பதற்கு மற்ருெரு காரணமும் உண்டு: தன் அறிவுக்கு ஏதும் விளங்காத அவல நிலையில் உள்ள மனிதனுக்கும் (நரனுகிய அர்ஜுனனுக்கும்), இறைவனுக்கும் (ஸ்ரீமந் நாராயணனுக்கும்) இடையே நடைபெறும் உரையாடல்தானே கீதை! கடவுளின்முன் அகந்தை யாவும் அழிந்தொழிந்த நிலையில், ஏங்கி நிற்கும் மனிதனுக நம்மை எண்ணினல்தான் கீதையில் அடங்கிய உரையாடலை உணர முடியும்; இன்றேல் அந்த முயற்சி சாத்தியமன்று அர்ஜுனனை அறிவிலி என்ருே, கல்வி-கேள்விகளில் பயிற்சி பெருதவன் என்ருே கூற முடியாது. க்ஷத்திரிய வீரனுகவும் தர்மத்தில் பற்றுள்ளவனுகவும் அவன் பயிற்சி பெற்றது தனிச் சிறப்புடையதாகும். அப்படி இருந்தும் ரத்தக் களரி ஏற்படும் நிலையில் கௌரவ-பாண்டவப் படைகள் தயாராக நிற்பதைப் பார்த்ததும், அவனுக்குப்பெருத்த ஏக்கமே ஏற்பட்டது. போரில் ஈடுபட நேர்ந்த வீரனுகத் தன்னைக் காண இயலாமல் ஒரு சாதாரண மனிதன் என்ற அளவில் நோக்கும் உணர்வே அவனுக்கு அப்போது உண்டாயிற்று. உணர்ச்சிமிக்க ஒவ்வொருவனின் வாழ்க்கையிலும் இப்படி எதிர்பாராதபடி, அவன் எந்தத் துறையில் அறிவாளியாக இருந்தாலும் சரி, அடிப்படையே தகர்ந்திருப்பது போன்ற இந்த நிலை ஏற்படும். இறைவனுக்கும் தனக்குமிடையே பொருள் பொதிந்த உரையாடல் ஏற்படுவதற்கு முன் அர்ஜுனனை இத்தகைய ஏக்க நிலையில் நிறுத்தி வைப்பதிலேதான் வியாசருடைய ஒப்பற்ற மேதை புலனுகிறது. அசாமான்யமான இந்தத் திவ்விய அறிவொளியைத் தருகிறது. கீதை அதனுல்தான் இந்துக்களுக்கு மட்டுமன்றி மனித சமூகம் முழுவதற்குமே பொருந்தும் அமர நூலாக அது விளங்குகிறது.

வியாசர் தம் அழியாப் படைப்பான கீதையின் ஒவ்வோர் அத்தியாயத்தின் முடிவிலும் தெளிவுறுத்துவது போல், ஞான

தேவரும் கீதைக்கு உரை எழுதியிருப்பதால், அந்த உரையும் அமரத்துவம் பெற்றுவிட்டது எனலாம். ஆகையால், ஞான தேவர் ஒருவரே மிக முக்கியமான கீதைப் பேருரையாசிரியர் என்பது பொருந்தும். யோகஇயலை அடிப்படையாகக் கொண்டு கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவை, அவர்களிடையே நடைபெறும் உரையாடல்மூலம் அருளிய உபநிடதமாகவே கீதையை நோக்கினர் வியாசர். இதற்குக் காரணம், யோக மல்லாத ஒரு நிலையில், பிரக்ஞை அல்லது அறிவாற்றல் என்ற உறவு கடவுளுக்கும் மனிதனுக்குமிடையே இருப்பது சாத்திய மில்லை. எனவே, மனிதனும் கடவுளும் இணைந்து மலர்வதற்கு வேதத்தில், அதிலும் குறிப்பாக உபநிடதத்தில் கூறப்பட் டிருக்கும் யோகமுறை ஒன்றே பொருந்துவதாகும்; வேறு வழி ஏதும் இல்லை என்பதையும் அவை உறுதிப்படுத்துகின்றன - இதை (நாம்) ஏற்றாலும் சரி; ஏற்காவிட்டாலும் சரி! ஓர் இளைஞன் - இளநங்கை இவர்களிடையே தோன்றும் காதல் உணர்வை ஒரு குழந்தை உணர முடியாது; அந்தக் குழந்தை யின் நிலை போன்றதே இது. சாமானியர்களான நாம் கீதையின் சாரத்தை அறிந்துவிட முடியாது. 'யோகதரிசன'த்தில் குறிப் பிட்ட (போர்க்களத்தில் அர்ஜுனனுக்கு ஏற்பட்ட) ஏக்கம் அல்லது வைராக்கியம், பிரபஞ்சம் எங்கும் பரந்து விளங்கும் பரமாத்மனுக்கும், ஜீவாத்மனாகிய மனிதனுக்கும் உள்ள உட்பொருளை உணர்ந்திடுமுன் தோன்றும் ஒரு நிலையே ஆகும்.

ஞானதேவர் கீதைக்குத் தாம் எழுதிய உரையை 'ஸமாதி தனம்' அல்லது 'குறைவற்ற தியானச் செல்வம்' என்கிறார். ஸமாதியே தியானத்தின் உச்சநிலையாகும், யோகத்தின் பரிபாஷையைக் கொண்டு ஒப்பிடுவதுதான் 'ஸமாதிதனம்' என்பதாகும். பிற நூல்களுக்கு உரை வகுப்பதென்றால் உலகத்தில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சியைப்பற்றி உரைப்பது போன்றதாகும். ஆனால் 'சமாதிதன'மோ அத் தகையதன்று; அது நிரந்தரமானது; காலவரையறைக்கு உட்படாதது. 'இது என்ன?' என்று உணர்ந்துகொள்வதற்குக் கூட ஒருவர் யோக நிலையிலேயே விழிப்புடன் (ஜாக்ரதநிலையில்) இருந்தாக வேண்டும். தாம் சொல்வதை உண்மையிலேயே மன அமைதியுடனும் சிரத்தையுடனும் கேட்பவர்கள், அந்த ஒரு செயலாலே யோகத்துடன் பொருந்திய விழிப்பு நிலையை எய்துவர் என உறுதி அளிக்கிறார் ஞானதேவர். அவர்கள் அந்த நிலையில், தம்மிடமுள்ள தான் என்ற அகந்தை உணர்வும் அறியாதவண்ணம் கீதையின் சாரத்தை - இறைவனுக்கும்

மனிதனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலின் உட்பொருளைக் கிரகிப்பார்கள்.

வியாசர் அருஞ்சொற்களைக் கொண்டு ஸ்ரீகிருஷ்ண பகவானின் உபதேசங்களை எடுத்துரைக்கிறார். சம்ஸ்கிருத மொழியை நன்கு கற்றவர்கள்கூட அவற்றைப் புரிந்து கொள்வது சிரமந்தான்; அப்படி இருக்க, சம்ஸ்கிருதத்தில் பேசவோ, எழுதவோ இயலாத சாமானிய மக்கள் அதை எவ்வாறு புரிந்து கொள்ள முடியும்? கீதையை முதல்முதலாக மகாராஷ்டிர மக்களின் மொழியான மராட்டியிலே, துணிந்து விளக்கியவர் ஞானதேவர்தாம். ''சம்ஸ்கிருதத்தைத்தவிர வேறு எந்த மொழியிலும் கீதையை எடுத்துரைக்கக் கூடாது; அப்படிச் செய்வது பெரிய அபசாரம்'' என்று வைதிகர்கள் கருதிவந்தார்கள். எனவே, ஞானதேவர் இவ்வாறு செய்ததைப் பெரும்புரட்சி என்றே குறிப்பிடவேண்டும். அது மட்டுமில்லை; இப்படித் துணிந்து மராட்டியில் எடுத்துரைத்ததோடு, ''நான் மராட்டியில் எழுதியது தேவாம்ருதத்துக்கு ஒப்பானது. என்னுடைய இம்மொழிகள் மனிதனுடைய நேர்மையான புலனறிவின்மூலம் நிரந்தரமான தெய்வ அநுபவத்தை நுகர வைக்கும்'' என்று முற்றும் உறுதியுடனும் நம்பிக்கையுடனும் கூறி முடிக்கிறார்!

ஒரு புறம் பழைய வைதிக மரபினரை எதிர்த்து நின்றார்; மறுபுறம் குருநாதரிடமும் இறைவனிடமும் பணிவுடன் நடந்து கொண்டார். இதனாலேயே அவருடைய 'கீதைப்பேருரை'க்கு ஒரு தனிச்சிறப்பு கிட்டியுள்ளது. இந்தச் சிறப்பு, சமூகத்துக்கும் உலக நடப்புக்கும் முற்றும் புரட்சிகரமானதுதான்; அதே சமயத்தில் இத்தகைய புரட்சி மனப்போக்கு உலக இயல்புக்கு மாறான தெய்வத்தன்மையுடன் பொருந்தியதாகும்.

இனி ஞானதேவர் முக்கியமாகத் தந்துள்ளது என்ன என இங்கே சிறிது கவனிக்கலாம்; வியாச கீதைக்கு இவர் அளித்துள்ள ஆற்றல்மிக்க படைப்பில் காணும் சிறப்பான விளக்கமே அது. அதுபற்றி ஆராய்வதற்கு முன்னதாகச் சில விஷயங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டும். முதலாவதாக, உலகில் மனித சமூகம் முழுவதும் கண்டும் கேட்டும் உணரும் அநுபவங்களெல்லாம் அர்த்தமற்றவை என ஒரு நிலையில் மனிதன் அறிந்ததும், திகைத்து நிற்கிறானே அது ஏன்? முந்தைய தீர்க்க தரிசிகள் (மந்த்ரத்ரஷ்டாக்கள்), மகான்கள், புண்ணிய நூல்கள் எடுத்துரைத்தவை யாவும் திடீரெனப் பொருளற்றன

வாகப் படுகின்றனவே அவனுக்கு ? இது ஏன் ? மனிதனுடைய விழிப்பு, கடைசியில் பேரிருள் செறிந்த ஏக்கம் அல்லது சூனிய நிலைதான் ; மனிதனை ஆட்கொள்வது அதுவே. ஒவ்வொரு யுகத்திலும் மனிதனுக்கு இப்படி ஒரு நிலை ஏற்படுவது ஏன் ?

இதற்கு விடை, ''மனிதன் தன்னைத் தவிர யாவற்றையும் அறிந்துகொள்ள முயல்கிறான். அவன் அறிவு பெற்று அற்புதச் சாதனைகளையும் புரிகிறான். ஆனால் ஒன்றைமட்டும் கவனிக்கத் தவறிவிடுகிறான் ; அதாவது, 'அகந்தை நீங்கிய தான்' என்பது இன்னதென உணராத நிலையில் அவன் பெற்ற அறிவெல்லாம் பயனற்றுப் போகின்றன. இதை அவன் உணர்ந்தபாடில்லை. மனிதனது உள்ளத்தின் ஒரு பகுதியில், அறிய வேண்டும், பொருள் திரட்ட வேண்டும், சுரண்ட வேண்டும், வெல்ல வேண்டும், தற்பெருமையை நிலை நாட்ட வேண்டும் என்றெல்லாம் அனைத்துத் துறையிலும் போட்டி மனப்பான்மை குடிகொண்டிருக்கிறது. இது மனித சமூகம், ஆன்மிக நிலை என்ற இரண்டு வகையிலும் ஏற்படும் ஒரு மனப்போக்காகும். அகந்தை என்பது அழிந்தாலும், மெய்ப் பொருளை உணர்ந்திட நமக்குள் நாமே வினா எழுப்பி விடை காண முயல்வதென்பது தனிப்பட்ட ஒரு விஷயமாகும். இது அதே மனத்தின் மற்றோர் அம்சமாகும். இந்த இரண்டு அம்சமும் சேர்ந்தே மனத்தில் உள்ளன. ஆனால் இவை இரண்டும் ஒரே சமயத்தில் செயல்படமாட்டா. இவற்றுள் ஏதேனும் ஒன்று அடங்கினால்தான் மற்றது செயல்பட முடியும். முதலாவ தாகக் கூறிய அம்சம் யோக சூத்திரங்களில் 'வ்ருத்தி ஸாரூப்யம்' என்று குறிப்பிடப்படுகிறது ; அதாவது, உண்மையல்லாத ஏதோ கற்பனையில் திளைத்து, 'இதை விரும்புவதா?', 'அதை விரும்புவதா?' என்பதைத் தீர்மானிக்கும் மனப்போக்கைக் குறிப்பது அது. மற்ற அம்சத்தை 'வ்ருத்தி நிரோதம்' என்பார்கள் ; கண்டபடி செல்லும் போக்கு இன்றி அடங்கி நிற்கும் மனம், பரம்பொருளின் நுண்ணிய செயலாற்றல் காரணமாக அந்த அமைதியிலும் எப்போதும் விழிப்புடன் இருந்திடும் நிலையைக் குறிப்பது இது. இந்த இருவித நிலைகளும், இருவேறு பிரக்ஞை (உணர்வு) நிலையை ஊக்கி, இயங்க வைக் கின்றன. இவை மிகவும் ஈடுஇணையற்ற முறையில் சுருக்க மாகப் பதஞ்சலி எழுதிய 'யோக சூத்திர'த்தில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

'வ்ருத்தி ஸாரூப்ய'த்தினால் உண்டாகும் பிரக்ஞையின் (உணர்வின்) இயக்கத்தைச் 'சித்த நதி' என்பார்கள். இது

கால-ஓட்டத்தோடு பொருந்தி இந்த உலக வாழ்வில் உண்மை - பொய்ம்மை, நன்மை-தீமை முக்கியம்-முக்கியமின்மை, கால எல்லையைக் கடந்தது-கால எல்லைக்கு உட்பட்டது என்பவற்றி னிடையே உள்ள வேறுபாட்டை அறிந்திட விரும்பாமல் செல்வது. இந்த நிலையில் முடிவற்ற பாவமும் துன்பமுமே மிஞ்சுகின்றன.

மற்றது (வ்ருத்தி நிரோதம்) உயரிய பிரக்ஞை நிலையாகும். 'யாவும் வீண்' என்று தீர்மானிக்கும் நிலை இது. 'உண்மை எது?' என்று அறியாததால் விளைந்த தவறான போக்கில் மனம் செல்லும்போது, முற்றும் விடுபெற்ற இயல்புடையதாய், 'எது முக்கியமானது?', 'எது முக்கியமற்றது?' எனக் கண்டறி யும் உயரிய மனப்பாங்கே இது. மனிதனைப் பரம்பொருளின் படைப்பாற்றல் தோன்றுமிடத்துக்கே கொண்டு விடுகிறது இது. எல்லா உயிர்களும் நலம் பெற வேண்டும் என்ற விருப்ப மாக இது மலர்கிறது.

முதலில் குறிப்பிட்ட உலக இயல்பின்படி அமைந்த மன ஓட்டத்தை ஞானேசுவரர், 'மாயா நதி' என்கிறார். இது தன்னைத் தானே ஏமாற்றிக்கொண்டு மாயையில் சிக்குண்டு உழலும் நிலையதாகும். இதனைக் கிருஷ்ணரே உரைக்கும் ரீதியில் ஞானதேவர் பின்வருமாறு விளக்குகிறார் :

''நீரில் பாசிதோன்றிப் படர்ந்து நீரையே மறைத்து விடுவதைப் போலவோ, வானத்தில் மேகங்கள் தோன்றி அந்த வானத்தையே மறைத்துவிடுவது போலவோ, உறக்கத்தில் கனவு கண்டு நாம் பார்ப்பது உண்மையே என்று எண்ணுவது போலவோ, ஒருவன் தன்னைத் தானே முற்றும் மறந்துவிடும் படி செய்கிற மனஓட்டம் அது.

''முக்குணங்களான ஸத்வம், ரஜஸ், தமஸ் (நல்லறி வுடன் கூடிய உயர்பண்பு, உணர்ச்சிமிக்க பண்பு, அஞ்ஞான இருள்மலிந்த பண்பு) என்பவை கொண்ட நிழலுலகு அது. என்னிடமிருந்தே தோன்றினது அது. என்னைப் பிறர் காண இயலாதபடியும், உயிர்கள் என்னை அறிந்துகொள்ள முடியாத படியும் மறைத்து நிற்கிறது அது. என்னிடமிருந்தே அவ் வுயிர்கள் தோன்றினாலும் என்னை விட்டுப் பிரிந்தே இருக் கின்றன. ஆயினும், நான் அந்த உயிர்களாகமாட்டேன். அவற்றில் என்னைக் கண்டிட முடியாது. நீரின் சேர்க்கையால், சிப்பியில் விளையும் முத்து அந்த நீரில் கரைய இயலாது இருப்பது போல் இவ்வுயிர்கள் என்னிடமிருந்து தோன்றினாலும்

பிரிந்து நிற்கும் நிலையில், மீண்டும் என்னுடன் இணைய இயலாமல் கிடக்கின்றன. எனவே, என்னிடமிருந்து பிரிந்த உயிர்கள் என்னில் ஒரு பகுதியாக விளங்குவதில்லை. அவை என்னால் படைக்கப்பட்டவையேயாயினும் என்னைப்பற்றிய மெய்யறிவு இல்லாமல் இருக்கின்றன. இந்த அறியாமைக்கு ஒரே ஒரு காரணந்தான் உண்டு : அது, 'நான்-எனது' என்ற அகந்தை உணர்வுதான் ; அதாவது, இந்தவித அகந்தை காரண மாக, மக்கள் பிடிவாதமாகவும் குருட்டுத்தனமாகவும் பொருள் களின்மேல் பற்று வைத்திருப்பதுதான்.

''இந்த நிலையில் இவ்வுயிர்களை நானே படைத்திருப்பினும், எதையும் அறிந்திடும் உணர்வை இவற்றுக்கு நான் தந்திருப் பினும், சிந்தனைச்சக்தி கொண்ட மனத்தைத் தந்திருப்பினும், பகுத்துணரும் மெய்யறிவு இல்லாததால், எப்படி இவை 'மாயை' என்னும் ஆற்றலைக் கடந்து என்னை நேருக்குநேர் சந்திக்க முடியும்? இவ்வாறு (மாயை என்ற) அந்த ஆற்றலில் சிக்கி, அதன் விரைவான நுண்ணிய ஓட்டத்தில் உந்தி அடித்துச் செல்லப்பட்ட உயிர்கள், முரண்பட்ட போக்கினால் வேறு வேருகப் பிரிந்துவிடுகின்றன. ஒன்று, இந்த உலகில் பொருளின்மீது பற்றும், இன்ன செயல்களை நடத்திக் காட்ட வேண்டும் என்ற அவாக் கொண்டு அவற்றில் பற்றும், ஈடுபாடும் கொண்ட போக்காகும். மற்றது, உலகப் பொருள் எவற்றின்மீதும் பற்றின்றித் துறவு பூணும் மனப்போக்கு. முதலில் குறிப்பிட்ட உள்ளும் புறமும் முரண்பட்டுத் தவிக்கும் நிலையில், அந்த உயிர்கள் பின்னால் தம்மைத் துன்பங்களி னின்றும் விடுவித்துக்கொள்ள முயல்கின்றன. 'யோக சூத்திர'த் தில் கூறியபடி யமம், நியமம் என்ற கட்டுப்பாடுகளான அரண் கொண்ட நகரங்களைத் தம்முள் அமைத்துக்கொள் கின்றன. ஆனால் இத்தகைய வலிமை மிக்க அரண் கொண்ட (அக) நகர்கள், 'தான்' என்ற அகந்தையையே ஆதாரமாகக் கொண்டவையாதலால், மாயா நதியின் பெருவெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுகின்றன.

''இப்படியெல்லாம் மனிதர்கள் முயல்வது, வியப்புக்குரிய தாகும். இவ்வாறு பலவிதமான அரிய உபாயங்களால் 'தான்' என்ற அகந்தையின் துணைகொண்டு தங்கள் பிரச்னைகளை மனிதர்கள் தீர்த்துக்கொள்ளப் பார்த்தாலும் அவை மேன் மேலும் தீர்க்க முடியாத தொல்லைகளாகவே மாறிவிடுகின்றன.'' (அத்தியாயம் 7)

இதனுலேதான் ஞானதேவர் 'தான்' என்பதை அடிப் படையாகக் கொண்ட மனித முயற்சிகளை (அவை பழைய சித்தாந்த மரபுகளாகவும், தெய்வ வழிபாடாகவும், யோகம்-தியானம் போன்ற பெயர்களாலும் கடைப்பிடிக்கப்பட்டாலும்) கண்டிக்காமல் விடுவதில்லை. தான் என்ற அகந்தை கொண்ட மனத்தினின்று தோன்றிய வாதங்களைக் கூரிய கத்தி கொண்டு நறுக்குவது போல் கண்டதுண்டமாக்கி விடுகிருர். எந்தத் துறையில் இத்தகைய கருத்துக்கள் தோன்றினுலும் சரி, என்ன தான் அந்தக் கருத்துக்களுக்குச் சமூகத்தில் மதிப்பும் மரியாதை யும் இருந்தாலும் சரி, அவர் அவற்றை விட்டுவைக்கவில்லை. இப்படி நேருவதற்குக் காரணம், உலக இயல்போடு பொருந்திய உணர்வுடன் செய்யும் முயற்சிகள் யாவும் முரண்பாட்டையும் துன்பத்தையும் மிகுதியாக்கியே தீருவதுதான்.

''இந்த நிலையில் எளிய மக்கள் என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்களேன்'' என்று அர்ஜுனன் திகைப்புடன் வினவு கிருன்.

ஞானதேவரது அருள்மொழி மூலம், பகவான் கூறுகிருர்: ''என்னை ஏன் நீ கேட்கிருய்? நீதான் இந்தப் போரில் ஈடுபடப் போவதில்லை என்று தீர்மானித்துவிட்டாயே! இந்த உறுதியான முடிவு வந்ததற்கு, எல்லாம் கற்றறிந்தவனைப்போல் காரணங் களும் கூறிவிட்டாயே! அப்படியும் நீ ஏதோ குழப்ப நிலையில் இருப்பதாகச் சொல்லி, அதிலிருந்து விடுபடும் வழியைக் காட்டும்படி என்னைக் கேட்கிருயே! ஏன் இப்படித் தோன்று கிறது என்று உன்னையே கேட்டுப் பார்த்துக்கொள். உனக்கு நெருங்கிய உறவினர்களையும் அன்பர்களையும் இந்தப் போரில் கொல்ல வேண்டியிருப்பது பாவம் என்று சொன்னுயே; இவர் களில் சிலரை ஞானிகளாகவும், தர்மத்தைக் கடைப்பிடிப்பவர் களாகவும் மதித்துப் போற்றுகிருய்; உனது மதிப்பிற்குரிய அந்த ஞானிகள் போரில் கொல்லப்பட்டால், தர்மமே அழிந் தொழிந்து கலவர நிலையே ஏற்படும் என்கிருய். இத்தகைய அர்த்தமற்ற போரில் வெற்றி அடைவதென்பது பயனற்ற ஒன்று என்றும் சொல்கிருய்! 'தர்மத்துக்கு முரணுனது இந்தப் போர். நானே மடிந்துபோனுலும் சரி, எனக்குப் பெயரும் புகழும் வராவிட்டாலும் சரி, இந்தப் போருக்கு உடன்படமாட்டேன்' என்கிருயே!

''எப்போதிலிருந்து இவர்கள் எல்லாரும் உனக்கு நெருங்கிய அன்பர்கள் ஆகிவிட்டார்கள்? உங்களுக்குள் சச்சரவு நேர்ந்த

போது, அமைதியான முறையில் அதைத் தீர்க்க உடன்படாமல் அவர்களுடைய தலைவன் திமிருடன் நடந்துகொண்டானே; நீ மதித்துப் போற்றுபவர்களும் கண்மூடித்தனமாக அவனை ஆதரித்தார்களே; அப்போது இவர்களெல்லாரும் உனக்கு நெருங்கியவர்களாகப் படவில்லையா? மனித முயற்சிக்கும், உலக நலனுக்கும் மீறி ஏற்படும் விதியின் வலிமையால், போர் நடந்தே தீரவேண்டும் என்ற நிலையாயிற்றே இது! தீரமும் அறிவும் மிக்க உன் சகோதரர்களுடன், உன் சக்திக்கு அப்பாற்பட்ட விதியின் வலிமையால் ஒன்றும் செய்யமுடியாத நிலையில், நீ போரில் ஈடுபட இணங்கவில்லையா? இப்போது திடீரென்று ஏன் நடுங்குகிறாய்?

''நீ இவர்களைக் கொல்லாவிட்டால், இவர்கள் என்றென்றும் வாழ்வார்கள் என்றுதான் நினைக்கிறாயாக்கும்? பிறப்பு-இறப்புத் துன்பங்களின் ரகசியத்தையும் சாவா நிலையையும் அறிந்து விட்டவனாகக் கருதி இவ்வளவு உறுதியுடன் பேசுகிறாயே; அதோடு நீ போரில் ஈடுபட்டு உயிர்க் கொலை புரியாவிட்டால் தர்மத்தை ஓங்க வைத்து நிலைநிறுத்திவிட முடியும் என்று எண்ணுகிறாயே!

''தர்மம் என்றால் என்ன என்று உனக்குத் தெரியுமா? இந்தப் பிரபஞ்சத்தையே அடக்கி ஆளும் தெய்வ நியதியே யாகும் அது; உன் போன்று, 'தான்' என்ற அகந்தையில் உழலும் மனிதர்கள் செய்யும் முடிவின்படி ஏற்பட்டதுமன்று; இப்படியெல்லாம் நிலைநிறுத்தப் பெறுவதுமன்று. நேரான வழியில் செல்லும் பகுத்தறிவு அல்லது விவேகம் என்ற ஒன்று இருக்கிறது. எதையும் நேரிய முறையில் கடைப்பிடித்து அந்தப் பகுத்தறிவுடன் நடந்துகொள்ள வேண்டியது உன் பொறுப்பு. அப்படி இருந்தும் நீயோ சிருஷ்டிகர்த்தாவான இறைவன் என்று உன்னை எண்ணிக்கொண்டு 'போரிட வேண்டாம்' என்ற முடிவுக்கு வந்துவிட்டாய்! அகந்தை கொண்ட அற்பஜீவனான நீ உன்னை வருத்தும் வேதனையினாலும், ஏக்கத்தாலும் அறியவொண்ணா அந்தப் பரமாத்மனுக்கு ஈடாக உன்னை எண்ணிக்கொண்டிருக்கிறாய்! நீயாகவே இப்படிப் போரிடாமல் இருந்தால், மக்கள் மடியாமல் காப்பற்றப்படு வார்கள் என்றும், போகப்போக எல்லாம் சரியாகிவிடும் என்றும் எண்ணிக்கொண்டிருக்கிறாய்! போரில் ஈடுபட்டால் மக்கள் அழிந்துவிடுவார்கள் என்றும் எண்ணுகிறாய்! 'நாம் நோக்கு மிடமெல்லாம் நம்மது; அனைத்துக்கும் நாமே அதிகாரி' என்பது உன் கருத்து. இப்படிப் பரந்து, ரகசியம் குடிகொண்

டிருக்கும் உலகம் உன் ஆணைக்கு அடங்கியே நடப்பதாகவும், வேறு எதனாலும் நடக்கவில்லை என்பதாகவும் எண்ணிக் கொண்டிக்கிறாய்! அகந்தை காரணமாக, ஏதோ நல்ல முடிவுக்கு வந்துவிட்டதாக நினைக்கிறாயே, உனக்கு எத்தகைய அடாத துணிச்சல் - திமிர் - உள்ளது, அப்பனே!'' என்றெல்லாம் கேட்கிறார் பகவான்.

இதனாலேதான் அகந்தையெல்லாம் அடங்கிட, போரிடாமல் இருப்பது என்று தான் தீர்மானித்தது தவறு என உணர்கிறான் அர்ஜுனன். இருப்பினும், போரிடுவதனால் மக்கள் படுகொலைக்குள்ளாவது பொருந்தும் என்ற கருத்துத்தான் அவனுக்குப் புரியவில்லை. இந்த நிலையில் அவன் பகவானிடம் சரணடைந்து, தனக்கு மெய்ஞ்ஞான ஒளி அருளுமாறு வேண்டுகிறான். அப்போது, அவர், அவனெதிரே விசுவரூபம் எடுத்துக் காட்சி தருகிறார்; அந்த நிலையில், ''அர்ஜுனா! நீ முன்பு பெருத்த ஏக்கத்துடன் கீழே எறிந்த வில்லை மீண்டும் ஏந்திடுவாய்'' என்கிறார். இந்த கீதோபதேசம் ஆதிமுதல் சர்ச்சைக்குரியதாயும், ஆழங் காண முடியாத நிரந்தர ரகசியமாகவும் உள்ளது. மக்கள் தங்கள் ஆன்மாவுக்குள்ளேயே இதற்கு விடை கண்டு தெளியும் வரைக்கும் இந்த நிலை இருந்தே தீரும். தங்களுக்குள் சிந்தித்தும், உணர்ந்தும் மனப்பூர்வமாக முடிவெடுத்தும் ஆக வேண்டும்; ஏன் இப்படியெல்லாம் உணர்கிறோம், சிந்திக்கிறோம், முடிவு செய்கிறோம் என்றும் கண்டறிய வேண்டும்; தாங்கள் என்றும் சுதந்தரமாகவும் பகுத்தறிவுடனும் நடந்துகொள்கிறார்களா, அற்பமான விருப்பு–வெறுப்புகளின் தூண்டுதலினால் குருட்டுத்தனமாக நடந்துகொள்கிறார்களா என்றும் அவர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும். இப்படி அடிப்படையிலேயே தனக்குள் தானே வினவியும் அறைகூவல் விடுத்தும் செயல்படுவதுதான் யோகத்தோடு பொருந்திய விழிப்பு நிலை. இந்த நிலையில்தான் கிருஷ்ணர், அர்ஜுனனுக்கு ஒரே சொல்லில் கீதையின் சாரத்தை விளக்கியிருக்கிறார்; அதுதான் யோகம் என்பது. ஞானதேவருடைய உரையின தனிச்சிறப்பு இதுதான்: அவர் கிருஷ்ண பகவானுடைய உபதேசங்களை யோகத்தின் வாயிலாக அணுகி, விரித்துரைப்பது தான்; வெகு சாமர்த்தியமாய் அகந்தையை அடிப்படையாகக் கொண்டு 'அறிவு' என்று சொல்லுகிறோமே அந்தப் போலி ஞானத்தால் எடுத்துரைக்கும் விளக்கம் அல்ல அது!

கிருஷ்ணபகவான் முதலில், 'அர்ஜுனனது ஏக்கத்தின் தன்மை இன்னது, அது அகந்தையை அடிப்படையாகக் கொண்டதனாலும் அதன் மூலம் வரும் குழப்ப மனநிலை

யினுலும் ஏற்படுவது என்பதை விளக்கிக் காட்டுகிருர். பிறகு அவர், மனிதனின் அந்தரங்கத்தில் அமைந்த 'ஆத்மன்' அல்லது உட்பொருளின் தன்மையை இவ்வாறு விளக்குகிருர்:

''பிறப்பு-இறப்பு இரண்டும் வெளிப்படப் புலனுகாத நிலையிலிருந்து புலனுகும் நிலைக்கு மாறுவதாலும், மீண்டும் அதேபோல் புலனுகும் நிலையிலிருந்து புலனுகாத நிலைக்கு மாறுவதாலும் விளேபவை. எனினும் இந்த இருவகை மாறுதலின்போதும் 'ஆத்மா' என்பது தனித்தே நிற்கிறது. மொத்தமாக நோக்குங்கால் நாம் இன்ன நிலையில் வாழ்கிருேம் என்பதைக் காண்பவன் துன்பம் பற்றியோ இன்னல்பற்றியோ கவலைப்பட மாட்டான்; 'ஸ்வதர்மம்' அல்லது தனக்கு இயல்பான அறநிலையை ஆதாரமாகக் கொண்டு, தான் யார் என்பதை உணர்ந்த விழிப்புநிலையில் இருப்பான். அப்போது மொத்த ஜீவன்களுடன் இணைந்து செயல் புரிவான்; இப்படி இணைந்து வாழும் வாழ்வு (ஒப்புரவொழுகல்) கண்டவன், ஆற்றல் மிக்கதாய், எப்போதும் மாறிக்கொண்டிருக்கும் பிரபஞ்ச சக்தியான 'விசுவதர்மம்' எதையும் சமநிலையில் வைத்திடுவதால் துயரம் முதலியவற்றுக்கு உள்ளாக மாட்டான். இப்படித் 'தான் யார்?' என்ற விழிப்புணர்வானது, பந்தங்கள் அனைத்தினின்றும் விடுபெற்ற காரணத்தால், நம்பிக்கையையோ ஏமாற்றத்தையோ ஆதாரமாகக் கொண்டுள்ள அகந்தையின் நிர்ப்பந்தத்தால் பாதிக்கப்படுவதில்லை; உள்ளுணர்வினுல் இன்னது செய்தாக வேண்டும் என்ற நிலை தோன்றுவதால் செயல்படுகிறது அது. பயனை எதிர்பாராமல் இத்தகைய வாழ்வு நிலையின் உண்மையைக் காண்பதுதான் பகுத்தறிவுடன் கூடிய செயலாகும்; போலிப் பகுத்தறிவினின்றும் பிரித்துணர வேண்டிய ஒன்று அது. வாழ்வு இன்னதென உணர்ந்து புரியும் செயல் சுதந்தரமானது; பயனை எதிர்பாராதது. அது ஒருவனை இறைவனும் மெய்ப்பொருளின் முன் நேருக்கு நேர் கொணர்ந்துவிடுகிறது. அதுவே 'புத்தி யோகம்' ஆகும்; அதுவே கர்மயோகமாக மலர்கிறது. இரண்டும் ஒன்றேதான். இதனை அறியாத மூடர்கள் இதைப் பிரித்துத் துயருக்கு ஆளாகிருர்கள்.''

புத்தியோகம், கர்ம யோகம் இவற்றின் தன்மையை அர்ஜுனனுக்கு இவ்வாறு விளக்கியதும், பகவான் அவனை நோக்கி, ''ஆகையால், அர்ஜுனு, நீ யோகியாக - மனம் ஒன்றி இணைந்தவனுக-இருந்திடு. யோகிகளுக்குள் எவனெருவன் இப்படி மனம் ஒன்றிய நிலையினுல் என்னுடன் இரண்டறக்

கலக்கிருனே அவனே உண்மையான யோகி ஆவான் ; எவன் தன்னுள் இப்படி நான் இருப்பதை உணர்ந்து, விழிப்பு நிலையில் இருக்கிருனே, அவனே எனக்கு மிகவும் பிரியமானவன்'' என்கிருர்.

''இத்தகைய யோகிதான் இறைவனுக்கெல்லாம் இறைவன். அவன் என்னுள் உறையும் எல்லா இன்பத்தையும் உணர்ந்து, பேரானந்தம் அநுபவிப்பவன். அவனே சைதன்யம் அல்லது எல்லா வகையான நுண்ணறிவின் உருவம் ஆவான். இத்தகையதான யோகம் அல்லது ஒன்றிய நிலையில் (திவ்வியக் காதலரான பரமாத்மன் - ஜீவாத்மன் என்ற) தலைவன்–தலைவியரிடையே தளிர்க்கும் பிரேமை அல்லது அன்பு யாவும் இணைந்து, தனிச்சிறப்புள்ள ஒன்ருகி, அவன்மூலமாக ஒளிர்கிறது. அப்போது எனக்கும் அவனுக்குமிடையே வேற்றுமை ஏதுமில்லை. இப்படிப்பட்ட ஒன்றிய நிலை வாய்ச் சொற்களால் விவரிக்க வொண்ணுதது. இதற்கு ஒரே ஓர் உவமைதான் கிட்டத்தட்டப் பொருந்தும். அதாவது, 'நான் உடல், அவன் ஆத்மா' என்று கூறுவது போன்றதாகும்.'' தமது கீதை உரையில், ஞானதேவர் இறைவனின் உபதேசத்தை இப்படி விளக்கியிருக்கிருர்.

ஞானதேவருடைய ஒப்பற்ற இந்த உரைவிளக்கம் 'ஞானேசுவரி'யின் 6-ஆம் அத்தியாயத்தில் உள்ளது. யோகத்தைப் பற்றி இதில் ஈடு இணையற்ற முறையில் அற்புதமாக அவர் விவரித்திருக்கிருர். இந்த அரும்பெரும் யோகத்தின் நிலை பெற்ற நறுமணம், அவருடைய கீதை விளக்கத்தில்மட்டுமன்றி, அவர் எழுதிய எல்லா நூல்களிலுமே பரிமளிக்கிறது.

வியாசர் கண்டு தெளிந்து எழுதிய மூல நூலான கீதோபதேசம் இதோடு முடிகிறது. மராட்டி மொழியில் 1967-இல் டாக்டர் ஜி. எஸ். காய்ர் வெளியிட்டிருந்தது இந்தக் கருத்து : ''வியாசருடைய மூலகீதை முதல் ஆறு அத்தியாயங்களோடு முடிகிறது. பெயர் தெரியாத இரண்டு ஆசிரியர்கள் பின்னல் முறையே முதலில் ஆறு அத்தியாயங்களையும் பின்னல் ஆறு அத்தியாயங்களையும் சேர்த்தார்கள்'' என்பதே அது. எனவே, மூலகீதை இன்னதுதான் என்று அறுதியிட்டுக் கூற இயலாது. பல சான்றுகளின்மூலம் இந்தக் கருத்தை எடுத்துக் காட்டிய டாக்டரின் கூற்றை எளிதில் புறக்கணித்து விடுவதற்கில்லை.

# அநுபவாம்ருதம்

**ப**டைப்பாற்றலுடன் சிறந்து விளங்கும் அரும்பெரும் நூலான ‘கீதை விளக்க’த்தை - ‘ஞானேசுவரி’யை - எழுதி முடித்ததும், ஞானேசுவரருக்கு நிறைவான மகிழ்ச்சி ஏற்படுவதற்கு மாறாக ஒருவிதமான மனத் துயரமே மூண்டதாம். ஞானதேவருடைய குருவும் தமையனாருமான நிவ்ருத்திநாதர், ‘‘உனக்கு ஏன் இந்த மனச் சோர்வு ?’’ என்று கேட்டாராம்.

‘‘தர்மம் இன்னது, கர்மம் இன்னது என்று மக்கள் அறிந்துகொள்ள, கீதையின் உட்பொருளை விளக்குவதற்கு என்னால் ஆனவரையில் முயன்றிருக்கிறேன். பிறப்புமுதல் இறப்புவரையில் தங்களையும் தாங்கள் புரியும் செயல்களையும் அவர்கள் எவ்விதம் நோக்க வேண்டும் என்றும் அதில் விவரித்தேன். வாழ்வில் எதிர்ப்படும் அறைகூவல்களை மக்கள் எப்படி எதிர்நோக்கிச் சமாளித்திட வேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறேன். என்னால் இயன்றவரையில் மிகவும் சிரத்தையுடன் நன்றாகவே எழுதியிருக்கிறேன் ; இது எனக்கும் தெரிகிறது. என் உரையைப் படிக்க விருப்பம் உள்ள எல்லாருடைய உள்ளத்தையும் மாற்ற முயன்றிருக்கிறேன். தாங்கள் இதுவரை, ‘எது நிலைத்தது’ என்பதை உணராத நிலையினின்று, வாழ்வின் அற்புத ஆற்றலையும் மனித விதியின் இத்தகைய போக்கையும் அவர்கள் உணரும் நிலைக்கு மாறும்வண்ணம் எழுதியிருக்கிறேன். ஆனால் தலைமுறை தலைமுறையாக வரும் மக்கள் எனது சொல்லலங்காரத்தைக் கண்டு, அதன் அழகில் மட்டும் நாட்டம் கொள்ளுவார்கள். ஆனால் ஆத்யாத்மிகத் (ஆன்மிகத்) துறையில் தான் யார் என்பதை உணர்வதற்குத் தொடக்கமான விழிப்பு நிலையினை - அகந்தையையே அடிப்படையாகக் கொண்டதற்கு மாறானதும் எவ்விதம் நோக்கிலும் தூய்மையானதுமாகிய விழிப்பு நிலையினை (பகவத் கீதை எடுத்துக் கூறும் உட்பொருளைக் கூர்ந்து அறியும் நிலை இது) - அவர்கள் அறியத் தவறிவிடுவார்கள். என்னுடைய கீதை உரையில், ‘கீதைக்கே பெருத்த இழுக்காகுமோ?’ என்று அஞ்சி, எனது சொந்தப் போக்கை அடக்கிக்கொண்டு வியாசரையே பின்பற்ற வேண்டியிருந்தது. அடக்க முடியாமல் பீரிட்டெழும்

என் உள்ளக் கருத்தை சில சமயம் சொல்ல முற்பட்டாலும், மெய்ப்பொருளுக்கும் எனக்குங்கூடத் திருப்தி ஏற்படும் வகையில் நான் நடந்துகொண்டேனு என்ற விஷயத்தில் ஐயமே கொள்கிறேன். அதனுலேயே எனக்கு இந்த மனச் சோர்வு மூண்டது'' என்றுராம் ஞானதேவர்.

நிவ்ருத்திநாதர், ஞானதேவருடைய இந்தச் சங்கடநிலையை உணர்ந்தார். ''நீயே உன் விருப்பம்போல், தங்குதடையின்றி உன் ஆத்ம அநுபவத்தை எழுது'' என்று கேட்டுக்கொண்டார். இந்த விதமாகத் தோன்றியதுதான் ஞானதேவருடைய 'அநுபவாம்ருதம்' என்ற நூல் (இதை 'அம்ருதாநுபவம்' என்று பொதுவாகக் கூறுவார்கள். ஞானதேவரோ 'அநுபவாம்ருதம்' என்றுதான் குறிப்பிடுகிருர்). அழிவில்லாத சொந்த அநுபவம் என்ற காரணத்தால் வந்த பெயர் இது.

இந்த அநுபவாம்ருதம் என்பது என்ன? ஒருவரும் அதைப் பற்றிக் கூறமுடியாது. தம் சொந்த அநுபவங்களேயே கூர்ந்து காண்பவர்களாலேயேதான் - வேறு எதையுமே கருதாமல் என்றென்றும் ஒளிர்ந்திடும் உண்மையையே கூர்ந்து நோக்குபவர்களாலேதான் - அதைக் கூற முடியும் போலும்! அப்படி இருந்தாலும், அதை ஞானதேவருடைய சொந்த அநுபவாம்ருதத்துக்கு ஈடாகக் கூறிவிட முடியாது. அதனுல் என்ன? முன் சொன்னபடி அவர்களது ஆத்மாநுபவமே முந்தைய (வாழ்க்கை அநுபவங்களோடு பொருந்தியிருந்த நிலையை (குழந்தை பிறந்ததும் முந்தித் தாயின் வயிற்றில் இருந்தபோது பொருந்தியிருந்த கொப்பூழ்க் கொடியைக் கத்தரித்துத் தனியே பிரிப்பது போல்) அறுத்தெறியவாவது, அதோடு எல்லாவற்றையும் துறந்து நிம்மதியாகச் செல்லவாவது பயன்படுமில்லையா? இதனுல் ஞானதேவருடன் பொருந்தி இணைந்துவிட வாய்ப்பு உண்டு. இந்த மாதிரி இணைவதுதான் எப்போதும் நம்மைப் பிரித்திடும் 'நான்' (அஹம்), 'அது' (தத்) என்ற வேறுபாட்டு உறவை அகந்தையற்ற 'நான்', 'நீ' (த்வம்) என்ற நெருங்கிய உறவாக மாற்ற வல்லது. இதுதான் மிகவும் முக்கியம். இந்த நிலையில் ஞானிகள் சொல்வதுபோல், 'பிரேமை அல்லது பேரன்பும் மற்ற யாவும் நமக்குக் கிட்டும். இந்த அன்பே இணைந்து செயல்படுவதற்கு இன்றியமையாததாகும்; உயிர் மூச்சுப் போன்றதாகும்.'

இத்தகைய அன்பை ஆதாரமாகக் கொண்டுதான் ஞானதேவர் தம் 'அநுபவாம்ருத'த்தை வெளியிடுகிருர். அது

எத்தகைய அன்பு தெரியுமா? ஒளிமிக்க படைப்பாற்றலுடன் ஞானதேவர் அன்பு அல்லது பிரேமைபற்றிக் கூறும்போது அதற்கு ஈடான ஒன்றை, உலக இலக்கியங்களில் காண முடியாது எனலாம். அவருடைய வாய்மொழி வாயிலாகவே இதை அறியலாம் :

''ஏதுமில்லாத மிகப் பரந்த வானவெளியிடையே பேரழகு பொருந்திக் காணும் ஒரு நிலையில் அன்பு முற்றும் குவிந்து, முழுமுதற் பொருளின் ஆற்றலில் ஈடுபடுகிறது. அந்த நிலை தான் எத்தகைய விந்தையான நிலை! அன்பு அந்நிலையில் உடனே நாயகனும் நாயகியுமாய் - தலைவனும் தலைவியுமாய் (பரமாத்ம ஜீவாத்ம ஐக்கியமாக) - இணைந்து காண்கிறது. தலைவன் அல்லது நாயகனே நாயகியுமாகிவிடுகிறான். ஒன்றாக இருந்தது இரண்டாகிறது; இரண்டையும் ஒன்றில் காணும் அற்புத நிலை இது. இப்படி ஒருவரே இருவராக அமைந்திடும் போது பரஸ்பரம் அன்பு செலுத்த நேருகிறது. அப்போது அந்த அன்புநிலையில் நாயகன் நாயகியை நோக்கித் திரும்புகிறான்; அதற்குப் பின் அவர்களிடையே தோன்றும் தீவிரமான அன்பு அவர்களிருவர் உள்ளத்தில் புகும் அளவுக்கு வந்துவிடுகிறது; ஒருவர் வடிவத்தை மற்றவர் அப்படியே விழுங்கி விடுவது போன்று அவர்கள் இரண்டறக் கலக்குமளவுக்குக் கொண்டு விடும் நிலை இது. இது நிகழும்போது இருவரும் ஒன்றாகி விடுகின்றனர். ஆனால் மறுபடியும் அந்த ஒன்றுபட்ட தன்மை இரண்டாகிவிடுகிறது. இப்படி நாயகனும் நாயகியும் மாறி மாறி ஒன்றுபட்டும் இரண்டுபட்டும் அன்பின் ஆற்றல் முடிவில்லாமல் நீடித்து வருகிறது. இந்த அன்பின் அற்புத விளையாட்டு விநோதமானதுதான். அது ஒன்றாக இருக்கும் போதேகூட ஒன்றுதான் என்று சொல்லமுடியாதபடி இருப்பது. ஏனென்றால், இவ்வாறு ஒன்றி இணைந்த நிலையை அவ்வாறு கூறுவதற்கு, முதலில் ஏதும் புலப்படுவதில்லை. நாயகனும் நாயகியும் இருவராய் இருந்திடும்போது இந்த நிலை அவர் களுக்கு மிகவும் குறுகிய எல்லைக்கு உட்பட்டதாகப் படுகிறது. இப்படி ஓர் எல்லைக்கு உட்படுத்திப் பிரித்து வைக்கும் போக்கினை மாற்றி, இரண்டுபடும் தன்மையிலேயே பேரின்பம் துய்க்கும்படி ஒன்று கலந்துவிடுகிறார்கள். இவர்கள் இவ்விதம் அன்பு செலுத்தும்போது நாயகனும் நாயகியுமான பலவித உருவங்களில் தோன்றி மறைகிறார்கள். ஆனால் இவர்கள் இப்படி நாயகனும் நாயகியுமாய்த் தங்களுள் எடுக்கும் பல வடிவங் களிடையே இவர்களை இன்னவராக (நாயகனாகவோ நாயகி யாகவோ) விளங்குகிறார்கள் என்பதைக் கண்டிட முடியாது.

தமக்கு தாமே இப்படி மாறி மாறி ஒன்றுபட்டும் இரண்டு பட்டும் நாயகனும் நாயகியும் (பரமாத்மாவும் ஜீவாத்மாவும்) பேரின்பம் துய்க்க விளையாடும் விளையாட்டைச் சாமான்யமான தென்று கூற முடியும்?

இவர்கள் ஒன்றிணைந்து அன்பு செலுத்துவதால், இவர்களுடைய இருவேறுபட்ட தன்மை மாறி, ஒன்றுபட்ட நிலை ஏற்படுகிறது. பரஸ்பரம் அன்பு செலுத்துவதற்கு இருவர் வேண்டுமென்றாலும், நாயக-நாயகியரான இருவரும் தங்களுள் ஒன்றுபட்டவராய்த் தம் அன்பினைக் குலைக்காமலே (இருவராக) நிற்கிறார்கள்.

பிரிவு என்பதை இவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. ஆனால், இருவர் என்றால், ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிந்திருப்பது என்றுதானே அர்த்தம்? எனவே, இந்தப் பிரிவு நிலையைத் தீர்க்க இருவரும் இணைகிறார்கள். அப்போது ஓர் அற்புதம் நிகழ்கிறது. இந்த நாயக-நாயகியரின் பரஸ்பர அன்பு காரணமாகப் பிரபஞ்சம் என்னும் வலிமையான குழந்தை பிறக்கிறது; என்றாலும், மூன்றாம் தன்மை அங்கே இல்லை. நாயக நாயகியர் முன்போலவே இருவராகவே இருந்து விடுகிறார்களே தவிரப் பலர் ஆவதில்லை.

இப்படிப் பிறந்த இந்தப் பிரபஞ்சம் பலவகையாகத் தோற்றமளித்தாலும் ஆதிநாயக - நாயகியரான இவர்கள் இருவரும் இணைந்த இந்நிலையிலும் 'இருவர்' என்ற தன்மையுடனேயே இருக்கிறார்கள். இந்தப் பிரபஞ்சம் நிறைவுற்றிருப்பதையும், இதன் பலவகைத் தோற்றத்தையும் தம்முள் ஓர் அம்சமாகவே அவர்கள் கருதுவது போன்ற நிலை அது. தங்கள் அன்பினிடையே மூன்றாவதான ஒன்று (உலகு) குறுக்கிடுவதை அவர்கள் விரும்புவதில்லை.

இந்தத் திவ்விய நாயக நாயகியர் இருவரும் ஒரு பரம் பொருளினின்றே தோன்றியவர்கள். இவர்கள் இருவரும் எங்கும் பரந்த பரமாகாசத்தில் மையம் கொண்டு ஒரே சுடரொளி வீசித் திகழ்கிறார்கள். தொடக்கமும் முடிவும் இன்றி, இவர்கள் இருவரும் இணைந்தே என்றும்போல் வாழ்க்கை (சம்சாரம்) நடத்திவருகிறார்கள்.

இரண்டுபேர் என்றால், ஒருவரிடமிருந்து ஒருவர் வேறு பட்டவர் என்றுதானே கொள்ள வேண்டும்? ஆனால் இப்படி இருவேறுபட்டவர் என்ற உணர்வு தோன்றிய அக்கணமே

நாணம் உண்டாகி, அதுவே பேரானந்தப் பேரன்பாகிடப் பிரிவுநிலை மறைகிறது. இன்பம் துய்த்திடத் தேவையான இரு வேறுபட்ட தன்மைகள் பேரானந்தத்திடையே கரைந்துவிடும் நிலை இது.

தெய்வநாயகி தன் நாயகனுடன் இப்படி இணைவதால் பரிபூரண நிலை எய்துகிருள். அன்பு நாயகி இன்றி நாயகன் இருப்பதோ சாத்தியமில்லை. இவ்விதமே ஒருவருடைய வாழ்வுக்கு மற்றவர் இன்றியமையாதவராகிருர்கள்.

இவர்கள் இப்படி அற்புதமாக இணைவதால் ஏற்படும் பேரானந்தம், நிலையற்ற இந்த உலகின் எல்லையையும் மீறி அப்பாலும் பரவுகிறது. மிக நுண்ணிய அணுவிலும் இந்தத் திவ்விய நாயக நாயகியரின் இணைந்த வாழ்க்கை இன்பமாகவே நடைபெறுகிறது. இப்படி அணுவில் அமைந்த சிறு இடமே கூட எண்ணற்ற உலகங்களைப் படைத்தும் இவர்களது ஆற்ற லுக்குப் போதுமானதாகவே உள்ளது.

''இவ்வாறு ஒருவருக்கொருவர் தேவையானவர்களாக விளங்கும் இந்தத் திவ்வியக் காதலர்கள் (ஆதிப் பழம் பொருளும் சக்தியும்) இன்றி ஒரு புல்லின் இலைகூடத் தோன்ற முடியாது. இவர்கள் தமக்கு மட்டுமன்றிப் பிரபஞ்சம் முழுவ தற்குமேகூட உயிர்மூச்சாக விளங்குகிருர்கள்.

''இவர்கள் வாழும் இந்தத் தனி ஓர் இல்லம் இவர்கள் இருவ ருக்குமட்டுமே போதுமானது. திவ்விய நாயகன் அறிதுயில் கொண்டு மறையும்போது, திவ்வியநாயகி, தான் அவனுடன் இருப்பது போலவே கருதும் விழிப்பு நிலையில் உள்ளாள். உலக நடவடிக்கைகள் (சம்சாரம்) நிகழ்ந்துகொண்டிருந்திட, இவர்கள் இப்படி இருந்தே ஆகவேண்டும். இந்த நிலையில், ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டாலும் இவர்களுடைய இந்த வாழ்வு குலைவது மட்டுமின்றி, பிரபஞ்சம் முழுவதும் அழிந்து, எங்கும் சூனியமே நிலவும்.

''இதனுல்தான் இந்த உலகில் மனித சமூகத்தின் அநுபவப் படி ஒவ்வொரு தனி நபரும் (ஜீவனும்) அரைகுறையாகவே இருந்தபடி, தாம் நினைவு பெறுவதற்குரிய மற்ருேர் அம்சமாக உள்ள நபரை (ஜீவனை) என்றென்றும் நாடி நிற்கிருர்கள். இப்படி நிலைபெற்றதொரு பரஸ்பரத் தேவைதான் உலகையே இயங்கவைக்கிறது. தங்களது ஒன்றுபட்ட தன்மையைப் போக்க ஆதிநாயக நாயகியர் ஒருவரையொருவர் விழுங்குவது போன்ற

நிலை இது. இவ்விதம் விநோதமாக ஒன்றுபட்டு நிற்கும் ஆவல் கலந்த ஆற்றலினால் இந்த உலகின் போக்கில் இருவேறுபட்ட தன்மை இருப்பதுபோல் காணப்படுகிறது.

''இந்தக் காதலர்கள் ஒருவருக்கொருவர் தேவைப் பொருளாக விளங்குகிறார்கள்; ஒருவருக்கொருவர் மகிழ்விக்கவே இப்படி இருக்கிறார்கள். நீடித்த மகிழ்ச்சி இருந்தால்தானே தாம் இருவேறானவர் என்ற நிலை அறவே ஒழிந்திடும்? ஆனால் இதனை அறியாத மாந்தர்களோ இருவேறாகவே நின்று முடிவின்றித் துன்புறுகிறார்கள். முற்றும் பற்றற்று வாழ்வை நடத்த விரும்பாமலும், விநோதமான இந்த வேறுபட்ட தன்மையை – அதன் விளையாட்டை - ரசித்து மகிழாமலுமிருப்பதால் வரும் விளைவே இது. எல்லாத் துன்பத்துக்கும் காரணம் இதுவே. பரஸ்பர அன்பினாலேயே தோன்றி, அந்த அன்பிலேயே ஒன்றி இன்பம் காண்பதற்காகவே இந்த வேறுபட்ட தன்மை இருந்து வருகிறது. இத்தகைய அன்பினாலேயே இந்த வேறுபட்ட தன்மை கரைந்து மறைந்துவிடுகிறது என்பதை மக்கள் காணத் தவறிவிடுகிறார்கள்.

''இப்படி உலகம் இருவேறுபட்ட தன்மை கொண்டதாகவே இருந்துவருகிறது. காரணம், உலகில் தோன்றும் ஒவ்வோர் உயிரும் அரை உயிராகவே இருக்கும் நிலையில், தான் முழுமை பெறவேண்டி நின்றிடும் இயல்புதான். உலகில் ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேறுபாடு என்பது இதனையே குறிக்கிறது. அன்பாம் சிவம் அல்லது பூரண நலமாக விளங்கும் பரம்பொருளே எங்கும் ஆட்சி புரிகிறது. இத்தகைய உலகில் ஆண் சிவத்தில் ஒரு பாதியாகவும், பெண் மறுபாதியாகவும் விளங்குகிறார்கள். சிவம் என்பது எண்ணில் அடங்காத ஒன்றாம் பரம்பொருள் அல்லவா ?

''அன்பாகிய காதல் என்பது மனித அநுபவத்திலுள்ள இரு வேறுபட்ட தன்மையை அந்நிலையிலிருந்து மாற்றி ஒன்று படச் செய்துவிடுகிறது; இந்த நிலை, இரண்டும் உள்ளது உள்ளபடியே இருந்து தாம் ஒருமித்து இருப்பதை உணர்வது போன்றதாகும்; இரண்டு தனிக்குச்சிகளை எடுத்து அடிக்கும் போது ஒரே ஓர் ஓசை கேட்பது போன்ற அநுபவமேயாகும் இது; ஒரு செடியின் இரு மலர்கள் ஒரே நறுமணத்தைப் பரப்புவது போன்றது இது; இரண்டு விளக்குகள், ஒரே ஒரு வெளிச்சத்தைப் பரவச் செய்வது போன்றதுமாகும். இப்படி இரு வேறுபட்ட தன்மைகள் தோன்றுவது, முன் சொன்ன ஜோடி

களின் ஒன்றிய ஆக்கத் தன்மையே உணர்த்துகிறது. இத்தகைய ஒன்றிய தன்மை உதடுகள் இரண்டும் அசைந்து ஒலிக்கும் போது ஏற்படும் பேச்சைப் போன்றது; அல்லது ஒரு ஜோடிக் கண்கள் ஒரே காட்சியைக் காண்பது போன்றது; ஆதிக் காதலனும் காதலியும் ஒருவர்பால் ஒருவருக்கு ஏற்படும் கவர்ச்சியாலும், அரவணைப்பாலும் பிரபஞ்சம் முழுவதும் பேரன்பு தோன்றிடுதற்கென்றே இப்படி இருவேறுபட்ட வராய் விளங்குகிறார்கள்.

''இருவராக இருந்தாலும் உடைத்தெறிய முடியாதபடி ஒன்றுபட்ட தன்மை கொண்டது இந்தக் காதலர்களின் அன்பு. இந்த இருவரில் ஒருவரைத் தேடிப் பிடிக்க முயன்றால் முடிவில் நமக்குக் கிட்டுவது ஒரே பொருளான அன்பின் உருவாம் சிவமே. சர்க்கரைத் துணுக்குகளினின்று அவற்றின் இனி மையைத் தனித்தனியே பிரித்திட முடியுமா? கர்ப்பூரக் கட்டியி லிருந்து அதன் நறுமணத்தைப் பிரித்திட முடியுமா? இந்த இருவேறுபட்ட தன்மையை ஒருவன் அடியோடு கிளறிப் பார்த்து அதனை நிரூபிக்க முயல்வது வீண்முயற்சியாகவே முடியும்; கர்ப்பூரத் துணுக்குகளின் நறுமணத்தைப் பிரித்தறியப் பார்ப்பதும் இது போன்றதே.

''நிலைக்கண்ணாடியில் பார்க்கையில் அதில் நம் உருவத்தைக் காண்கிறோம். இப்படிப் பிரதிபலிக்கும் உருவம் நம் முகத்தை யும் அதன் அளவையும் குறித்துக் காட்டுகிறது. பிம்பமும் பிரதிபிம்பமுமாகக் காணும் இரண்டும் அளவில் நம் முகத் துடன் பொருந்தியவையே. ஆனால் இந்தப் பிரதிபிம்பமும் அதன் அளவும் நம் சொந்த முகஅமைப்பில் காண்பனவே யன்றி, சற்றுத் தள்ளி உள்ள நிலைக் கண்ணாடியுள் பொருந்தப் பெற்றிருக்கவில்லை என்பதை நாம் அறிவோம். ஆனால் பிரதி பிம்பமாக விளங்கும் அந்த முகத்தையும், உருண்டு திரண்ட அதன் மொத்தத் தோற்றத்தையும் கண்டு மயங்கி, உண்மை யைக் காண விரும்பி அந்தக் கண்ணாடியைத் தடவிப் பார்த்தால் என்ன ஆகும்? வெறும் சூன்யந்தான் மிஞ்சும். நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வதாகவே முடியும் இத்தகைய முயற்சி.

''இப்படித்தான் ஆதியில் உலகில் மனித இயல்பு பொருள் களின்மீது பேராசையாலும், கவர்ச்சியாலும் இதைக் கண்டறிய வேண்டும். இன்னதைப் பயன்படுத்தி ஆற்றலுடன் வலியவனாக விளங்கவேண்டும் என்றெல்லாம் வீண் முயற்சி யில் இறங்கியதால், தன் உண்மையான ஆண் தன்மையையே இழந்திடும்படி ஆயிற்று. சக்தி அல்லது ஆற்றல் என்றால்

என்ன? ஆத்மா அல்லது மெய்ப்பொருளின் பரந்த தன்மையே யாகும் அது; அதைத் தவருக, குறிப்பிட்ட ஓர் அளவுக்கு உட் பட்டதாகக் கருதி, கட்டுப்படுத்தி வைத்துவிடப் பார்க்கிரும். சக்தி என்பதும், அதற்கு உரியதான சிவம் என்பதும் பிரிக்க முடியாதவை ; இரண்டாகத் தோற்றம் அளித்தாலும் உண்மை யில் அவை இரண்டும் ஒன்றில் அமைந்தவையே. ஆனல் மக்கள் இந்த உண்மை நிலையை அறிவதில்லை. துண்டுதுண்டாக அந்தச் சக்தியின் பல்வேறு அம்சங்களைக் கண்டறிய முயன்று, அம்முயற்சியில் துன்புறுகிருர்கள். தீயினிடம் வெப்ப சக்தி பொருந்தியிருப்பதுபோல் ஆற்றல் அல்லது சக்தியுடன் சிவம் என்ற பூரண நலமும் பொருந்தியிருக்கிறது ; இந்த இரண்டுக் கும் மூலாதாரமாயுள்ளது முழுமுதற்பொருளான பரமாத்மன்; அந்தப் பரம்பொருள் அல்லது பரமாத்மனின்று சக்தியையும் சிவத்தையும் பிரித்திடவே முடியாது.

''மானிடர்களே ! சிவம்—சக்தி இவற்றின் அன்பாம் பேரரவணைப்பில் இருவேறுபட்ட நிலை மறைந்து இரண்டும் ஒன்ருகிவிடுவதையும், அந்த இணைந்த நிலையில் அவை ஒன்றுள் ஒன்ருக அமைந்திருப்பதையும் காணும்போது வியப்பாக இல்லையா? கோடிக்கணக்கான உயிர்கள்-தனித்தனி-ஜீவன்கள் தம்தம் ஜோடிக் கண்களைக்கொண்டு நட்சத்திரங்களே ஒளிராத இருண்ட வானத்தைக் காணும்போது எல்லா வற்றுக்குமே அது இருண்டுதானே காண்கிறது?

''சிவ-சக்திகளின் அன்பு அரவணைப்பைக் காணும்போது கண்களையே குருடாக்குவது போன்ற அந்த இருளில் அக்கண் களே மறைந்து, பேச்சும் கரைந்து, சொல்லொணு அற்புத விளக்கம் தரும் மோனமாக அமைகிறது. தனித்து ஓடிய கங்கையின் நீர், எல்லாவற்றையுமே தன்னுள் அடக்கிவிடுவது போன்ற நிலை அது. வானவெளியில் எப்போதும் தங்கியிருக் கும் காற்றின் இயல்பு என்ன? அடக்க முடியாமல் அது அங்கும் இங்கும் வீசிக்கொண்டேயிருப்பதுதான். அது போன்றதே இந்தச் சிவ-சக்தி லீலையும் : அல்லது எங்கும் பரவி, கண்ணைக் குருடாக்கும்படி விளங்கும் ஜோதிர்மயத்தில் சூரியனுடைய தண்ணொளி ஒன்றிவிடுவதைப் போன்றது என்றும் அதனைக் கூறலாம்.

''அதே முறையில் சிவ-சக்தி என்னும் ஆதி தம்பதியரின் பேரணைப்பு என்னும் பெருவெள்ளத்தில் நானும் ஒன்றிவிடுவ தைக் கண்டபோது, அவர்களது தூயநோக்கில் என் கட்புலனே

மறைத்துவிட்டது. இந்நிலையில்தான் அந்தத் திவ்விய தம்பதியருக்குத் தலைவணங்கி நின்றேன். இந்த நிலையில் 'நான்' என்ற தன்மையே மறைந்துவிட்டது.

''இந்த அநுபவாம்ருதத்தை விவரிக்க நான் மொழியைப் பயன்படுத்துகிறேன். ஆனால் இப்படி விளக்கப் பயன்படும் மொழியோ சொல்லுக்கும், பொருளுக்கும் என்றென்றும் உள்ள வேற்றுமையையே புலப்படுத்தும் இயல்புடையதாயிற்றே! ஆனாலும் இதை உரைக்க நான் மொழியைப் பயன்படுத்தும் போது, அந்த மொழியில் அமைந்த பேச்சு, தனக்குத்தானே பேசிக்கொள்வதுபோல் உள்ளது. எனவே, இப்படிப் பேசுவதில் இருவேறுபட்ட தன்மை என்பது இராதென்றே எண்ணுகிறேன்.

''சொல்லும் பொருளும் இருவேறாக இருப்பது போல், ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே வேறுபாடு இருப்பினும், நான் சொல்லும் மொழியில் அது மறைந்துவிடுகிறது. ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேற்றுமை ஆற்றுக்கும் கடலுக்கும் உள்ள வேற்றுமை போன்றதாகும். ஆனாலும் இந்தத் தனித்தன்மை ஆற்றுநீருக்கும் கடல்நீருக்கும் உள்ள வேற்றுமையை இருவேறாகப் பிரித்துக் காட்டுமோ ? அதுபோலத்தான் இதுவும்.

''அன்பர்களே ! கேளுங்கள் : 'ஒன்று' என்பதை உள்ளபடி உணர்ந்தால், (ஒன்று என்னும்) அந்நினைவு மனத்தை விட்டு அழியாதபடி பார்த்துக்கொண்டால் ஒருமித்த பேரழகில் திளைக்கும் ஆனந்தத்தை நீங்கள் நுகரமுடியும் ; இந்த நிலையில் அதன் இருவேறுபட்ட தன்மையை உணர்ந்து ஊக்கிட நீங்கள் அஞ்சுவதேன் ? வாழ்வு என்னும் நீரோட்டம் தன்னிடமிருந்து பேரழகும் பேரானந்தமுமே உருவான தாமரை மலர்களைத் தோற்றுவிக்குமானால் அத்தகைய நீரோட்டம் அனைவரும் விரும்பக்கூடியதாகத்தானே இருக்கும் ?

''அன்பர்களே! இப்போது நான் என் பிரதிபிம்பங்கள் அனைத்தையுமே காட்டும் நிலைக்கண்ணாடியை எறிந்துவிட்டேன். அதனால் என் முந்தைய பல பிறவிகளின் பிரதிபிம்பங்கள் யாவும் பிரபஞ்சம் முழுவதும் பரவிய வாழ்வு அல்லது ஜீவனுடன் இணைந்துவிட்டன. காற்றினால் அலைப்புண்ட நீரின் அலைகள், காற்று நின்றதும் அடங்கிவிடுவது போன்றது இது. அலைபோலே பலவாக அலைப்புண்ட என் முந்தைய பிறவிகள் என்னும் பிரதிபிம்பங்கள், நான் வீசி எறிந்துவிட்ட நிலைக்

கண்ணுடி போன்ற பழைய மனப்பான்மையுடனே மறைந்து விடுகின்றன.

''உப்புப் படிகம் தனக்குரிய உவர்ப்புத் தன்மையை விட்டுக் கடல்நீரில் கலந்து, அந்தப் பெருங்கடலின் பேருவர்ப்புத் தன்மையைக் கொள்வது போன்று, 'நான்', 'எனது' என்ற அகந்தையை நீத்து நானும் சம்பு-சாம்பவியரின் சிவசக்தியரின், (பரமாத்மாவும் ஜீவாத்மாவும் இணைந்து விளங்கும்) பேராற்றலில் ஒன்றிவிட்டேன்.'' (அநு: 1) இதுவே ஞானதேவரின் அநுபவாம்ருதத்தினுடைய சாரமாகும். ஞானதேவரின் சொற்களிலேயே என்னுல் இயன்றவரையில் இதனை விவரித்திருக்கிறேன். ஆயினும், அவருடைய உபதேசங்களை எந்த மொழியிலும் - ஏன், இன்று வழக்கில் இருக்கும் மராட்டி மொழியில்கூட - எடுத்துரைக்க முடியாது என்பது எனக்கேகூட விளங்குகிறது. ஆனுல் சொற்கள் இங்கே முக்கியமில்லை. அவை குறிப்பிடும் 'அது' (தத்) என்றதன் பொருள்தான் முக்கியமாகும். ஞானதேவர் சொல்ல முயல்வதை நாம் ஓரளவு புரிந்துகொண்டாலே போதும். பண்பட்ட நிலத்தில் விழுந்த விதைபோன்ற அவ்வருள்மொழி நம் வாழ்வு என்னும் ரத்தத்தை, சிரத்தையுடன் நீராகப் பாய்ச்சிடுவதால் என்றேனும் ஒரு நாள் தாளுகவே முளைத்துத் தளிரும் இலையும் விட்டு மணம் கமழும் மலராகப் பூத்து விளங்கவே செய்யும்!

'அநுபவாம்ருத'த்தின் முதல் அத்தியாத்தில் வரும் பகுதி இது. அதன் ஒன்பது அத்தியாயங்களைப் படித்தால்தான் ஞானதேவர் கண்டு நுகர்ந்த அநுபவ அமுதத்தை நாம் ஓரளவேனும் பருகிப் பயன்றதாகக் கொள்ளலாம். என்றென்றும் நிலைபேறுடைய அந்நூலின் மீதி ஒன்பது அத்தியாயங்களின் சாரத்தை விளக்க இனி முயல்வேன்.

'அநுபவாரும்தம்' தனிப்பெருஞ்சிறப்புடைய நூல்என்பதை நாம் உணர்ந்தாக வேண்டும். இவ்வகையில் கவிதை, தத்துவம், வாழ்வின் இயக்கம் இப்படி யாவும் இணைந்ததாய், நேரடியான அநுபவத்தை உணர்த்திடும் நூல் இது ஒன்றே என்றும் சொல்லலாம். அதிலும், இதற்குள்ள சிறப்பு என்னவென்ருல், 'இந்த அநுபவாம்ருதம் ஒன்றையேகூட விடாப்பிடியாகக் கொள்ளவேண்டாம்' என்ற கருத்தை இதில் வெளியிட்டிருப்பதே யாகும்! ஒரு வரையறைக்கு உட்பட்டுச் சிந்திக்கும் போக்கைச் சேர்ந்ததன்று இந்நூல். இதைச் சங்கருடைய 'அத்வைத சித்தாந்தம்' என்ரே, ராமாநுஜரின் 'விசிஷ்டாத்

வைதம்' என்றோ, காச்மீரத்துச் சிந்தனையாளரின் 'சிவாத்வைதம்' என்றோ, 'நாத பந்த்' என்ற மார்க்கத்தைச் சேர்ந்தவர்களின் தத்துவம் என்றோ கூறுவோமானால், அது குளிப்பாட்ட வேண்டி நீர்த் தொட்டியில் வைத்திருக்கும் குழந்தையைத் தொட்டியில் உள்ள அந்த நீரோடு கொட்டி விட்டு வெறும் தொட்டியைமட்டும் கையில் வைத்துக்கொண்டிருப்பதைப் போன்றதுதான்! தத்துவம் என்பதற்கு ஞானத்தின் மீது கொண்ட பற்று அல்லது அன்பு எனப் பொருள் கொண்டால், ஞானதேவரைத் 'தத்துவதரிசி' என்றோ, 'அறிவுக் களஞ்சியமாக விளங்கும் மகாபண்டிதர்' என்றோ கொள்வதற்கில்லை; அன்பே திருவுருவானவர் அவர். உலக வாழ்வில் மக்களின் உள்ளத்தில் கன இருள் கப்பியிருக்கும் நிலையில், அவரது அன்பு இடைஇடையே மின்னலையொத்து, மக்கள் செல்லும் நெறியை விளங்க வைக்கிறது. உலகில் மனிதனாகவே அமைத்துக்கொண்ட எவ்விதக் கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுதலை பெற வேண்டும் என்பதே அந்த அன்பின் நோக்கம். அதோடு, 'உள்ளும் புறமும் இருப்பது என்ன?' என அறியும் நுண்ணுணர்வும் ஏற்பட அது ஊக்குகிறது, இத்தகைய சுதந்தர நிலை (அல்லது முக்தி நிலை) அமைதியும் சதா விழிப்புமாக இருக்கும் மனநிலையிலிருந்து தோன்றுவது. இந்நிலையில் உள்ள மனம், 'இன்னது வேண்டாம்' என்ற எண்ணத்தையே விட்டுத் தனித்து நிற்பது. இந்த நூலின் முடிவில் வரும் அத்தியாயத்தில் ஞானதேவர் இவ்வாறு சொல்கிறார்:

''உண்மை இன்னதுதான் என்பதை அநுபவவாயிலாக உணர வேண்டும்; அதாவது, 'ஜீவான்மாக்களாகிய நாம்தான் இந்த உலகம்; எப்பொருளிலும், எவ்விடத்திலும், எல்லாக் காலத்திலும் நாம் வியாபித்திருக்கிறோம். நாம் தோன்றுவதுமில்லை; மறைவதுமில்லை. நம்மைத் தோற்றுவித்துக் கொள்வதுமில்லை; கொள்ளாமல் இருப்பதுமில்லை. இந்த நிலையில் நமக்கு நாமே அறிவுறுத்திக்கொள்ளவோ, விளக்கிக்கொள்ளவோ என்ன இருக்கிறது? நாம் அமைதியாக இருந்து, மோனத்தில் மூழ்கியிருக்கும்போது, 'இன்னது இல்லை' என்னும்படியான நிலைமை ஏன் ஏற்படப்போகிறது? எனவே, சொல்லாற்றல் என்பது தானாகவே வெளிப்படும் சக்தி உள்ளது என்றாலும், அது இந்த நிலையில் பேச்சாகவும் அமையாமல் பேச்சற்ற நிலையாகவும் அமையாமல் இருக்கவே விரும்புகிறது எனலாம். இந்த நூலில் சொல்லியிருப்பவை யாவும் நீர்மேல் எழுத்துக்கு நேர் என்று வைத்துக் கொண்டாலும் சரி!''

இத்தகைய ஒரு வாழ்வு நிலையை, எந்த வகைச் சிந்தனைப் போக்கில் அல்லது தரிசனம் அல்லது கோட்பாட்டில் சேர்க்க முடியும் ? எனவே, எல்லா வகைச் சிந்தனைகளையும், நம்பிக்கைகளையும் கருத்துக்களையும் விட்டு, உள்ளும் புறமும் உள்ள சூழ்நிலையால் பாதிக்கப்படாத அமைதியான மனநிலையில் இருந்தபடி ஞானதேவர் குறிப்பிடும் 'தத்' அல்லது 'அது' என்பதைக் கூர்ந்து கவனித்திட வேண்டும். 'அநுபவாம்ருத'த்தின் நறுமணத்தை நுகர இது ஒன்றே வழி.

# மனிதன், அநுபவம், மெய்ப்பொருள்

மனிதனுடைய நினைவில் பதிந்து, வருவதும் போவதுமாக உள்ள (நிலையில்லாத) அநுபவம் எப்படி அழியாத் தன்மை அல்லது அமரத்துவம் கொண்டதாகும்? கணநேரமே இருந்திடுவது எப்படிக் காலவரம்பையும் கடந்து நின்றிட முடியும்? நிலையற்ற ஒன்ருய் இழிந்துவிடும் (பழைய நினைவுகளை அடிப்படையாகக் கொண்ட) அநுபவங்களை என்றென்றும் நிலைத்தவை என்று போற்றிப் புகழ்வது எங்ஙனம் பொருந்தும்?

இவை போன்ற வினுக்கள், ஞானதேவருடைய 'அநுபவாம்ருத'த்தினைப் படிக்கும்போது நம் மனத்தில் எழுவதால் நமக்குத் திகைப்பு ஏற்படலாம். இவை மிகப் பொருத்தமான வினுக்களே. ஞானதேவர் சொல்வதிலுள்ள கருத்தை ஏற்றுக்கொள்ளும் முன், 'அதில் அவ்விதம் பாராட்டும்படி என்ன இருக்கிறது?' என்று கேட்டறியும் மனநிலை இது எனலாம்.

இந்த வினுக்களுக்கு விடை கிடைக்காது என்பதை நாம் முதன்முதலாகப் புரிந்துகொள்ள வேண்டும். இப்படியெல்லாம் விடை காண விரும்பும் மனத்தை, அதற்கு முன்னதாக, நீதிமன்றத்தின் கூண்டில் நிறுத்தி வைத்துக் கடுமையான குறுக்கு விசாரணை செய்வது போன்ற நிலைக்கு உட்படுத்த வேண்டும். இது ஏதோ விநோதமாகப் படலாம். ஆனுல் இந்த முறையிலேதான் ஞானதேவர் பிரச்னைக்கு முடிவு காண வேண்டி மும்முரமாக இதில் ஈடுபடுகிருர்; இவ்வாறே, அவர் இந்த வினுக்களின் அடிப்படையிலுள்ள உண்மையை நாம் அறிய முயல்வதற்கு உதவுகிருர். சற்று ஆழ்ந்து ஆராய்வோமானுல், இந்த வினுக்களிலேயே விடை கிடைக்கும்.

மனிதன் தன் கண்களால் பல நிறங்களையும் வடிவங்களையும் காண்கிருன். செவிகளால் பல ஒலிகளையும் சொற்களையும் கேட்கிருன். இப்படியே அவனுடைய மற்றப் புலன்களும் செய்கின்றன. இந்த ஐம்புலன் அறிவால் மனத்தில் நினைவுகள் பதிந்த மாத்திரத்தில், அவனுக்கு இன்பமோ வேதனையோ ஏற்படுகிறது. இவ்வாறு ஐம்புலன்களால் ஏற்படும் அநுபவங்கள் அப்போது, ஒன்று மகிழ்ச்சியைத் தோற்றுவிக்கும்;

அல்லது அதற்கு மாருனதாக அமையும்; அல்லது இந்தப் புலனுணர்வால் விளையும் பல நினைவுகளில் அவனுக்கு ஈடுபாடு இராததால், அவன் எந்த விதத்திலும் பாதிக்கப்படாமலே இருக்கலாம். ஆனுல் ஸம்ஸ்காரம் அல்லது முந்தைய அநுபவங்களின் நினைவுகள் அவனிடம் அப்படியே இருக்கின்றன. இவை அவனுடைய உணர்வை ஆட்கொண்டு விடுவதால், தன்னைச் சுற்றியுள்ள உண்மை நிலையை அறியும் தன்மையற்றவனுகி விடுகிருன். அவன் வாழ்வில் ஒவ்வொரு கணமும் பார்ப்பது, கேட்பது, உணர்வது போன்ற புலனறிவால் பழைய நினைவுகள் தனது மனத்தில் பதிந்திருப்பதைப் புரிந்துகொள்கிருன் என்ருலும், அது மேல்வாரியான ஒன்ருகத்தான் இருக்கிறது.

இந்த நிலையில், எதைப் பார்க்கிருேம், எதைக் கேட்கிருேம் என்று அவனுக்குத் தெரிவதில்லை. முந்தைய அநுபவங்களின் சிற்றெல்லையிலேயே கட்டுப்பட்டு அவன் வாழ்கிருன் என்பதோடு, அவனே அதன் கைப்பாவையாகவும் மாறிவிடுகிருன்; பிரக்ருதி அல்லது இயற்கையாக அமைந்த நிலையைக் கைவிட்டு, தன் கற்பனையில் அமைத்துக்கொண்டதையே பெரிதாக எண்ணுகிருன். உண்மையில் மானிடனுக இருந்தவன் கற்பனையே உருவான மானிடன் ஆகிவிடுகிருன். இப்படி உண்மை நிலை மாறிக் கற்பனை நிலையே ஓங்குகிறது. இந்தக் கற்பனை நிலையில், மனிதன் தன் வினுக்களுக்கு விடை காண வேண்டும் என்று பார்க்கிருன். இபபடிக் கற்பனையே உருவான மனிதன் பழைய அநுபவங்களில ஊறிக் கிடக்கும் நிலையில் இருந்தபடி 'உண்மை'யை அறிய முயல்கிருன். 'உண்மை இன்னதுதான்' என்பதைக்கூட இந்தக்கறபனை அடிப்படையிலேதான் சாமானிய மனிதர் - ஏன், அறிவாளிகளுங்கூடக் - கண்டுணர்ந்திடவும் ஏற்கவும் செய்கிருர்கள்.

இப்படிக் கற்பனையினுல் மனிதர்கள் கட்டிய மனக்கோட்டையை ஞானதேவர் இடித்துத் தகர்த்து நிர்மூலமாக்குகிருர். சமுதாயத்திலே மதிப்புக்குரியவர்களேகூட இப்படி மனிதனுல் உருவாக்கப்பட்ட ஒரு கற்பனையில் ஈடுபட்டவர்களாயிருந்தாலும் அவர்களையும் ஞானதேவர் விட்டு வைக்கவில்லை; அவர்களிடமும் கண்டிப்பாகவே இருக்கிருர்: 'மனிதன் நேருக்கு நேர் உண்மையைக் கண்டறிவதற்கு முன், கற்பனையில் எழுந்த இந்த அமைப்பு அழிந்தொழிய வேண்டியதுதான். எவனெருவன் இந்தக் கற்பனை அமைப்பு என்னும் தளையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளப் பார்க்கிருனே அவன், இரவின் இருளானது விடியலின் ஒளி தோன்றியதும் நீங்கிவிடுவதுபோல் உண்மை

யெனும் சுடரொளி தோன்றிய நிலையில் (வாஸ்துப்ரபா) தான் கேட்கவிருந்த வினுக்கள் எல்லாம் மங்கி மறைந்து விடுவதைக் காண்பான்.

எனவே, வினுக்கள் என்பவை மனிதனுக்குரிய பிரச்சனைகள் ஆகமாட்டா ; இப்படிக் கேட்பவனே உண்மையில் பிரச்னைக் குரியவனுகிருன். இந்தப் பிரச்னைகளைத் தோற்றுவிப்பவன் யார் என்று அறியாமல் அப்படியும் இப்படியும் மனம் அலைபாயும் படி விடுவது, உண்மையை உணராமல் வெறும் மாயத்தோற்றத் தையே முடிவின்றி நம்பியிருப்பது போன்றதாகும். மனிதனே எல்லா வகையிலும் பெரும் பிரச்னைக்குறிவனுக இருக்கிருன். இந்த 'மனிதன்' என்பது மற்ற ஆத்மனைக் (புருஷனைக்) குறிப்ப தன்று ; 'நான்', 'நீ' (அஹம், த்வம்) என்பவற்றிலுள்ள ஆத்மனைக் (புருஷனைக் குறிப்பது 'நான்' என்ற அகந்தைதான்? அடிப்படையான பிரச்னையாகும். மூலகாரணமான நோய்தான் பிரச்னைக்குக் காரணமே தவிர மற்றவையெல்லாம் இரண்டாம் பட்சமானவையே.

'நான்,' 'நீ' என்கிற அந்த மனிதன் முந்தைய அநுப வங்கள் யாவும் சேர்ந்த ஒரு மூட்டையாக இருக்கிருன் ; இந்த நிலையில் தன் பழைய நினைவுகளாலும், தன் கற்பனையில் தோன்றிய ஒன்றையே பிடிவாதமாகப் பற்றிக்கொண்டு இருப்ப தாலும் அவற்றிலேயே ஈடுபாடு கொண்டவனுக இருந்து வருகிருன். முந்தைய அநுபவங்கள் யாவும் அவன் தானுகவே கற்பனை செய்துகொண்ட விருப்பு-வெறுப்புகளின் விளைவுகளே ! இவற்றுடனேயே மனிதன் பிறக்கிருன். இடைஇடையே இந்த விருப்பு - வெறுப்புகள் சற்றே மாறக்கூடும். ஆனுல் அவன் ஒன்றை 'இன்னது' என உணரும் பாங்கு, எப்போதும் எந்த நிலையிலும் இப்படி ஒரேமாதிரிதான் உள்ளது. இதனுல்தான் எதையும் தூய்மையான முறையிலும், உள்ளது உவளபடியும் நோக்கவோ, கேட்கவோ, மனத்தில் பதித்துக்கொள்ளவோ நம்மால் முடிவதில்லை ; ஏதோ பழைய அநுபவம் என்பதாகத் தான் அவற்றைக் கருதுகிறோம். என்றென்றும் நிலைபெற்று இருக்கக்கூடிய நோக்கம் இருக்கவேண்டிய சந்தர்ப்பத்தில், உணர்வற்றுச் செத்தொழிந்த பழைய அநுபவங்களில் சிக்கிய நிலையில், அவற்றையே பற்றிக்கொண்டிருக்கும் மனப்பான்மை நம்மை ஆட்கொள்கிறது. இப்படி மனிதன் தன் பழைய அநுபவம் காரணமாகக் கற்பனையையே நம்பிக் கிடப்பதால் முடிவற்ற மாயை என்னும் பிரபஞ்ச வெளியில் வேகமாக உந்திச் செலுத்தப்படுகிருன். அப்போது இன்னது என்ன ?'

என்பதை ஆராய முனையாது, நிலையாயும் உண்மையாயும் உள்ள ஒன்றைக் கைவிட்டு விடுகிறான். இதற்கு அவனது 'நான்' என்ற அகந்தையே அடிப்படையாக இருக்கிறது.

மனிதனது வரலாறே, சில சந்தர்ப்பங்களைத் தவிர மற்ற நிலைகளில் எல்லாம், அவன் தன் கற்பனையில் கொண்ட தற்கும் உண்மையான நோக்குக்கும் இடையே நடக்கும் போராட்டத்தின் வரலாறு ஆகும். இது வர்க்கப் போராட்ட மன்று; மனிதன் தன் கருத்தில் கொண்டதற்கும் உண்மைக்கு மிடையே நடக்கும் அடிப்படையான முரண்பாடே ஆகும். கோட்பாடுகள், சிந்தனையினால் அமைந்த சித்தாந்தங்கள் இவை யாவும் மாறிக்கொண்டே யிருக்கும்; பழமையில் ஊறி உயிரற்று நிற்கும் சொந்தக் கற்பனைகளே ஆகும் இவை; உயிருடனும் உணர்வுடனும் நிலவிடும் வாழ்வின் ஆற்றலுக்கு மாறானவை இவை. மனிதன் தன் கற்பனையில் கொண்ட தற்கும், உண்மையான நோக்குக்கும் இடையேயுள்ள தன்மை யைத் தெளிவுற உணர்ந்தால்தான் உண்மை அல்லது மெய்ப்பொருளாம் இறைவனை உள்ளபடி கண்டிட முடியும். இது அவன் தன் கற்பனையில் கொண்டதைக் கைவிட்டா லன்றி இயலாது. மனிதன் தன் கற்பனையில் கொண்டது என்பது, இறந்துபட்ட கடந்தகால அநுபவங்களின்மூலம் ஏற்படுவது. இப்படிக் கடந்துபோன எதுவும், இன்றும் என்றும் நிலைபெற்று விளங்குவதைக் குலைத்துவிட முடியாது. இப்படி, இது நிலைபெற்றிருக்கும்போதுதான் வாழ்வு செயல் பட்டுப் புதுப் படைப்புக்கும் காரணமாகிறது.

''மனிதன் தான் கொண்ட கருத்து அல்லது கற்பனை பழைய நினைவு காரணமாக வருவது; இத்தகைய நினைவை ஆட்கொண்டு நிற்பவை சப்தம், அவித்யை, அஞ்ஞானம், ஞானம் என்ற நான்குமே யாகும்'' என்கிறார் ஞானதேவர். இந்த நான்கு அம்சங்களையும்பற்றி அவர் மேலும் என்ன சொல் கிறார் என்று பார்ப்போம்; இவைதாமே, வலிமையாக மனிதனது உள்ளத்தை அல்லது மனச்சாட்சியை ஒரு கட்டுக்கு உட்படுத்துகின்றன? அதோடு இவைதாமே, 'எது நிலை பெற்றது? உண்மையானது?' என்பதையும் அவன் உணர வொண்ணாதபடியும் செய்துவிடுகின்றன? மனிதன் தன் கற்பனையையே பற்றி நிற்பதுதான் நிலைபெற்ற அவனது ஆன்ம இயல்பினின்றும் அவனைப் பிரித்துவிடுவதற்குக் காரணமாகும்.

**சப்தம்**

சப்தம் என்ருல் 'சொல்' என்று பொருள். இதுதான் ஒரு மொழிக்கே முற்றும் உரிய அமைப்பு. மனிதன் என்பவன் 'மொழியறிந்த' அல்லது 'பேசும் விலங்கு' என்பது உண்மையான கூற்று. இதுதான் மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்துகிறது. இந்த மொழியே மனிதனைப் பண்பாடு உடையவனுக்கியிருக்கிறது. இந்த 'மொழி' என்ற ஒன்று இராவிட்டால், தன்னிடம் நிலவும் மிருகத்தன்மையிலிருந்து இப்படி ஓரளவேனும் அவன் வேறுபட்டுப் பண்பாடு உடையவனுக இருந்திருக்க முடியாது. இங்ஙனம் (பண்பாடு உடையவனுக) அவன் இருப்பதனுல்தான், தான் விரும்பும் ஒன்றை அடைய முயல்கின்ற சுதந்தரப் போக்கு உள்ளவனுக அவன் இருக்கிருன். ஆனுல் அவன், 'மொழி' என்பது இருவகைப்பட்டது என்பதை மறந்துவிடுகிருன். அவை முறையே, தான் யார் என்பதை உணர்த்தும் மெய்யறிவையும், தானுகக் கொண்ட கருத்து அல்லது கற்பனையையும் ஆதாரமாகக் கொண்டு மாறுபட்டு உள்ளவை. இந்த மொழி 'நான் என்பது அகந்தையற்ற நான்' என்னும் பொருளை நமக்கு உணர்த்துகிறது; ஆயினும் அதே சமயம் இந்த மெய்யுணர்வை நாமாகக் கொண்ட கற்பனையுணர்வு தடுத்து நிறுத்திவிடுகிறது. பின் சொன்ன கற்பனையுணர்வு, தான் யார் என்பதை உண்மையிலேயே உணர்ந்ததாகத் தன்னைப் பாராட்டிக்கொள்ள முடியாது. எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கும் வாழ்வு அல்லது ஜீவ ஓட்டத்தைச் சமாளிக்க (தன்னை இன்னுன் என அறியும்) மெய்யுணர்வுதான் வளர்ந்து செழிக்க வேண்டுமேயொழிய, அகந்தையை அடிப்படையாகக் கொண்ட கற்பனையுணர்வு அல்ல. ஒன்றைமட்டும் மனிதன் அறிந்தால், இந்தக் கற்பனையுணர்வேகூட அவன் மெய்யுணர்வு நிலையை அடைய உதவும் எனலாம்: 'இந்தக் கருத்து அல்லது கற்பனைகள், சொற்கள் யாவும் நிலையானவை அல்ல; **இவை மெய்யான ஒன்றைப் பிரதிபலிக்கச் செய்வனவேயன்றி இவையே மெய்யாகா**' என்பதே அது. கற்பனை என்பது ஊகமேயாகும். எனவே, உண்மையைக் கண்டறிய உதவும் கருவியாகவே இது உள்ளது. ஆனுலும் இந்தக் கருவி தன்னையே உண்மையுணர்வாகக் கருதும்படியும், உண்மையுணர்வு இருக்கவேண்டிய இடத்தில் இது ஆதிக்கம் செலுத்திடும்படியும் விடக்கூடாது. எனவே, மிகக் கடுமையான விழிப்பு நிலையுடன் இருந்தாக வேண்டும்; இந்த விழிப்பு நிலை உயிர்மூச்சுப் போன்றதாகும். ஆனுல்

இப்படி எப்போதும் கடுமையான விழிப்பு நிலையில் இருப்பது மனிதனுக்குக் கடினமாக இருக்கிறது. உடனடியாக மனத் திருப்தி அடைய என்ன வழி உண்டு என்று அவன் பார்க்கிறான். இந்த மனத்திருப்தி என்பது அவனாக இட்டுக்கட்டிய விருப்பு-வெறுப்புகளை ஆதாரமாகக் கொண்டது: இதனோடு மெய்யறிவினால் ஏற்படும் விழிப்புநிலையை ஒப்பிடக்கூடாது. கற்பனையின் பாற்பட்ட விழிப்பு உணர்வு காரணமாக, அவன் உண்மையான விழிப்பு உணர்வைக் கைவிட்டு விடுகிறான் ; காரணம், இந்தக் கற்பனை உணர்வையே, 'தான்' என்பதை அறியும் மெய்யுணர்வாக அவன் கருதிவிடுவதுதான். 'வ்ருத்தி ஸாரூப்யம்' அல்லது கற்பனை (போலி) உணர்வு, தன்னை இன்னான் என்று அறியும் மெய்யுணர்வை ஒடுக்கி, உருச் சிதைத்துவிடுகிறது. இதனால் தன்னை அறியும் மெய்யுணர்வே மனிதனுக்கு ஏதோ புறம்பான ஒன்றாகப் படுகிறது. இப்படி மனிதர்கள் மெய்யுணர்வு பெறுவதில் அக்கறை காட்டாமலே பிறந்து, வாழ்ந்து, மடிந்து போகிறார்கள் ; மேன்மேலும் இன்பங்களையும் வசதிகளையும் பாதுகாப்புகளையும் நாடும் வெறியோட்டத்தில் ஈடுபடுகிறார்கள். இவை காரணமாகத் தாங்களும் பிறரும் 'இன்னின்னவர்' என்ற மெய்யுணர்வையே அழித்துவிடுகிறார்கள். எனவே, 'வாழ்வு' என்ற நீடித்த நிலை அமையாமல் 'சாவு' நிலையே மனிதனுக்கு உள்ள விதியாகிறது.

ஞானதேவர் சொல்கிறார் :

''சொல் என்பது முக்கியமானதுதான் ; இதில் ஐயம் ஏதும் இல்லை. ஆதாரம் காட்டிட இயலாத ஒன்றிற்கு ஆதாரபீடம் போன்று அமைந்ததுதான் இந்தச் சொல். மனிதன் உருவற்ற ஒன்றுக்கு உருக்கொடுக்கவும் இது பயன்படுகிறது ; நிலைக் கண்ணாடி நம்முடைய முகத்தைப் பிரதிபலிப்பதன்மூலம் நம் முகத்தை நமக்குக் காட்டுவது போல், உருவற்றதற்கு ஓர் உருக் கொடுக்கிறது. ஆனாலும், நிலைக்கண்ணாடிக்கும் இந்தச் சொல் என்பதற்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது. நிலைக் கண்ணாடி உண்மையான ஒன்றின் பிரதிபிம்பமாக உள்ளது ; ஆனால் இந்தச் சொல்லோ உள்ளதை உள்ளவாறு எடுத்துரைப்பதன்று ; இல்லாத ஒன்றையே இது பிரதிபலிக்கிறது அல்லது உணர்த்தப் பார்க்கிறது எனலாம். என்றோ கழிந்து போய் இன்று உண்மையில் இராத ஒன்றை ஆதாரமாகக் கொண்டு நிற்கிறது, இந்தச் சொல் ; இது மனிதனுக்கு நினைவு என்பதைக் கொடையாக அளிக்கிறது என்றாலும், இந்த நினைவோ (என்றென்றும்) கடந்துபோன - இறந்துபோன - ஒன்றாகவே

உள்ளது ; எனினும் இது மாயையை உண்டாக்கி அதையே நாம் உண்மை எனக் கருதும்படி செய்கிறது. இதனை 'ஆகாயப் பூ' என்றாலும் பொருந்தும். வானத்தில் எங்கேயாவது, பூ பூப்பது சாத்தியமா? அது போன்றதுதான் இதுவும்! இந்தக் கற்பனை மலரே நாம் அடைய விரும்பும் இடமான மெய் யுணர்வு நிலையைக் கவர்ந்து அவ்விடத்தில் ஆதிக்கம் செலுத்தப் பார்க்கிறது. அப்போது இந்தச் 'சொல்' என்பதே அந்தக் கற்பனைக்கு ஊன்றுகோலாக அமைகிறது ; அதனால் நம் முன் அமைந்த 'திவ்விய ஞான'மாக விளங்கப் பார்க்கிறது கற்பனை உணர்வு! உண்மையான ஞானம் இருக்க வேண்டிய இடத்தில் அதைப் புறக்கணித்துவிட்டு, தான் அங்கே ஆதிக்கம் செலுத்துகிறது. அதுமுதல் நம்மிடமிருந்து தூய ஞான உணர்வை அடிப்படையாகக் கொண்ட நோக்கு போய் விடுகிறது. 'சொல்' என்பது குறிக்கும் 'இன்னது மெய்', 'இன்னது பொய்', 'இன்னது செய்ய வேண்டும்', 'இன்னது செய்யக் கூடாது' என்பதையே நாம் ஏற்கும்படியான நிலைக்கு வந்துவிடுகிறோம். இவ்வாறு வாழ்வின் இருளைப் போக்க உயிரொளி தரும் கைவிளக்கென இது தோற்றமளிக் கிறது; முதலில் இது நம் அறிவுக் கண்களைக் குருடாக்கிவிட்டுப் பின்னர்த் தூய உள்நோக்கையும், நுண்ணிய உணர்வையும் ஒடுக்கி ஆள்கிறது. இப்படி இந்தச் சொல் நமக்குச் சட்ட திட்டத்தை விதிப்பதுபோல் அமைந்து, நம்மை நம் பந்தங்களி லிருந்து நீங்குவதற்கு வழி காட்டுவதுபோல் நடிக்கிறது! எப்போதாவது நமக்குக் குழப்பம் ஏற்படும்போது (இப்படி ஏற்படுவது இயல்புதானே!) அந்தக் குழப்ப நிலையிலிருந்து மீள நமக்கு இந்தச் சொல்லே உதவ முன் வருகிறது. இங்ஙனம் சொல்லின் மாயக் கவர்ச்சி நம்மை முற்றும் அடிமை கொண்டு விடுகிறது ; உண்மையான வாழ்வு நிலையை நாம் பார்க்க வொண்ணாதபடி தடுத்துப் பொய்யையும் மெய்யையும் ஒன்றென மதிக்கும்வண்ணம் செய்தபின், நம்மை 'அவித்யை' என்னும் போலி உலகில் கைதிபோல் சிறைப்பிடித்து விடுகிறது. 'வித்' என்றால் 'உள்ளது' என்றும், 'அ' என்றால் 'உள்ளதல்லாதது' என்றும் பொருள். எனவே, 'அவித்யை' என்பது, இராத ஒன்றையே குறிப்பதாகும். ஆனால் இந்தச் சொல்லின் மாயக் கவர்ச்சி, நம்மை இந்த உண்மையினை முற்றும் உணராதபடி செய்துவிடுகிறது! இப்படிச் 'சப்தம்' அல்லது 'சொல்' 'அவித்யை'யுடன் சேர்ந்து ஏதுமற்ற ஒன்றுக்குப் பெருமதிப்பு அளித்துவிடுகிறது ; நிலையானதும், உண்மையானதுமான பொருளை அற்பம் என்று கருதும்படி செய்துவிடுகிறது.

''புருஷன் அல்லது சிவம் நிலையானது; என்றும் வாழ்வது. ஆயினும் அது நிலையற்றதான உடலினுல் கட்டுண்டு நிற்கிறது. ஆனுல் 'சப்தம்' அல்லது சொல்லோ 'மனிதனே ஆத்மா, உடல் அல்ல' என்று தன் 'ஆற்றலை'யெல்லாம் காட்டி முழங்குகிறது. சொல்லின் கவர்ச்சி அத்தகையது! அந்த வெறும் சொல்லால் மனிதன் 'தான்' என்பதை - அதாவது, நாயகன் நாயகியைத் தன்னில் ஒரு கூருக எண்ணி மகிழ்வது போல் - தன் இனியாளான 'ஆத்மா'வைக் கண்டு விட்டதாகக் கருதுகின்றுன். இப்படி இந்த வெறும் சொல்லே தன்னைத்தான் அறியும் தன்மையதாகி நிற்கிறது. ஆனுல் இந்தச் சொல்லே உண்மையான பொருள் ஆகிவிடாது; எனவே, ஒன்றுக்கு ஒன்று மாருன மனப்போக்குகள் - நாமே எதையும் அநுபவிக்க வேண்டும் என்பதும் பற்றற்று நாம் வாழ வேண்டும் என்பதும் - ஏற்படுகின்றன. இதனுல் குழப்பமே விளைகிறது. மறுபடியும் அதே சொல், குழப்பத்திலிருந்து - முரண்பாட்டிலிருந்து - 'விடுவிப்பதுபோல்' முன் வந்து நிற்கிறது; 'தன்னைத் தானே அறிதல்' (ஆத்மவித்யை) என்றுல் என்ன என்னும் ரகசியத்தைத் தானே உணர்த்தவும் முன்வருகிறது; 'இத்தகைய ஆற்றல் மிக்க சொல்லுக்கு எவ்வளவு பெருமை அளித்தாலும் தகும் அல்லவா? இங்ஙனம் சொல்லே பொருளாகவும் ஆகிறதே!' என எண்ணு கிருேம். ஆனுல் இது அடியோடு தவருன ஒன்ருகும். ஏனெனில், இந்தச் சொல்லால் ஆகக்கூடியது ஒன்றே ஒன்றுதான்: கடந்த காலத்தில் நிகழ்ந்ததை நாம் நினைவு கூர இது ஓரளவு உதவுகிறதென்றுலும், என்றும் உள்ள ஒன்றை - மெய்ப்பொருளை - நாம் அடைந்திட இது பயன் படாது; நிலையான, ஆதாரபூர்வமான முறையில் நாம் யார் என்பதை உணர இது உதவாது.''

### அவித்யை

'அவித்யை' என்பது சொல்லின் அளவினதான ஓர் உணர்வு நிலை. 'அவித்யை' என்றுல் பொதுவாக 'அறியாமை' என்று கருதுகிருர்கள்; அது அவ்வாறன்று. உணர்வுநிலை அல்லது விழிப்பு நிலைக்கு நேர்மாருன ஒன்றே 'அவித்யை' என்பதாகும். அது சொல்லின் அளவுக்குட்பட்டு, மனித வாழ்வில் ஆதிக்கம் செலுத்துகிறது. உண்மையில் ஆத்மா என்பது என்றென்றும் நிலைபெற்றுள்ள 'தான்' என்பது தன்னை அறிந்திடும் உணர்வே ஆகும் (ஸ்வஸம்வேத்யதா).

வெறும் சொற்செறிவு அதற்குப் பிடிப்பதில்லை. சுயம் பிரகாசமாக உள்ள, தன்னைத் தான் அறியும் நிலையை உணரச் 'சொல்' என்பது தேவையில்லை. ஒன்றை நினைவு கூர்வதும் மறந்திடுவதும் முந்தைய நிகழ்ச்சிகளோடு தொடர்புள்ள நிலையே. இதற்கும் புதுப்புதுப் படைப்புகளின் வாயிலாக உயிர்த்துடிப்புடன் விளங்கும் 'வாஸ்தவம்' அல்லது உண்மை நிலைக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஞானதேவர் என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்:

''நம்மை நாமே எப்படி நினைவு கூர்ந்திடவோ, மறந்திடவோ முடியும்? நாவே தன் சுவையை எவ்வாறு கண்டு கொள்ள முடியும்? எப்போதும் விழித்திருப்பவன் உறங்குவது எங்ஙனம்? இத்தகைய விழிப்பு நிலை, 'நாம் உறங்கி விடுவோமோ?' என்ற எண்ணத்தால் ஏற்பட்ட முயற்சியன்று; ஆத்மனோடு இயல்பாகவே ஒன்றி நிற்கும் உணர்வு இது. தன்னைத் தான் அறியும் விழிப்பு நிலையில் 'சொல்' என்பதற்கே இடமில்லை.

''இது போன்றே 'ஆத்மன்' அல்லது தன்னை அறிந்த உணர்வு நிலைக்கும், அவித்யை அல்லது சொல்லின் அளவுக்குட்பட்ட உணர்வு நிலைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இத்தகைய (சொல்லின் அளவுக்குமட்டுமே உட்பட்டதான) அவித்யையைச் சொல்லால் வென்றுவிடலாம் என்றோ, அவித்யை அழிவதால் மெய்ஞ்ஞானவொளி வீசுகிறதென்றோ சொல்வது வெறும் பிதற்றலேயாகும். 'இரவு என்பதை முற்றும் அழித்துவிட்டே சூரியன் அடிவானத்தில் உதயமாகவேண்டும்' என்று கூறுவதைப் போன்ற மடத்தனமான வாதமேயாகும் இது. காரணம், சூரியன் உதயமாவதும் இல்லை, மறைவதும் இல்லை. அதன் எதிரில் இருள் தட்டுப்பட்டால்தானே அவ்விருளை அழிக்க வேண்டும் என்ற நிலை ஏற்படும்? அதுதான் சுயம்பிரகாசமாய் ஒளிர்ந்தபடி இருக்கிறதே! எனவே, 'அவித்யை என்ற ஒன்று இருக்கிறது; ஆத்மா தன்னைத் தான் அறியும் நிலை எய்துவதற்கு முன் அந்த அவித்யையை அழித்திட வேண்டும்' என்று கூறுவதெல்லாம் பொருளற்றதாகும். தன்னைத் தான் அறியும் நிலையை எய்திட ஆத்மா ஏதும் செய்ய வேண்டியதில்லை.

''அவித்யை என்பது 'மலடி வயிற்று மகன்' (இல்லாத ஒன்றை உண்டு) என்பது போன்றதே; கூரிய வாள்போன்ற

தர்க்க வாதத்தால்கூட அதைக் கூறுபோட்டுக் காட்டிவிட முடியாது. 'அவித்யை' என்ற ஒன்று உண்டு. அதை வெறும் சொற்களால் (அநிர்வசனீயமானது என நிரூபிக்க முயல்கிறார்களே வேதாந்திகள் அதுபோல்) விவரித்திட முடியாது என்ற வாதம் எதைப்போல் இருக்கிறது தெரியுமா? இல்லாத ஒன்று தன்னைத் தானே இல்லாதபடி செய்துகொள்வதைப் போலத்தான்! இப்படி இல்லாத ஒன்றான 'அவித்யை'யை உண்டு என்று சொல்லி எப்படி நிரூபிப்பது? முதலில் தரையிலே காணாத ஒரு ஜாடியை, தரையில் வைக்கும்போதாவது காணமுடிகிறது; ஆனால் அவித்யை என்ற ஒரு பொருளே இல்லாதபோது அதை எப்படி நிலைநிறுத்துவது? அதற்கு ஆதாரந்தான் ஏதும் இல்லையே! (வேதாந்திகள் கூறுகிறார்களே அதுபோல்) அவித்யையை அழிப்பதென்பது எதைப்போல் இருக்கிறது தெரியுமா? வானத்தை மூடியிருக்கும் வண்ண ஆடையை விலக்கிடுவோம் அல்லது ஆட்டின் கழுத்துக்குக் கீழே (பயன் எதுவும் இல்லாதபடி) தொங்கும் (அஜாகளஸ்தன) முடிச்சுகளிலிருந்து, 'பாலைக் கறந்து காட்டுகிறோம் பார்' என்பது போலத்தான்! இப்படி எத்தனையோ பொருளற்ற வாதங்களில் மனிதன் ஈடுபட்டது போதுமே! இனியேனும் 'அவித்யை' என்பது சொல்லளவில் கொண்ட (உண்மை இல்லாத ஒன்றைக் குறித்த) வெறும் ஊகம் அல்லது கருத்தேயாகும் என்ற உண்மையை உணர்வோம். எனவே, 'ஆத்ம ஞானம் எய்துவதற்குமுன் அவித்யையை ஒழித்தாக வேண்டும்' என்று முழங்குவோர், இல்லாத ஒன்றைத்தான் அழிக்க முற்படுகிறார்கள் என்றே கூறவேண்டும்!''

''தன்னைத் தான் அறிதல் அல்லது ஆத்மஞானம் என்பது, வேறொன்றுமில்லை; ஏற்கனவே தன்னுள் இருக்கும் ஒன்றைக் கண்டுகொள்வதுதான்'' என்கிறார் ஞானதேவர். ஏதோ நம் அறிவினால் அதைக் கண்டுவிட்டதாக வெறும் சொல்லளவில் அதனை நிலைநிறுத்த முற்படுவது எவ்வளவு அறிவீனம் என்பதை நாம் உணரவேண்டும்; ஒன்றைத் தெள்ளத் தெளியக் காண முற்படவேண்டும். வெறும் சொற்கள், சித்தாந்தங்கள், மரபுவழியாக வந்தவை என்ற பெயரில் நாம் ஏற்ற (நாமாக 'இதுதான் ஞானம்' என்று வரையரைக்கட்டுப்படுத்தி அமைத்துக் கொண்ட) வீண்சுமை இவற்றிடையே நாம் அழுந்திக் கிடப்பதைக் கண்டுகொள்ள வேண்டும். உள்ளதை உள்ளபடி அறிய (நாமாக இதுதான் ஞானம் என வரையறைக்குட்படுத்தி அமைத்துக்கொண்ட) இந்தச் சிறையினின்றும் வெளியேறத் துணியவேண்டும். இப்படி வெளியேற முடிந்ததுமே (வாஸ்து

ப்ரபா என்ற) உண்மை ஒளியைக் கண்டிடலாம். நாமாகக் கற்பனை செய்துகொண்ட ஒரு கருத்தினால் உள்ளதைக் காணும் வாய்ப்பை இழந்து விடுகிறோம். எனவே, நம் பழைய அநுபவங்களின் தன்மையை அலசி ஆராய்ந்து பெற்ற திவ்விய அநுபவவாயிலாக உணரும்போதுதான் 'உள்ளதை உள்ளபடி' காணும் நிலை ஏற்படும். சீரழிவும் குழப்பமும் மிக்க - பரஸ் பரம் முரணான - கடந்த கால அநுபவங்கள் நம் மனிதத் தன்மையை அழுத்திக்கொண்டிருக்கின்றன; இந்த மனித சமுதாயத்தின் அமைப்பே இத்தகைய முரண்பாடுகள், குழப் பங்கள், சீரழிவுகளின் வாயிலாக ஏற்பட்டதுதான். முடிவற்ற சச்சரவும் வேதனையும் நிறைந்தது இந்த மானிட உலகு. இதினின்று மீளும் வழி என்ன? தன்னைத் தான் அறிவதுதான் ஒரே வழி. அதாவது, (1) 'இதுதான் ஞானம்' என்று ஒன்றைக் கருத்தில் கொண்டு, தானே அந்தத் தளையில் சிக்குண்டு கிடப்பதை உணர்ந்திடுவது. (2) கட்டுண்டு சிறைப்பட்டுக் கிடக்கும் இத்தகைய நிலையினின்று, வெறும் கற்பனையிலன்றி உண்மையிலேயே உணர்ந்து வெளியேறுவது. இப்படி உள்ளூற உணர்ந்து வெளியேறும்போது என்ன நேரிடுகிறது தெரியுமா? 'தான் யார் என்பதை உள்ளபடி கண்டுகொள்வ தொன்றுமட்டுமே நிலையான உண்மை; மற்ற ஏதுமில்லை' என்ற விவேகம் உதயமாகிறது. ஆனால் இப்படித் தானே தனக்குள் நோக்கி அங்கு அடங்கியுள்ள உண்மைப்பொருளை அறிவது எப்படி?

அதற்கு ஞானதேவரின் விளக்கம் இதுதான்:

''நம் விழிகள் தமக்குள்ளேயே நோக்கிக்கொள்வது என் பது நடவாத ஒன்று; அதேபோல் நம் நாவும் தன்னைத் தானே சுவைத்துக்கொள்வது என்பதும் இயலாத ஒன்று. ஏன், ஏற்கனவே விழித்திருக்கும் நிலையில் உள்ள ஒன்றை விழித்திடச் செய்வதென்பதும் அவ்வாறே. மாண்புமிக்க நம் ஆத்மாவும் இதே நிலையில்தான் உள்ளது. விழிகள் தம்முள்ளேயே தம்மைக் கண்டிட முடியாதிருப்பதைப் போன்றுதான் ஆத்மாவும், 'தன்னையே தான் கண்டிடுகிறது' என்று வெறும் வாய்ச் சொல்லால் கூற இயலாத ஒரு நிலையில் உள்ளது. காரணம், விழிகள் தமக்கே இயல்பான விழிப்பு என்னும் பண்பைக் கொண்டு விளங்குவதுபோல் இந்த ஆத்மாவும் இயல்பாகவே எப்போதும் விழிப்பு அல்லது ஜாக்ரத நிலையிலேயே - தன்னைத்தான் அறிந்த நிலையிலேயே - இருப்பதுதான். இது அகம், புறம் எங்கு நோக்கினும் தன்னையே

காண்கிறது. தூய அறிவாகவே விளங்கும் ஒன்று, தன்னின் வேருனது ஞானம் என்று எவ்வாறு கொள்ளும்? என்றும் நிலேத்துள்ள ஆத்மா இயல்பாகவே 'ஸத் - சித் - ஆனந்த' மான ஒன்றுதான்; சொல்லால் இப்படி விவரிக்க முயன்ருலும் அதை உள்ளபடி உணர்த்தி விடுவதற்கில்லே. 'ஆத்மா' என்ற ஒன்று உண்டு என்பதற்கு - அது ஸத் - சித் - ஆனந்தமே உருவானது என்பதை நிரூபிப்பதற்கு - எந்தவிதச் சான்றும் தேவையில்லே. அது எப்போதுமே உள்ளதுதான். அது தன்னேத் தவிர வேருென்றினின்றும் எடுத்துக்கொள்வதுமில்லே; வேருென்றுக்குத் தருவதுமில்லே. – இத்தகைய ஒன்று அது.

''வெறும் சொல்லால் ஆத்மாவுக்கு ஆவதென்ன? நடுப் பகலில் ஒளிவீசும் சூரியனெதிரே 'இதோ, இருளே நீக்கும் ஒளி' என்று ஒரு சிறு அகல்விளக்கை நிறுத்திச் சூரியனேக் காட்டிட முடியாது போன்றதுதான் இந்த வாய்ச்சொல் விளக்கம். வெறும் சொல்லால் அமைந்த உண்மையின் விளக்கம் என்பது, கெட்டித் துணி போன்ற ஒன்றில் தீட்டியுள்ள காட்டுப் பிரதேசத்தைக் காட்டும் சித்திரம் போன்றதுதான். ஒருவன் தூய உண்மையை உணர வேண்டுமானுல், வெறும் சொற்களால் ஆன வெள்ளத்தினின்றும் தன்னே விடுவித்துக்கொண்டு எங்கும் பரந்துவிளங்கும் களங்கமற்ற வானத்தின்கீழ் உலவு வதுபோல் சுதந்தர புருஷணுக நடந்துகொள்ள வேண்டும்'' (அநு : 6: 102-63).

சொற்சிலம்பம் என்ற சிறையினின்றும், அதன்மூலம் 'அவித்யை' என்று நாமாகவே கற்பனேயில் அமைத்துக் கொண்ட தளேயினின்றும் விடுபட்டதும், கணத்துக்குக் கணம் தோன்றியும் மறைந்தும் காட்சி தரும் உண்மையை நேருக்கு நேர் கண்டிடும் வாய்ப்புக் கிட்டுகிறது. அது நமக்குப் புலனுகும்போது, 'இதுதான் ஞானம்' என்ற உணர்வும், அது மறையும்போது, 'நாம் இப்போது அஞ்ஞான நிலேயில் இருக்கிறேம்' என்ற உணர்வும், மாறி மாறி உண்டா கின்றன. எனவே, இப்படி ஒளியும் இருளும் - ஞானமும் அஞ்ஞானமும் - மாறி மாறித் தோன்றி மறைவதை உள்ளூற உணர்ந்திடுவதுதான் 'வாஸ்துப்ரபா' அல்லது சுயம்பிரகாச மான மெய்ஞ்ஞானம் அடைவதற்கு முந்தைய நிலேயாகும். இனி வரும் அத்தியாயங்களில் ஞானதேவர், இந்த அற்புத ஒளி - நிழல் விளேயாட்டு அல்லது உள்ளது - இல்லது இரண்டுமே நிலேத்த உண்மை என்னும் சுயம்பிரகாசத்தில்

எப்படி மறைந்திடுகின்றன என்பதுபற்றிக் கூறுவதைக் காண்போம்.

இதுவரை 'அவித்யை', அதனுல் ஏற்படும் சீரழிவு, ஒரே மாதிரியான கற்பனை என்னும் மரணப்பொறி இவற்றில் சிக்கிக் கிடந்த நம் பழைய அநுபவங்கள், உயிருள்ள விதை பின்னுல் முளைவிட்டுச் செடியாகி மலர்ந்திடுவதுபோல் என்றென்றும் அழியாத திவ்விய அநுபூதியாக மாறும் விந்தை தான் என்னே !

ஞானதேவர் சொல்வது போல், ''சுயம்பிரகாசமாக விளங்கும் இந்த உண்மையே, இல்லதும் மாயையுமான அவித்யையை, எல்லையற்ற ஆன்மஞான ஒளியாய் மாற்றி அதையே அநுபவாம்ருதம் என்னும் மலராகப் பூத்திட அருள்மாரி என வந்து பொழிகிறது.''

# ஞானம், அஞ்ஞானம், மெய்ப்பொருள்

ஞானம் என்றால் என்ன? அஞ்ஞானம் என்றால் என்ன? சத்தியம் என்றால் என்ன? - மூன்றாம் வினாவுக்குரிய விடை முதல் இரண்டின் விடைகளைப் பொறுத்திருக்கிறது.

நீங்களும் நானும் மனிதப் பிறவிகள் என்ற முறையில் இந்த வினாக்களை எழுப்புகிறோம். ஆனால் சாதாரணமாக நம்மில் மிகப் பெரும்பாலோருக்கு இந்த வினாக்களை எழுப்ப வேண்டியது அவசியம் என்றே படாது. விலங்குகள் (மிருகங்கள்) இத்தகைய வினாக்களை எழுப்புவதில்லை. ஏதோ வாழ்ந்து மடிகின்றன. நம்மில் பெரும்பாலோர் ஏறத்தாழ விலங்குகளே; அவற்றைப் போலவே நாமும் வாழ்ந்து மடிகிறோம். ஆனால், நாம் அடிப்படையான வினாக்களை எழுப்பி, சுதந்தரமான போக்கில் நம் ஆன்மசக்தியின் துணைக்கொண்டு ஆர்வமுடன் அவற்றுக்குரிய விடைகளை நாடி அறிந்திடத் தொடங்கும் அக்கணமே, நம்மிடம் உள்ள மிருகங்களுக்குரியதான பழக்க வழக்கம், சமூக மரபு இவற்றினின்று பிரிந்து உண்மையான மனிதப் பண்பு உள்ளவராகிறோம். ஆனால் வினாக்களை எழுப்புவ தென்பது ஒன்று; அவற்றுக்குரிய நேரான விடைகளைக் கண்டறிவது என்பது வேறான ஒன்று. இத்தகைய வினாக்களும் உண்மையானவையல்லாமலும் - அதாவது, அறப மகிழ்ச்சியும் பெருந்துயரமும் கொண்டவையாய், நம வாழ்வுக்கும் சாவுக் கும் தொடர்பில்லாதவையாகவும் - இருக்கலாம். அப்போது அவை உண்மையான வினா - விடைகள் என்ற நிலை போய், ஏதோ பொழுதுபோக்காகவே மாறிவிடும். இப்படி வெறும் பொழுது போக்கும்போது, 'வெளித்தோற்றத்தில் அது மனிதாபிமானம்போல் காட்சியளித்தாலும், பழைய மிருக இயல்பும், சமூக இயல்பும் அப்படியேதான் நம்மிடம் நிலைத் துள்ளன' என்னுமல் வேறென்ன என்பது? எனவே, உண்மை யிலேயே மனிதப்பண்புடன் விளங்க, அந்த வினா - விடை களுக்கும், மனிதப் பிறவிகள் என்ற முறையில் நம் வாழ்வு - சாவுக்குமிடையே பொருத்தமான ஒருவகை உறவும் இருக்க வேண்டும். அதாவது, விலங்கு அல்லது மிருகங்களைப் போல் வாழ்ந்து மடியும் இயல்பினின்றும் அறவே வேறானதாக அது அமையவேண்டும். இப்படி உண்மையாகவே மனிதப்

பண்பாட்டுடன் பொருந்திய வினுக்களாக அவை விளங்க வேண்டுமாளுல் மனித விதி என்ற அளவில் அவை சிறப்புற்று அமைய வேண்டும். மனிதன் அல்லாத பிற உயிர்வகைகளினின்று அறவே வேருனவையாக - மொத்தத்தில் பரிணுமத்தின் இறுதி எல்லையை எட்டியவையாக - அவை அமைய வேண்டும். எனவே, நமக்குள் நாமே தீவிரமாக முனைந்து, 'மனிதன் என்ற முறையில் எனக்கே உரிய வழி என்ன ?' என்று வினவிக்கொள்வதுதான் பொருத்தமானது. அடுத்து வரும் பொருத்தமான வினு இதுதான் : 'இந்த அடிப்படையான வினுவுக்கு உண்மையிலேயே பொருத்தமான - திருப்திகரமான - விடை கிடைத்திருக்குமா ? என்னைத் தவிர வேறு எவரேனும் எனக்காக வேண்டி இந்த வினுவுக்கு விடை தருவார்களா ?' என்பதே அது. வேருெருவர் என்ருல் 'நான்' ஆக முடியாது. எனவே, நமது இந்த அடிப்படை வினுக்களுக்குப் பிறர் தரும் விடைகளை ஏற்றுக்கொள்வதென்ருல், நமக்கே உரிய தனிப் பண்பை அடியோடு கைவிட்டு, 'உதவாக்கரை' என்ற அவப் பெயருக்கு நாம் ஆளாகிறமாதிரிதான் ! இந்த நிலையில் 'மனித விதி' என்ற முடிவான ஒன்றுக்கும் நமக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்ருகிவிடும். காரணம், நமக்கே உரிய தனிச் சிறந்த பண்பு அழிவதென்ருல், 'மனித விதி' என்பதே அழிந்தது போலத்தான் !

ஒவ்வொரு தனி மனிதனிடமும் நிலைத்துள்ள இந்தப் பண்பை 'ஆத்மா' என்று அழைக்கிருேம். இது வெறும் இடுகுறியாகும். கணிதத்தில் வரும் X (எக்ஸ்) என்ற குறியீடு போன்றதே இது. நம் வாழ்வு முறை முழுவதையும் தீவிரமாகப் பரிசோதித்து ஆராய்ந்திடும் ரீதியில், 'இந்த ஆத்மா என்ற குறியீடு எதை உணர்த்துவது ?' என்று அறிந்திட முயலவேண்டும். இதுதான் மனித விதியின் இயல்பை உண்மையில் உணர்ந்திடும் முயற்சியாகும். இதையே ஞானதேவர், தனிச்சிறப்புள்ள தம் நூலான 'அநுபவாம்ருத'த்தின் 7, 8-ஆம் அத்தியாயங்களில் எடுத்துரைக்கிருர். ஆளுலும், ஒன்றை மட்டும் நாம் உணர்ந்தாக வேண்டும் : ஞானத்தின் இயல்பை ஆய்ந்தறிய அந்த ஞானம், பற்றியும் அஞ்ஞானம் என்பதுபற்றியும் தீவிரமாக ஆராய்ந்தாக வேண்டும் ; இன்றேல், உண்மையை அறிந்திட இயலாது. எப்போதுதான் இது சாத்தியமாகும் ? 'அவித்யை' (நாமாகக் கற்பித்துக் கொண்ட) நிலையாகிய வெறும் சொல்லமைப்பு என்ற சிறையினின்றும் மீண்டு வெளியேறும்போதுதான் ! ஞானம், அஞ்ஞானம் என்ற இந்த இரண்டு அம்சங்களின் இயல்பை

இப்படி எடுத்துக் காட்டிய பின்பு ஞானதேவர், ஆன்ம இயல்பைக் கண்டிடும் மார்க்கத்தில் ஈடுபடுகிறார். காரணம், இந்த இரண்டுந்தான் நம் மனத்தை நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் பெரிதும் பாதிக்கின்றன. இப்படி உண்மையை அறியும் ஆராய்ச்சியில் ஈடுபடும்போது, முக்கியமாகச் சில வினாக்கள் நம் மனத்துள் எழுகின்றன : ''உண்மையில் நான் அறிந்தது என்ன ? நான் அறிந்தேன் என்பதற்கும், அறியவில்லை என்பதற்கும் என்ன பொருள் ? இதற்கும் என் ஆன்மாவுக்கும் வாழ்வு - சாவுக்கும் என்ன பொருத்தம் என ஏன் ஆராய வேண்டும் ? நான் எதையும் அறிந்துவிட்டேன், எதையும் அறியவில்லை எனக் கேட்பதெல்லாம் எதற்காக ? எனக்குத் தெரிந்தமட்டில் நேரிய ஞானம் என்று கருதுவது உண்மை யானதுதான் என எப்படிக் கொள்வது ? அல்லது ஞானம், அஞ்ஞானம் என்ற இரண்டு வகைக் கூற்றுக்கும் அப்பாற் பட்டதா என்ன, அந்த உண்மை ?''

இந்த வினாக்களுக்கு, முடிவான விடை கிடைக்காது. ஆனால், இங்கே விடை முக்கியமன்று; ஆன்மிக ஆற்றல் பொருந்தியவர்களாய், நம் உள்ளத்தில் எழும் இந்த வினாக் களிடையே வாழ்ந்து காட்டுவதுதான் முக்கியம். ஞானதேவர் எடுத்துக்கூறுவது இதுதான்: அநு - அத்தியாயம் : 7 (155 ; 171) நாம் முற்றும் விழிப்பு நிலையில் இருந்தபடி, நொடிக்கு நொடி நம் வாழ்வில் என்ன நிகழ்கிறது என்பதைக் கவனித்திடுவதே முக்கியமாகும். 'அகந்தை' காரணமாக எழுந்த 'அவித்யை' என்ற குறுகிய அறிவின் எல்லையினின்று மீண்டு வந்தால்தான் நம் வாழ்வில் இப்படி உள்ளூற இந்த வினாக்களை எழுப்பி, மேன்மேலும் ஆராய முடியும். காரணம், இந்த 'அகந்தை' யோடுதானே நாம் பிறந்து வாழ்ந்து மடிகிறோம் ? முந்தைய நிகழ்ச்சிகளினின்று வேறான ஒன்று திடீரென நேர்ந்தாலன்றி, நாம் இந்த அகந்தை நிலையினின்று மீள்வதில்லை. இத்தகைய பெருத்த - தீவிரமான - மாறுதல் நிலை ஏற்படுவது, (சப்தம் அல்லது சொல், அவித்யை இவைபற்றி) ஞானதேவரின் வாசகம் போன்ற ஒன்றைக் கேட்பதனால் நேரலாம். இதனால் நம் வாழ்வு நிலையும் ஆன்ம நிலையும் இன்னவை என உணரும் வாய்ப்பு (அதுவும் நம் ஆன்ம இயல்பு என்பதென்ன, வாழ் வென்பதென்ன எனும் இலேசான உணர்வு காரணமாக) ஏற்படுகிறது. இதனை 'உள்ளும் புறமும் ஆராய்ந்திடும் உணர்வு' என்றாலும் பொருந்தும். இவ்வித உணர்வு நிலையிலேதான், மானிடர் என்ற முறையில் நாம் முழுக் கவனமும் செலுத்திட வேண்டும். இன்றேல் நாம் பிறரைப்போலவே உலகில்

வாழ்ந்திட வேண்டியிருக்கும். எனவே, முன் கூறிய உணர்வு நிலையில்தான் நாம் தலைதூக்க முடியும். மற்றவர்களுடன் இத்தகைய வாழ்வில் பங்கு கொள்ளும்போதும் நம் தேவைகளை நாம் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். அந்தத் தேவைகளே பேராசையாக இழிந்துவிடும்படி அமையாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். இது உலகத்தோடு ஒட்டி வாழும்போதும் சரி, ஆன்மிக நிலையிலும் சரி நம் நினைவில் இருந்திட வேண்டும். இதற்குக் காரணம் நாம் முக்கியமாக வேண்டுவது நம்மை நாமே வினவி விடையை அறிந்திட வேண்டும் என்பதுதான். ஏதோ அப்போதைக்கு நம் ஆசை காரணமாக, சமயத்துக்கேற்றபடி நாமாகவே அமைத்துக் கொண்ட உந்துதலால் விளைவதன்று இந்த நிலை; உள்ளூற வினவுவதற்குரிய உந்துதல்கள் யாவும் எப்போது ஏற்படும் என்றால், நாம் எதனோடும் பற்றற்று வாழும் நிலையிலேதான். நம்மை நாமே கண்டறிவது என்பது முக்கியமன்று; நாம் இன்னார் என்ற வினவைக் குறித்து ஆராய்வதுதான் இன்றியமையாதது. இப்படி வினவும் நிலையிலன்றி, ஞானம், அஞ்ஞானம் என்பவற்றின் இயல்புபற்றி ஆராய்வது பொருளற்றது; பொருத்தமும் அன்று. ஞானதேவர் கூறுவதுபோல், இது 'மலடியின் மகனுக்கு மணம் நடத்துவது' போன்றதே - ஏன்! 'மரக்குதிரைகளை வைத்துக்கொண்டு. உண்மைப் போரில் கலந்துகொள்வது' போன்றதேதான்!

இவை அனைத்தையும் கருத்தில் கொண்டு, ஞான - அஞ்ஞான இயல்புகள் நம் வாழ்வில் ஆன்ம உணர்வைத் தட்டி எழுப்புவதுபற்றிய உண்மையை ஞானதேவரின் வாய் மொழியாகவே கேட்டறிவோம் :

''முதலில் அஞ்ஞானத்தின் இயல்புகுறித்து ஆராய்வோம். இப்படி ஆராயும்போது, 'அதில் தோன்றும் ஞானம் அஞ்ஞானம் என்ற இரண்டுமே மெய்யானவை அல்ல' என்பதை உணர்வோம்.'' (அநு : 7-7)–இது நம்மில் பெரும்பாலோருக்கு அதிர்ச்சி தரக்கூடும். ஞானதேவர் கூறுவதேபோல், ''ஞானம், அஞ்ஞானம் இரண்டுமே வெறும் சொற்கள் அல்லது கற்பனைகளே!'' எனவே, அவை உண்மையாகா என்றால், அவை குறித்து நாம் ஏன் ஆராய வேண்டும்?

முடிவாக, எஞ்சிநிற்பது நான், நீ என்ற ஆன்ம பாவந்தான். இந்த 'நான்' என்பதும், 'நீ' என்பதும் ('அஹம்'-'த்வம்' இரண்டும்) தம்மைத் தாமே அறிந்த வஸ்துக்கள் (உண்மைப் பொருள்கள்) ஆகும். நாம் 'வாழ்கிறோம்' என்பதை உணரு

கிறோம். 'நாமும் இந்த உலக (மனித சமூக)மும், நாம் அறிய இயலாதபடி பரஸ்பரம் சம்பந்தப்பட்டிருக்கிறோம்' என்பதையும் உணருகிறோம். இவ்விதமான ரகசியமும் அதிசயமும் மிக்க ஒரு சூழ்நிலை எதிர்ப்படும்போது நாம், "எனக்கு இந்த ரகசியத்தின் போக்கே ஒன்றும் விளங்கவில்லையே!" என்றோ, "உண்மையை அறிய முடியவில்லையே!" என்றோ கூறுகிறோம். இதினின்று என்ன தெரிகிறது? அஞ்ஞானம் ஞானத்துடனேயே இருந்து வருகிறது என்பதுதான். அதற்குமேல் துருவி ஆராயாமல், இந்த நிலையை ஏற்கிறோம். அப்போது நாம், "இது எப்படிச் சாத்தியம்? ஒளியும் இருளும் எவ்வாறு சேர்ந்து ஒரே இடத்தில் இருக்கமுடியும்?" என்று கேட்பதில்லை. இதுதான் ஆத்ம ஞானம் என்பதன் உட்பொருளை உணர்வதற்கு வேண்டிய முக்கியமான சோதனை வழியாகும்.

ஞானதேவர் கூறுகிறார்: "ஞானம் [தன்னைத் தான் அறிவது] என்பதை ஊக்கிவிடாவிட்டால், அஞ்ஞானம் என்ற ஒன்றைப் பற்றியே நாம் கேள்விப்பட்டிருக்க முடியாது. மின்மினிப் பூச்சியைப்போல் அஞ்ஞானமும் இருளை ஆதாரமாகக் கொண்டு மங்கலாக ஒளிரப் பார்க்கிறது. நாம் அரைகுறை உறக்கத்தில் இருக்கும்போது, கனவு முக்கியமான ஒன்றாக நமக்குத் தோற்றுவது போலவோ, நம்மைச் சுற்றி இருள் சூழ்ந்திருக்கும் போது அந்த இருள்தான் நமக்குப் பெரிதாகப் படுவது போலவோ, நமக்குள்ளேயே அஞ்ஞான நிலை இருளாக மண்டிக் கிடக்கும்போதுதான் அஞ்ஞானமும் முக்கியமானதாகப் படுகிறது.

"நாம் அஞ்ஞான இருளில் இருக்கும்போது, அதைப் பெரிதாக எண்ணும் நிலை எப்படி இருக்கிறது தெரியுமா? உண்மையாக நடக்கும் போரில் மரக்குதிரையின் உதவி கொண்டு எப்படிப் போரிட முடியாதோ, மாந்திரிகத்தால் தோற்றுவித்த அணிகலன்களை எப்படி நம் உடம்பில் பூண இயலாதோ அது போன்றதுதான்.

"அஞ்ஞானம் என்பது, தன்னைத் தானே அறிந்த ஆத்மாவின் முன் ஏதோ ஒரு பொருளை வீசி எறிவது போன்றதாகும். அந்த நிலையிலும் ஆத்மா பாதிக்கப்படாமல் முன்போலவே இருக்கிறது. நிலவின் ஒளி, கானல்நீரைத் தோற்றுவிக்குமோ? எனவே, அஞ்ஞானத்துக்கு மாயத்தோற்றம் உண்டுபண்ணும் சக்தி கிடையாது. ஏன், எந்த விதத்திலும் உண்மையைப் பாதிக்கும்படி செய்யவும் அதனால் இயலாது.

''இனி, 'ஞானம்' என்பது என்ன? அஞ்ஞானத்தினின்றும் அது வேறுபட்டது என்றாலும், (அறிவு - அறியாமை) இரண்டிலுமே ஏதேனும் ஒன்று எதிர்ப்படும்போது, எது ஞானம், எது அஞ்ஞானம் எனப் பகுத்துணர முடியாத நிலை ஏற்படுகிறது. இதனால் ஞானம் என்பதே அஞ்ஞானத்தை விட முக்கியமானது என்ற உண்மை நமக்குப் புலனாவதில்லை. எப்போதும் நிலைத்து உயிர்த்துடிப்புடன் விளங்குவதான ஆத்மஞானத்தைப் பார்க்கும் ஆற்றல் ஞானம் – அஞ்ஞானம் இரண்டுக்குமே இல்லை'' (அநு. 7- 1 - 6).

இவை யாவும் நமக்கு வியப்பாக இல்லையா? நாம் 'அறிவே ஆதிக்க சக்தி அல்லது ஆற்றல் மிக்கது' என நம்பிப் பழக்கப்பட்டவர்கள். ஆனால், 'எதற்காக இந்த ஆதிக்க சக்தி பயன்பட வேண்டும்? யாரை அடக்க இது வேண்டும்?' என நாம் நமக்குள் கேட்டுக்கொள்வதில்லை. அப்படி ஆதிக்க சக்தி என்பதற்கு 'மனித இயல்பை அடக்குவது' எனப் பொருள் கொண்டால் அதைப் போய் ஞானம் என்று எப்படிச் சொல்வது? ஞானம் என்பது தூயதான அறிவும், அனைத்துயிர்களிடமும் அன்பு கொள்வதும் அன்றோ?

ஆதிக்க சக்தி, ஞானம், அஞ்ஞானம் இவற்றின் பொருளை இன்னதென ஆராய்ந்தறிய முடியாத அவலநிலையில் நாம் இருக்கிறோம். இதற்குக் காரணம், நம்முடைய பழைய அநுபவங்களில் நாம் கட்டுண்டு கிடப்பதுதான். மனிதனையும் இயற்கையையும் அடக்கி ஆளும் அதிகார ஆணவத்தின் போக்கை உணரத் தவறிவிட்டதால் 'உண்மை இன்னது' என நம்மால் அறிய இயலவில்லை. நம் அதிகார ஆணவத்தினால் இயற்கையையே நாம் அடக்கி ஆள்வதால், உலகம் முழுவதும் உள்ள சூழ்நிலையையே கெடுத்துப் பாழாக்கி விடும் பிரச்னையைத் தோற்றுவித்துள்ளோம். இந்தப் பாழும் சூழ்நிலை, மனித வாழ்வுக்கே பேராபத்தாக முளைத்திருக்கிறது. இதே அதிகாரத்தைக்கொண்டு மக்களையும் நாம் அடக்கி ஆள்வதால், உயிரும் உணர்வும் உள்ள அவர்களை வெறும் இயந்திரப் பொம்மைகளாக்கி இதயமற்றுக் கொடுஞ் செயல் புரியவைக்கும் செயற்கை அறிவியலின் ஆணைக்கு அடங்கி நடப்பவர்களாகவும் ஆக்கிவிட்டோம்.

அதிகார வேட்கை காரணமாக நேர்ந்த இந்தப் போட்டியால், இயற்கையின் அற்புதப் படைப்பான மனிதன் - பிரபஞ்சத்திலே தன்னைத் தான் அறியும் உள்ளுணர்வு கொண்ட ஜீவன் - பகுத்துணரும் ஆற்றலை இழந்துவிட்டான். இதனால்

மனிதர்களாகிய நாம் பெரிதும் இரங்கத்தக்க நிலைக்கு - ஆதிக்க சக்தி என்பதும், அறிவு என்பதும் ஒன்றே எனக் கருதும் அவலநிலைக்கு - வந்துவிட்டோம். இந்த ஆதிக்க சக்தியே, கேவலம் தன்னைத்தானே அழித்துக்கொள்வதை 'மனித விதி' என்று கருதும் நிலைக்கு நம்மைக் கொணர்ந்து விட்டிருக்கிறது!

'மனிதன் தனது வரலாற்றில் புரிந்த சாதனைகள் வெறும் மடமை' என்பதைக் கண்டறிந்து, இந்த மாபெரும் அழிவு நிலையிலிருந்து மீள வழி காண முயல்வோர்தாம் ஞானதேவரின் அற்புத அருள்மொழியில் பொதிந்துள்ள ஆற்றலின் எழிலைக் காண முடியும். ஞானதேவர் சொல்வது இதுதான்: "என்றும் நிலைபெற்றதான ஆத்மா, இயல்பாக, தன்னைத்தானே அறியும் ஆற்றல் படைத்தது." இந்த ஆற்றல் காரணமாகவே ஆத்மா எதனாலும்-மனிதனாகவே கற்பித்துக் கொண்ட ஞானம் அல்லது 'அறிவு' என்னும் ஒன்றாலோ, 'அஞ்ஞானம்' என்ற ஒன்றாலோ – என்றென்றும் பாதிக்கப்படாமல் இருக்கிறது. இந்தப் பேருண்மையை மனிதன் உணர்ந்த மாத்திரத்தில், [வாஸ்துப்ரபா அல்லது] உண்மையின் திவ்விய ஒளியைக் காணக் கொடுத்து வைக்கிறான். இந்தப் பேருண்மையின் ஒளி, பிரபஞ்சத்தின் அற்புத விளையாட்டாம் படைப்பாற்றலை அவனுக்குக் காட்டுகிறது.

இனி ஞானதேவர் சொல்வதை ஊன்றிக் கவனித்து, அவருடன் நம்மை நாமே அறியும் நெறியில் செல்ல முயல்வோம் :

"ஞானம், அஞ்ஞானம் இரண்டுமே நம் ஜீவனுடன் இணைந்திருப்பதாகக் கருதப்படுகின்றன. அஞ்ஞானம் என்பது, இயல்பாகவே, தான் உள்ள இடத்தைக்கூட இருளாக்கி, ஒன்றுமே விளங்காதபடி செய்யக் கூடியதாக இருக்கவேண்டும். ஆத்மாவுடன் இந்த அறியாமை அல்லது அஞ்ஞானமும் உறைவதாகக் கொண்டால், இது ஆத்மாவையேகூடத் தன்னைத் தானே உணராதபடி செய்துவிடுமே! அப்படிச் செய்கிறதா ? அஞ்ஞானமும் கூடவே இருப்பதால் ஆத்மா 'நான் யார்?' என்பதை அறிய இயலாமலா போகிறது?

"அவ்வாறு ஏதும் நிகழவில்லை ; எனவே, அந்தக் கூற்று உண்மை அன்று. அஞ்ஞானம் அவ்வாறு ஏதும் செய்வதில்லை. என்றாலும், ஆத்மவித்யையை உணர்த்தும் நம் சாஸ்திரங்கள், 'ஆத்மாவே அஞ்ஞானம் ; அந்த அஞ்ஞானம் தனக்கு ஆதார

மாக உள்ள ஆத்மாவையே மூடி மறைத்துக் கொள்கிறது' என்று கூறுகின்றனவே! அப்படி என்ருல், ஆத்மா தன்னுள் அஞ்ஞானத்தின் விதையைக் கொண்டுள்ளதென்றும், அந்த விதையே முளைவிட்டு வளர்ந்து ஆத்மாவையே மூடிக்கொண்டு விடுமென்றும் பொருள்படுமே! இதை உண்மை என ஏற்றுக் கொண்டால், 'அஞ்ஞானத்தால் மூடுண்ட ஆத்மா இருந்த இடத்தில் இனி என்னதான் உள்ளது? அஞ்ஞானம் என்ற ஒன்று உண்டு என்பதை விளக்குவதற்காகவாவது, பின் அங்கு என்ன இருக்கிறது?' என்ற கேள்வி எழுமே; ஏன், 'ஆத்மா என்ற ஒன்று உண்டா இல்லையா?' என்ற கேள்வியும் எழத்தானே செய்யும்?

''அப்படியானுல் அங்கே அஞ்ஞானமோ ஞானமோ உண்டு என்னும் உணர்வே ஏற்படாத நிலைதானே இருந்திடவேண்டும்? இதுதான் உண்மை; என்ருலும், நம் சாஸ்திரங்கள் (அவற்றுள்ளும் வேதாந்தபரமான நூல்கள்) அங்குள்ள அஞ்ஞான நிலையே அது இருப்பதற்குச் சான்ருகும் எனச் சாதிக்கின்றன.

''இது எப்படிச் சாத்தியமாகும்? அதாவது, 'முதலில் அஞ்ஞானம் என்பது ஆத்மாவை அறிவற்றதாகச் செய்து விடுகிறது' எனக் கருதுகின்றன, அந்த வேதாந்த நூல்கள். இதோடு, 'தன்னைத்தான் உணர்ந்திடும் அறிவு நிலையேகூட அந்த அஞ்ஞானம் சூழ்வதால், இருள் நிறைந்ததாயும், ஜடமாகவும் ஆகிவிடுகிறது. இப்படி அறிவிழந்த நிலையில், அஞ்ஞானம் என்ற ஒன்று உண்டு என்பதுபற்றிய உணர்வை உணர்த்த அந்த ஆத்மாவினுல் இயலாது போகிறது' என்று அவைகூறுகின்றன; அடுத்து, 'தன்னைத் தானே உணர்ந்துவிழிப்பு நிலையில் உள்ளது ஆத்மா' என்ற உண்மையைப் பொருட் படுத்தாதிருக்கும்படி வேறு கூறுகின்றன! ஆத்மா என்பது சூரியனைப் போன்றது; மேகத்தால் மறைக்கப்பட்டிருந்தாலும், சூரியன் அம்மேகங்களைச் சுற்றித் தான் வீசும் பேரொளியால் தான் இருப்பதைப் புலனுக்குகிறது; ஆத்மாவும் அத்தகையதே.

''தன்னைப்போலவே ஆத்மாவையும் அறியாமை கொண்ட தாக ஆக்கும் ஆற்றலற்ற ஒன்றை 'அஞ்ஞானம்' எனக் குறிப் பிடுவது எதைப்போல் இருக்கிறதென்ருல், விறகுக்குள் அடங்கிய ஒன்று (முன்பு) அந்த விறகை எரிக்காதிருந்தபோதிலும் விறகையே 'தீ' என்ருே, 'வீட்டினுள் இருள் என்ற ஒன்று மண்டிக்கிடக்கிறது; அதுதான் வீட்டிலுள்ள பொருள்களைப் புலனுகாதபடி செய்துவிடுகிறது' என்ருே, எப்போதும் விழிப்

புடன் இருந்து கூப்பிடும் குரலுக்குத் தயாராக இருந்து மனிதன் தன் நினைவு தப்பாதபடி இருக்க எச்சரிக்கையுடன் கவனித்து வரும் ஒன்றை 'உறக்கம்' என்றோ, பகலொளியினின்று எதையும் கவர்ந்து செல்லாத ஒன்றை 'இரவு' என்றோ குறிப்பிடுவது போலத்தான்!

"உண்மை என்னவென்றால், ஆத்மா என்பது ஒளியைத் தந்திடும் பெருஞ்சுரங்கம் போன்றது. அறியாமையோ கன இருள் ஆகும். இந்த இரண்டும் ஒன்றாக இருந்திட முடியாது. எனவே, 'ஆத்மாவிடம் அறியாமை உள்ளது' என்று கூறுவது அறிவீனமாகும். காரணம், என்றும் உளதாகிய ஆத்மா, அஞ்ஞானமே இல்லாதபடி செய்துவிடுவதுதான். எனவே, 'அறியாமை' என்ற சொல்லுக்குப் பொருளும் இல்லை; அஞ்ஞானம் என்பதுமில்லை."

"அறியாமையை நம் கண்ணால் காணமுடியாவிட்டாலும், அது உண்டு என்பதை யூகத்தினால் நிரூபிக்க முடியும். அதாவது, நம் கண்ணுக்குப் புலனாகாத மூலகாரணத்தை அதன் விளைவால் உணரமுடிகிறது!" என்று வாதிக்கிறார்கள் சிலர். இதை ஞானதேவர் குறிப்பிட்டு, மேலும் கூறுகிறார்: "இப்படி வாதிப்பவர்கள் பின்வரும் உதாரணங்களைத் தம் கொள்கைக்குச் சார்பாகக் குறிப்பிடுகிறார்கள்: 'ஒரு விதையி னின்று முளைத்து வளரும் கொடியே விதையாகிவிடாது. கனவில் உள்ள உணர்வு நிலை இன்ப-துன்ப நிகழ்ச்சிகளை வெளிப்படுத்தினாலும், அந்த உணர்வு நிலையே உறக்கம் ஆகிவிடாது. அது உறக்கத்தின் ஒரு விளைவேயாகும். (மங்கிய பார்வைக்கு) வானத்தில் இரண்டு சந்திரர்களைக் காண்பது போன்ற தோற்றம் தெரிந்தாலும், உண்மையில் ஒரே சந்திரன்தான் உள்ளது. இப்படி இரண்டாக மாறு பட்டுத் தெரிவதைக் கண்ணின் கோளாறு என்று கொள் ளாமல் அதன் விளைவு என்றே கொள்ளவேண்டும். இப்படி எல்லாப் புலன்களாலும் நேர்முகமாகவோ, யூகத்தால் மறைமுகமாகவோ, அப்புலன்களின் கோளாறு அல்லது உள்ளத்தின் குறைபாடுகளாலோ ஏற்படும் யாவும் அறியாமையின் விளைவுகளேயன்றி இவையே அஞ்ஞானமாகா. இதேபோல் அறிந்தவன் - அறியக்கூடியது - அறிவு என்ற மூன்றும் அஞ்ஞானத்தின் விளைவுகளே; இவையே அஞ்ஞான மாகா. **(7.43.46)**'

"இத்தகைய சாதுர்யமான வாதங்கள் யாவும் வெறும் சொல் ஜாலமே! நாம் பார்க்கும் ஒவ்வொரு பொருளும்

அஞ்ஞானத்தின் விளைவே என்று கொண்டால், அப்போது பார்ப்போரையும் அறியாமையின் விளைவு என்றுதானே கருத வேண்டியிருக்கும்? பார்ப்போராகிய நாம் அப்படிப் பார்க்கும்போது, அஞ்ஞானமே தன்னைப் பார்த்துக்கொள் கிறது என்று நம்மைப்பற்றிச் சொல்லிக்கொள்வதைப் போலத்தானே ஆகும்? அல்லது ஜடப்பொருளான சர்க்கரை தன்னைத்தானே சுவைத்துக்கொள்கிறது என்பது போன்ற தாகுமன்றோ? இத்தகைய சந்தர்ப்பத்தில் மூலகாரணமாகிய அறியாமையும் அதன் விளைவாகிய உலகம் என்பதும் ஒன்றேயாகிவிடுமே! அதனால் காரணத்துக்கேகூட மூலமாக இருந்து காரியத்தை நடத்துவதற்கு ஏதொன்றும் இல்லை என்ற நிலைதானே ஏற்படும்? அப்புறம் கொடுக்கல், வாங்கல் என்பதும் இராதே! சாட்சியம் அல்லது சான்று காட்டக் கூடிய தகுதிக்கும் இடம் இராது போய்விடுமே! இப்படிப் பார்ப்போரையும், பார்க்கும் பொருளையும் ஆட்டிவைக்கும் ஒன்று இராவிட்டால் அஞ்ஞானம் உண்டு என்பதை நிரூபிப்பதுதான் யார் அல்லது எது?

''ஒருவிதமான விளைவுக்கும் இடங்கொடாததை (காரண மாக இராததை)க் காரணம் என்று எப்படி மதிப்பது? அஞ்ஞானமே காரணம் என்றும், நாம் பார்க்கும் எல்லாம் அஞ்ஞானத்தின் விளைவே என்றும் கருதுவோர், 'தன்னையே கூட ஆத்மா என்று சொல்லிக்கொள்ள ஒப்பாதது இந்த ஆத்மா' என்ற உண்மையை உணருவதில்லை. பெயரே இல்லாதபோது அஞ்ஞானத்துக்குத்தான் இடம் ஏது? இப்படிப் பெயரிடுவதுதான் அஞ்ஞானத்தின் விளைவாகும். இந்த அஞ்ஞானந்தான் நாம் காணும் அனைத்துக்கும் காரணம். இத்தகையதான 'அஞ்ஞான'த்தை ஆதாரமாகக் கொண்டு புரிந்திடும் வாதம், திரியே ஏற்றாத ஓர் எண்ணெய் விளக்கில் கருகிப்போன கசடுகளையெல்லாம் ஒன்றுகுவிப்பது போன்றதுதான்; அல்லது நட்டே இராத தாவரம் மரமாகி நிற்க, அதனடியில் அமர்ந்திருப்பது போன்றதுதான்!

''நான் என்பதை இன்னதென விளக்குவதைக்கூட ஒப்பாதது ஆத்மா. இதுதான் உண்மை. 'நான்தான் அறியாமை (அஞ்ஞானம்)' என்று தன்னை வெளிப்படுத்திக் கொள்ள ஒருவர் இல்லாத நிலையில் அந்த அஞ்ஞானம் எப்படித் தோன்றிட முடியும்? ஆத்மா அப்படி ஏதும் சொல்வதில்லை. நீங்களோ நானோ 'நான் அறிவிலி' என்று சொல்வது நிலைபெற்ற உண்மைப் பொருளைக் கண்டறியாத

தால்தான். நாம் ஆத்மாவைப்பற்றிச் சொல்வதெல்லாம் 'அது உண்டு' என்பதுதான். 'எப்படி, ஏன் உண்டானது இன்று உள்ள இந்த உலகம்? இதில் நாமும் ஓர் அம்சமாக **இருக்கிறோமே!** இதன் ரகசியந்தான் என்ன?' என்று வியக்கிறோம். இதேபோலத்தான் அந்த ஆத்மாவைப்பற்றியும் எண்ணி வியக்க வேண்டியிருக்கிறது! ஆத்மா, தான் உண்டு என்பதை அறிவிப்பதுமில்லை; மறுப்பதுமில்லை. இத்தகைய ஒரு நிலை அஞ்ஞானத்தை ஒத்ததன்று; உண்மையில் இதை அஞ்ஞானம் என்றோ, ஞானம் என்றோகூடக் குறிப்பிட முடியாது. இதை உள்ளதாம் (பாவ) நிலை என்றோ அல்லது உள்ளதல்லாத (அபாவ) நிலை என்றோ கூடக் குறிப்பிட முடியாது. 'ஒன்றுமே இல்லாதது (நஹீபனு) சுக்கு நூறாக உடைந்தது போன்றதுதான் அஞ்ஞானம். சாவு என்பது என்றென்றும் இறப்பாகவே இருப்பது போன்றது அது; ஆகவே, இருக்கமுடியாத ஒன்று அது. கால ஓட்டத்தில் எந்தக் கணத்திலும் எந்த நிலையிலும் அஞ்ஞானம் என்ற ஒன்று இருந்ததில்லை! இந்த உலகம் உள்ளது போன்று ஆத்மாவும் 'உள்ள'தாம் பொருள்தான்; 'வாஸ்தவ'மானது தான்; சொல்லவோ, பேசவோ விளக்க முடியாதது அது; 'விழிப்புடன் இருந்து கவனிக்கும்' ஒன்றாக (சின்மாத்ரையாக) விளங்குகிறது அது. அதை ஆராய்ந்திடுவதாலோ, சோதனை செய்வதாலோ, உய்த்தறியப் பார்ப்பதாலோ 'அஞ்ஞானம்' இன்னதெனக் கண்டுகொள்ளவும் இயலாது. இத்தகைய முயற்சி, உறக்கத்தினின்று எழுந்தவன், அந்த உறக்கத்தை மீண்டும் பற்றிப்பிடிக்க முயல்வது போன்றதுதான். ஆகவே, (அஞ்ஞானம் என்ற ஒன்று இருக்கிறதா என) இவ்வாறு கண்டறிய முயல்வதே வெறும் பித்துக்குளித்தனந்தான். ஏன், அஞ்ஞானத்தைக் கண்டிட முயல்வதே உண்மையை உணராததாலேதான்; காணாததாலேதான்! கூர்ந்த அறிவு என்னும் நிலைக்களத்தில் 'அஞ்ஞானம்' என்னும் பொருள் இருந்திடவே இடமில்லை. எதையும் ஆராய்வதென்பது அறிவின்பாற் பட்டதாகும். இப்படி ஆராயத் துணிந்த விழிப்பு நிலையே, உறக்கம் போன்றதான அறியாமையை அறவே அழிப்ப தொன்றாகும்''. மேலும், 'அஞ்ஞானம் உண்டு' என்று கூறும் வகையைச் சேர்ந்த மற்றொரு வாதத்தையும் ஞானதேவர் இப்படிக் குறிப்பிடுகிறார்:

''வேதாந்திகள் போன்ற சிலர், 'நாம் இந்த உலகத்தை நேரில் காண்கிறோம்; அதே சமயம் இதன் உண்மை இயல்பு

என்ன என்பதை நம்மால் அறிய முடிவதில்லை. இந்த நிலையே அஞ்ஞானத்துக்குச் சான்ருகும்' என்கிருர்கள். 'அஞ்ஞானத்தை நேருக்கு நேர் காண முடியாது என்பது உண்மைதான். ஆனல் நேரில் கண்டும் இந்த உலகின் உண்மை இயல்பை அறிந்து கொள்ளும் சக்தி நம்மிடம் இல்லாததால்தான் அஞ்ஞானமே நாம் காண்பதற்கெல்லாம் மூலகாரணம் என்று வலியுறுத்து கிறேம். இந்த உலகம் என்ற ஒன்று இல்லை என்று நம்மால் மறுப்பதற்கில்லை. அதேபோல் இந்த உலகின் உண்மை நிலையை உணராததற்கு அறியாமையே காரணம் என்பதையும் மறுப் பதற்கில்லை. எனவே, இந்த அறியாமையே (நம் கண்ணுக்குப் புலப்படாதபடியிருப்பினும்) எதற்கும் மூலகாரணமாக உள்ளது' என்கிருர்கள். இந்த வாதத்துக்கு ஆதரவாகப் பின் வரும் உதாரணங்களை எடுத்துக்காட்டுகிருர்கள்: 'மரம் போன்ற தாவரங்கள் நிலத்தினின்று வேறுபட்டவை என்பது தெளிவாகத் தெரிகிறது. கண்ணுக்குப் புலப்படாத நீரை நிலத்தின் அடியி லிருந்து உறிஞ்சி மரம் தழைக்கிறது. தாவரங்களைக் கொண்ட இந்த இயற்கைக் காட்சியே நீர் என்ற ஒன்று நிலத்தினடியில் கண்ணுக்குப் புலனுகாமல் இருந்தபடி மரம் தழைக்க உதவு கிறது. இதுவே நீர் என்ற ஒன்று உண்டு என்பதற்குச் சான்ரு கும். இப்படி ஒரு காட்சியைக் காண்பதற்கே கட்புலனுகாத ஒன்று காரணமாக இருக்கிறது. ஆக, இவ்விதமே, பார்க்க முடியாத அஞ்ஞானமே கட்புலனுவதற்கெல்லாம் காரணமாக உள்ளது' என்கிருர்கள். (7-85-92)''

இனி ஞானதேவர் இதற்கு என்ன விடை தருகிருர் என்று பார்க்கலாம்: ''இப்படிக் காணமுடியாத ஒன்றே அஞ்ஞானம், அதுவே இந்தக் காட்சிக்குக் காரணமென்பதெல்லாம் பொருந்தாத கூற்ருகும். அஞ்ஞானத்தின் இயல்பு, எதனையும் அறியமுடியாதபடி ஆக்கிவிடுவதுதான். மேலே குறித்த உதார ணத்தில் கட்புலனுகாத ஒன்று எல்லாவற்றையுமே காண உதவுகிறது. அதாவது, பார்ப்போர், தாம் காணும் காட்சியை அது காண முடியாதபடியோ அறிய முடியாதபடியோ இந்த ஒன்று (நீர்) ஏதும் செய்துவிடவில்லை. அப்படிக் கட்புலனுகாத ஒன்றை அஞ்ஞானத்துக்த ஒப்பிடுவது, ஒளிதரும் சுடர்க் கொழுந்தை இருள் என்று சொல்வது போன்றதாகும்

''பார்ப்போருக்கும் பார்க்கப்படும் பொருள் அல்லது காட்சிக்குமிடையே உள்ள பரஸ்பர சம்பந்தத்தின் தன்மை அல்லது பான்மை, விழிப்பு நிலை என்ற ஒன்று இருப்பதற்குச் சான்ருகும். அற்புதச் சுயம்பிரகாசமாய் விளங்கும் இந்தத் தன்மையை 'அஞ்ஞான வெள்ளம்' என்று சொல்வது

பொருத்தமற்ற ஒன்ருகும். பிற வேறு ஒரு பொருள் உண்டோ இல்லையோ, இந்தச் சுயம்பிரகாசமான விழிப்பு நிலைமட்டும் எப்போதுமே இருந்து வருகிறது. நம் ஆத்மாவில் அது ஒன்றுதான் நிலையாக இருந்து வருகிறது. அதுதான் நம்மை, எப்போதும் நம்மை நாமே உணரும்படியான விழிப்பு நிலையில் வைத்திருக்கிறது. பிற யாவும் ஐயத்துக்கு உரியனவாகும். அவை வெறும் கற்பனைகளே. இந்த உண்மையை நாம் உணர்ந் தாலும் சரி, உணராவிட்டாலும் சரி, நம் கண்ணுல் பார்க்க முடிந்தாலும் சரி, பார்க்க முடியாவிட்டாலும் சரி, அது (தத்) மட்டும் இருந்தே வருகிறது, நாம் வேறு கவனமாக இருந்திட நேரலாம்; நம்மிடமே நாம் நேர்மையற்றவர்களாக நடந்து கொள்ளும்படியும் இருக்கலாம். ஆனுல் எப்போதும் எச்சரிக்கை யுடன் இருக்கும் ஒரு பான்மையினுல், இந்தச் சுயம்பிரகாசமான விழிப்பு நிலை பாதிக்கப்படாது. இந்த நிலையான ஒன்று இருப்ப தால், வேதாந்திகள் கூறுவதுபோல் நாம் காணும் இந்த உலகமே 'மித்யை' (பொய்) அல்லது 'மாயை' எனக் கருதுவது, உண்மை நிலையை மதிக்காததால் விளையும் தவருகும்!

''பார்ப்போர், பார்க்கப்படும் பொருள் இந்த இரண்டு அம்சங்களுக்கும் முந்தியே உள்ள ஒன்றுதான் சுயம்பிரகாச மான இந்த ஆத்மநிலை; பார்ப்போர் - பார்க்கப்படும் பொருள் இவ்விரு அம்சங்களுக்குமிடையே எப்போதும் உள்ள பரஸ்பர உறவை உணர்ந்திட அதுதான் நமக்கு உதவுகிறது. நம் அகந்தை காரணமாகவோ கற்பனை காரணமாகவோ எழும் உணர்வு அன்று 'அது'. உண்மைகளுக்கெல்லாம் உண்மையாக விளங்குவது 'அது' (தத் என்ற அம்மெய்ப் பொருள்). எதையும் - ஏன், சூன்யத்தையுந்தான் - தன்னுள் அடக்கிக் கொள்ளும் பான்மையது 'அது'. அந்தத் 'தத்' (அது) என்பதே ஆத்மாவின் உட்பொருளாகும். 'அது' தன்னைத்தானே காணும் பொருளாக இருக்க விழைவதில்லை; நா தன்னையே சுவைத்துக் கொள்ளுமோ? கொள்ளாதன்றே? இது போன்றே 'அது'வும் உள்ளது.

''வெறும் சொற்களையும் வாதங்களையும் விட்டு, முக்கிய மான ஒன்றைக் கவனிப்போம்: என்றென்றும் சுயம்பிரகாச மாய் விளங்கும் அந்தத் தன்னுணர்வினை அறிந்திட வேண்டும். அது சொல்லால் விவரிக்க முடியாத தூயநோக்கு; இன்றி யமையாதது. அந்தத் தன்னுணர்வே நம்முள் உறையும் 'ஆத்ம' னுக்குத் திவ்விய திருஷ்டி தந்து, பார்ப்போன் - பார்க்கப்படும் பொருள் இந்த இரண்டு அம்சங்களையும் ஒரே சமயத்தில்

அறிந்திட உதவுகிறது; கண்ணற்ற குருட்டுப் பொருளான இந்த உடலுக்கு, காணும் உண்மையாற்றலை - வாஸ்தவத்தைக் கண்டிடும் சக்தியை - அளிக்கிறது.

''இந்த 'வாஸ்தவம்' அல்லது உண்மையை, 'பார்ப்பவன்' என்றோ 'பார்க்கப்படும் பொருள்' என்றோ கூற முடியாது. ஆயினும் ரகசியம் மிக்க இந்த மெய்ப்பொருளினுள்ளேதான் 'பார்ப்பவன்', 'பார்க்கப்படும் காட்சிப் பொருள்' என்ற இரண்டு அம்சங்களிடையே போராட்டம் நடைபெறுகிறது. அதுதான் சுயம்பிரகாசமான ஒளியை வீசி, பார்க்கப்படும் பொருளாகிய இந்த உலகையும் மெய்ம்மை நோக்கின் உருவாம் தீர்க்கதரிசிகளையும் தோற்றுவித்து, அந்தக் 'காட்சி'யைக் காண வழிவகை செய்கிறது. பார்ப்போராகிய மெய்ஞ்ஞானிகளுக்கும்; பார்க்கப்படும் பொருளுக்கும் அடிப்படையில் சுயம்பிரகாச மான விழிப்புணர்வு (சின்மாத்ரை) எப்போதும் இருந்து வருகிறது. கண்ணுக்குத் தெரியாத இவ்விழிப்புணர்வின் போக்கு தீவிரமாகும்போது, பார்க்கப்படும் பொருளாகிய உலகம், புத்தம் புதிய உருவங்களில் தோற்றமளிக்கிறது; கணந்தோறும் இவ்வாறு அந்தத் தீர்க்கதரிசிகளின் பார்வையில் புத்தம் புதிய நோக்கை 'அது' அளித்திடுகிறது; ஒரு கணம் கடந்து மறு கணம் வரும்போது, முந்தையது பழமையதாகிச் சலிப்பூட்டு கிறது; இப்படி. மீண்டும் மீண்டும் பழமை நோக்கை விடுத்து, என்றென்றும் புத்தம் புதுப் பொருளையே அவர்கள் கண்டிட உதவுகிறது. இவ்வாறெல்லாம் நிகழும்போது பார்ப்போராகிய தீர்க்கதரிசிகளின் விழிப்புணர்வு, கணந்தோறும் புத்தம் புதிய மெய்ஞ்ஞானம் மேலும் செறிந்திட விளங்குகிறது. அப்போது என்றென்றும் புத்தம் புதுப் படைப்புகளும், புத்தம் புதிய நோக்கும் மலர்கின்ற வாய்ப்பு ஏற்படுகிறது. இதனால் மனித சமுதாயத்தில் மெய்யறிவு செழித்து, முடிவற்று வளர்ந்து கொண்டே போகிறது. தனக்கு இணையென ஏதும் இல்லாத வாஸ்தவம்' அல்லது சின்மாத்ரை என்ற எல்லை காணாத பேரமைப்பினிடையே இப்படி ஓர் அற்புதத் திருவிளையாடல் நிகழ்கிறது.

''இப்படி, பார்ப்போர்-பார்க்கப்படும் (காட்சிப்) பொருள் ஆகிய இரண்டு அம்சங்களிடையே பரஸ்பரப் பரிமாற்றம் நிகழ்கிறது. இவ்வளவும் எண்ணிக்கைக்கு அப்பாற்பட்ட ஒன்றாகும்; சின்மாத்ரையின் முழுமையை (அல்லது பூரணத் தன்மையை) இது சிறிதும் பாதிப்பதில்லை.

''இந்தச் சின்மாத்ரையின் மகிமை காரணமாகவே, இப் பிரபஞ்சத்தில் யாவும் நடைபெறுகின்றன: அசைவற்ற நீர் நிலைக்குக் கீழ், எதனாலோ அசைவு தோன்றுவதால், மேற் பரப்பில் அலைகள் துள்ளி எழுந்து ஒன்றையொன்று சந்தித்தல், ஒன்றுடன் ஒன்று மோதி மறைதல் போன்ற இந்த ஆன்மிக உணர்வு நிலை, 'வஸ்து'வுக்கும் (உள்ளதாம் மெய்ப் பொருளுக்கும்) 'வாஸ்தவ'த்துக்கும் (மெய்ப்பொருளின் ஆற்றலுக்கும்) இடையே நடைபெறும் களியாட்டத்தின் விளைவேயாகும். அப்போது வாய் (உதடு) அசைந்திட, சொற்கள் வெளிவரும். அந்த வாயசைவிலும் ஒரு மகிழ்ச்சி தோன்றிடும்: பார்க்கப் படும் பொருள் இப்படி என்றென்றும் புதிய உருப்பெற்று விளங்குகிறது. இவ்வளவும் பார்ப்போராகிய தீர்க்கதரிசி களின்மூலம் பொங்கி எழுந்து தோன்றும் உணர்வுகளாகும்.

''சின்மாத்ரையின் இந்த அற்புதத் திருவிளையாட்டைப் பின்வருமாறு ஒப்பிடலாம்: கண்ணை மூடியபடியே பிரபஞ்சம் முழுவதையும் இன்ன தன்மையதாக விளங்குகிறதெனக் காண் பதும், சிறு விதையினுள், அடங்கிய நிலையிலுள்ள பெரிய தோர் ஆலமரத்தைக் காண்பதும் போன்றதே இது.

''உண்மை இதுதான்: பார்க்கப்படுவதும், பார்க்க முடியாததுமான இரண்டுமே இயல்பாக அமைந்துள்ள நிலை இது. இந்நிலையில் யார் யாரை அல்லது எதைப் பார்த்திடுகின்றார்கள்? 'அது' (தத்) என்ற மெய்ப்பொருள் பார்க்கிறது; அப்போது மெய்ஞ்ஞானிகளின் மகிமையும் அவர்கள் கண்டிடும் திவ்வியக்காட்சியும் அந்த ஆத்மாவிடம் பரந்து விளங்குகின்றன. 'அது' (தத்' என்ற அம்மெய்ப் பொருள்) பார்க்காமல் நின்றுவிடும்போது அதன் 'உறக்க'த் தில் யாவும் மறைந்துவிடுகின்றன (ஸ்வரூப நித்ரா).

''இதைப் பின்வரும் நிலையோடு ஒப்பிடலாம்: நாமாகவே, நம் விருப்பங்களைக் கொண்ட கற்பனை உலகை மந்திர ஜாலத் தால் படைத்துக்கொண்டு, அதில் மகிழ்வுடன் உலாவுவதும் மற்ற எதனையும் மறந்து நிற்பதும் போன்றதுதான் இது. இந்தச் சின்மாத்ரை அல்லது தன்னையறிந்த விழிப்புணர்வு, உள்ளொளி வீசி, இந்தப் பிரபஞ்சத்தையே தோற்றுவிக்கிறது; இத்தகைய பிரபஞ்சத்தில் 'அது' (தத்) மகிழ்வுடன் உலவுகிறது. அப்போது மெய்ஞ்ஞானிகளுக்கும் அவர்கள் காணும் காட்சிக்கு மிடையே புகுந்து 'அது' செயல்படுகிறது. ஒரு கொடி தன்னைச் சுற்றி நீண்டு, சுருண்டு வளர்ந்திட, அதுவே ஒரு பெரிய கொடிவீடாக உரு எடுக்கிறது. தான் விரும்பாமலேயே

இப்படி ஒரு நிலை அதற்கு ஏற்படுகிறது; இதே போல் 'சின்மாத்ரை' என்ற விழிப்பு நிலையும் 'தத்' (அது) என்பதைச் சுற்றிச் சுடரொளி வீசித் திகழ்கிறது. இவ்வாறு, வேண்டுமென்றே புரியும் செயலாக இன்றி இந்த மாபெரும் பிரபஞ்சத்தை அமைத்திடும் பணி ஒன்று நடைபெறுகிறது.

''[காரணம் ஏதும் கண்டிட இயலாத 'ஸத்' அல்லது 'உண்மை' படைத்த] இந்தப் பிரபஞ்சத்தில் [உண்மையின் இரு கூறுகளான] பார்ப்போர் – பார்க்கப்படும் பொருள் என்னும் இரண்டு அம்சமும் தம்முள் இணைந்து ஒன்றாக வேண்டும் என்ற பேரார்வத்தில் பரஸ்பரம் ஈர்ப்புக்குள்ளாகும் நிலை ஏற்படுகிறது; ஒன்றுடன் ஒன்று இவ்வாறு கலந்து மறைய நேரிடவே, பார்க்கப்படும் பொருள் பார்ப்போனுள் புகுந்திட, 'பார்க்கும்' நிலையும் முற்றுப்பெறுகிறது. இந்த அன்பான அரவணைப்பில் இரண்டு அம்சமும் மறைய, முன்பு பிரிந்திருந்தது போல் தோற்றமளித்த இவ்விரண்டு அம்சங்களின் 'உண்மை' இயல்புமட்டும் எஞ்சி நிற்கிறது.

''சமுத்திரங்களை நிலப்பகுதி பிரித்து நிற்கும்வரைதான் அவற்றைக் 'கடல்கள்' என்ற அப்பெயரால் குறிப்பிடுகிறோம். பிரளயம் அல்லது ஊழிக்காலத்திலே நிகழ்வதுபோல் அந்தப் பெரிய நிலப்பகுதி மறைந்து போனால், சமுத்திரங்கள் (அல்லது கடல்கள்) என்ற நிலைபோய், ஒரே நீர்ப்பரப்பே எங்கும் காண்கிறது. பார்ப்பவர், பார்க்கப்படுவது என்று வெவ்வேறாக உருக்கொண்டிருந்தாலும் முடிவில் இதே நிலைதான்: அந்த இரண்டும் ஒரே ஜீவசமுத்திரமாகிவிடுகின்ற செயல் நிகழ்கிறது. பார்ப்போன் (அல்லது பார்ப்பது), பார்க்கப்படுவது, காட்சி (த்ரஷ்டா-த்ருச்யம்-தர்சனம்) என்று முடிவற்று விளங்குகிறது. அனைத்துயிர்களின் வாழ்விலும், 'பார்ப்போன்', 'பார்க்கப்படுவதை'க் காண்பதால், 'காட்சி' உருவாகிறது. பின்பு மூன்றும் வெற்றிடம் அல்லது சூன்யத்தில் மறைந்து விடுகின்றன. கணந்தோறும் முடிவற்று இந்த 'விளையாட்டு' நடைபெறுகிறது. 'வஸ்து' அல்லது எங்கும் ஒளிவீசும் உண்மை (ஸத்) கணந்தோறும் கண்ணிமைகளை மூடித் திறப்பது போன்றது இது எனலாம்.''

'தன்'னைத் 'தான்' அறிந்திடும் அற்புத யாத்திரையில் ஞானதேவருக்கு இணையாக முன்னேறுவதென்பது எளிதன்று. அவருடைய விரைவுக்கு நாம் ஈடுகொடுக்க இயலாது — அவ்வளவு வேகமானது அது! சமவெளியில் அங்கங்கே நிற்பதுபோல் தம் அநுபவத்தை அவர் எடுத்துரைத்தாலும்,

உடனுக்குடன் விண்ணில் பறந்திடுவதுபோல் உயரிய ஆன்மிக நிலையை நோக்கி முன்னேறுகிறார். அப்போதும், தம் அருளுரைகளை நாம் கூர்ந்து கேட்கும் அளவுக்கு அவர் நம்மைக் கவர்கிறார். 'தன்னைத் தான் அறிந்திடும்' அந்த ஆன்மிக யாத்திரையைத் தொடங்கத் துணிந்தபோது அவர் இருந்ததற்கும், பின் அதில் விரைந்து முன்னேறு வதற்குமிடையேதான் எவ்வளவு வித்தியாசம்! இதோ அந்த யாத்திரையின் முடிவு தொடங்கிவிட்டது; அதோடு கடந்த காலம், அதனுல் நேரக்கூடிய விளைவுகள் யாவும் முடிவுறும் நிலை இது. ஒரு புறம் காலம் என்ற ஒன்று முற்றுப்பெற்று, அதற்கு அப்பால் கால வரையறையையெல்லாம் கடந்து ஒளிரும் [நித்ய ஸத்யம் அல்லது] நிலைத்த உண்மை, நுட்ப மாக இதழ் விரிய நிற்கிறது. பரிணும முன்னேற்றத்தில் குரங்கின் இயல்பினின்று 'நான் மனிதன்' என்ற உணர்வு தலையெடுக்கிறதே, அந்த இடைப்பட்ட நிலைக்கு இதனை ஒரு வேளை ஒப்பிடலாம் என்ருலும், இரண்டுக்குமிடையே ஒரு வேறுபாடு உண்டு. இது உயிரியலில் காண்பது போன்ற தன்று; மனத்தத்துவ ரீதியான வேறுபாடு இது.

இந்த உலகில் ஞானதேவர் தோன்றியதை ஒரு புதிய சிந்தனைப் போக்கும், புதிய மானிடப்பண்பும் உதயமாகும் எழிற்காட்சிக்கு ஒப்பிடலாம். இப்புதிய மானிடப் பண்பிலே பிரபஞ்சம் முழுவதும் பரந்து விளங்கும் பரிணும தத்துவம் தன்னை முற்றும் உணர்ந்திடும் நிலையை எய்துவதைக் காண் கிறோம். அப்போது, விலங்கு இயல்பு (மிருக சுபாவம்), சமூக அமைப்பு இவை யாவும் மடிந்து சாம்பலாகி, 'உண்மை மானிடன்' தோன்றுகிறான். இதுவரை கனவு போன்ற கற்பனைக் கருத்துக்களில் திளைத்த (பிரக்ஞை அல்லது) நினைவு நிலையினின்று, எப்போதும் விழிப்புடன் ஒன்றி விளங்கும் பேருண்மை ஒளி வீசிடுவதைக் காணும் நிலையை அவன் எட்டி விடுகிறான் (வாஸ்துப்ரபா என்ற நிலை).

# யோகம், பக்தி, மெய்ப்பொருள்

புனிதமான வேத வாக்கை எருமையின் வாய்மூலம் வெளியாகும்படி செய்த அற்புதம், 'ஞானேசுவரி', 'அநுப வாம்ருதம்' என்ற நூல்களை அருளிச் செய்தது போன்று, ஞானேசுவரர் புரிந்த செயல்களைப்பற்றிய விவரமும் இறகு முளைத்தது போல் எங்கும் விரைவில் பரவிவிட்டது. மாபெரும் ஆன்மிக தத்துவத்தை உள்ளூற உணர்ந்த புதிய மகான் ஒருவர் தோன்றிவிட்டார் என்ற அந்தச் செய்தி இந்தியா நெடுகிலும் பரவிவிட்டது ; ஏன், திபேத் வரையில் கூட எட்டிவிட்டது. பிரம்ம ஞான சங்கத்தை நிறுவிய ப்ளாவட்ஸ்கி அம்மையார், 'மவுனத்தின் குரல்' என்ற தம் நூலில் [பக்கம் 109 - இல்] இதுபற்றிக் குறிப்பிட்டிருக் கிறார்.

இன்றுங்கூட இந்தியாவானது, என்றென்றும் நிலைத் திருக்கும் மெய்ப்பொருள் அல்லது இறைத் தத்துவத்தை அறிய வேண்டி யாத்திரையில் ஈடுபட்டு வருவோர் நாடிடும் நாடாகத்தான் இருந்து வருகிறது ; தலைமுறை தலைமுறை யாகச் சாதுக்கள், சந்நியாசிகள் இப்படிப் பல பெரியோர் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு நடந்து சென்று (முடிவற்ற தமது யாத்திரையினிடையே) நகரங்களிலும் கிராமங்களிலும் வாழும் இல்லறத்தாருக்கு வாழ்வின் தத்து வத்திலே ஓரளவேனும் எடுத்துரைத்து வருவதைக் காண லாம். இப்படி (வேத காலம், பௌத்த யுகம் போன்ற தொலை நெடுங்காலமாக இந்தியாவிற்கே உரிய முறையில்) ஞான தேவரைப்பற்றிய செய்தியும், அவரது அற்புத போதனையும் எங்கெங்கோ - மக்கள் நடமாட்டமிராத மலையுச்சிகளிலும், வனவனாந்தரங்களிலுமுள்ள – மெய்ஞ்ஞான பீடங்கள் அமைந்த இடங்களுக்கு எட்டி, ஒரு பெரிய அதிர்ச்சியையே உண்டு பண்ணிவிட்டது.

இத்தகையதொரு ஞானகேந்திரத்தின் பீடாதிபதியாக விளங்கினார் சங்க தேவர் என்பவர். அந்த நாளில் வாழ்ந்த பெரிய யோகிகளில் ஒருவர் என்றும், பிணி, மூப்பு, இறப்பு [சாக்காடு] இவற்றையெல்லாம் வென்றவர் என்றும், 1400 ஆண்டுகளாக வாழ்ந்து வருபவர் என்றும் பெயர் பெற்ற

வர் இவர். இவருக்கு நாடெங்கும் ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்ததாகச் சொல்வார்கள். ஞானதேவரைப்பற்றிக் கேள்வியுற்றதும் சங்க தேவருக்குக் குலுக்கிப் போட்டது போன்ற பேரதிர்ச்சி ஏற்பட்டது. இனி என்ன செய்வது, இந்த எதிர்ப்பை எப்படிச் சமாளிப்பது என்று இவருக்கு விளங்கவில்லை. 14 நூற்றாண்டுகள் வாழ்ந்து, வாழ்வின் தத்துவம்பற்றித் தாம் நிலைநாட்டிய கோட்பாட்டை யாராலும் அசைக்க முடியாது என்னும் அளவுக்கு இவர் உறுதி பெற்றவராயிற்றே ! ஆனால் இதென்ன, இந்தச் 'செய்தி' இவருக்குப் பெருங்கலக்கத்தை உண்டுபண்ணி விட்டதே ! ஞானதேவருக்கே இதுபற்றிக் கடிதம் எழுதிக் கேட்டுவிடுவது என முடிவு செய்தார். ஆனால் ஓலையையும் எழுத்தாணியையும் கையில் எடுத்தபோது, என்ன எழுது வது, எப்படி எழுதினால் சரி என்று புரியாதபடி திகைத்தார். எனவே, ஓர் உறையினுள் வெற்று ஓலையை வைத்து, நம்பிக்கைக்குரிய தம் சீடன் ஒருவன்மூலம் அதை ஞான தேவருக்கு அனுப்பினார்.

அந்தச் சீடன் ஞானதேவரிடம் அதைக் கொண்டுவந்து கொடுத்ததும், அவர் அதைப் புன்சிரிப்புடன் பிரித்தார். உள்ளே வெற்று ஓலையைக் கண்டதும் அதை நிவ்ருத்தி, ஸோபானர், முக்தா இவர்களிடம் தந்தார். பேரிடியுடன் மின்வெட்டுப் பாய்ந்ததுபோல் முக்தா இடிஇடியென்று சிரித்து, ''1400 வருஷகாலமாக ஏதோ யோகசாதனை, தவம் எல்லாமே புரிந்தவர் என்று பெயரெடுத்தும் இவர் இன்னும் இந்த வெற்று ஓலைபோலத்தான் இருக்கிறார், பாருங்கள் !'' என்று உரக்கக் கூறினாள். அவளுடைய இந்தப் பேச்சு, ஆன்மிக சாதனையில் ஈடுபட்டிருந்தோர் வாழும் மூலைமுடுக்குகளிலெல்லாம் எதிரொலிக்கலாயிற்று.

ஆனால் நிவ்ருத்தியோ, பதினாலு வயதுகூட நிரம்பாத தம் தங்கை 1400 ஆண்டுகளாக உயிர் வாழும் சங்கதேவரைப் பற்றி அவசரப்பட்டுச் சொல்லிக்கொண்டே போவதைத் தடுத்து, மிகவும் அடக்கமுடன் சங்கதேவரின் **சீடனிடம்,** ''அறியாச் சிறுமியான இவள் சொன்னதை மனசில் வைத்துக் கொள்ள வேண்டாம். உங்கள் குருநாதரான அந்த மகானைக் காண நாங்கள் எல்லோரும் ஆவலாக இருக்கிறோம். இந்த ஓலையில் இருக்கும் மகத்தான விஷயத்திலிருந்தே அவரது விருப்பம் இன்னதென அறிந்துகொண்டோம். எங்கள் சின்னஞ்சிறு குடிலுக்கு அவர் வந்தருளும்படி கேட்டுக்கொள்

கிறோம். எங்கள் அழைப்பையும் வணக்கத்தையும் உங்கள் குருதேவரிடம் தெரிவித்திடுங்கள்'' என்று சொல்லியனுப்பினர்.

சில தினங்களுக்கெல்லாம் சங்கதேவர், துறவிகள் வழக்கப் படி புரியும் ஹோமம் அல்லது வேள்வித்தீயை வளர்த்தப் பயன் படும் புனிதமான 'ஸமித்' என்ற சுள்ளியின்றி, ஒரு பெரும் புலியின்மீது அமர்ந்து, கொடிய நச்சுப்பாம்புகளைக் கையில் சாட்டைகளாக ஏந்திக்கொண்டு, தம் ஆன்மிக ஆற்றலுக்கு எதிராக நிற்கத் துணிந்தவர் எவராயினும் அஞ்சிடும்படி, ஆலந்திக்குப் புறப்பட்டார். அவரோடுகூட நூற்றுக்கணக் கான அவருடைய சீடர்கள், ''பிரபஞ்சத்தையே அடக்கும் திவ்விய சக்தி படைத்த எங்கள் குருநாதர் வாழ்க!'' என்று கூவியபடி வந்தார்கள். ஞானதேவர் அப்போது ஓர் இடிந்த வீட்டின் குட்டிச் சுவரின்மேல் தம் தங்கை முக்தாவுடனும் சகோதரர்களுடனும் அமர்ந்திருந்தார். 'ஆலந்தியின் எல்லையை நெருங்கிச் சங்கதேவர் ஒரு புலியின்மேல் உட்காந்துகொண்டு தம்முடைய பரிவாரத்தினரோடு தடபுடலாக வந்து கொண்டிருக்கிறர்' என ஞானதேவருக்குத் தகவல் எட்டியது; உடனே சங்கதேவரைத் தக்கபடி வரவேற்க வேண்டும் என ஞானதேவர் கருதினர்; ஆனல் அதற்கேற்ற பொருள் ஏதும் தம்மிடம் இராததால், தாம் அமர்ந்திருந்த மண்சுவரைத் தட்டிக்கொடுத்து, ''என் அருமைச் சுவரே! இப்படியே கிளம்பி அந்த மகானைத் தரிசித்து வரவேற்போம்'' என்றர். அந்தச் சுவரும் அப்படியே அந்தரத்தில் கிளம்பிச் சங்கதேவரை நெருங்கியது. இதைக் கண்ட அங்கே கூடியிருந்த மக்கள் யாவரும் - ஏன், சங்கதேவரேகூட - அப்படியே திகைத்து விட்டார்கள். சங்கதேவர், உடனே ஞானதேவரின் காலடியில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினர்.

நாம் நம்பினுலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, இந்தப் பழங்கதையிலிருந்து ஒரு பெரிய உண்மை புலனுகும். இந்தியா வில் ஆன்மிகத்திலும் பண்பாட்டிலும் சீரழிவு நேர்ந்திருந்த காலம் அது. ஆன்மிக வளர்ச்சியில் முக்கியமானதாக விளங்கிய யோகசாதனை என்பது வெறும் சித்திகள் அல்லது கண்கட்டு வித்தை என்ற அளவில் அமைந்த முறையாக இழிந்திருந்தது. எனவே, என்றென்றும் கமழும் நறுமணமெனப் பரந்து விளங்கும் நித்தியப் பரம்பொருளை உணரும் வாய்ப்பு இல்லாத ஒரு நிலைக்கு யோகப் பயிற்சியின் தரம் குன்றிவிட்டது. முன்பு 'திவ்விய தரிசனம்' என்று போற்றும் நிலையில் இருந்த தூய யோகமுறை, வெறும் சித்தர்கள் அல்லது அற்புதங்களை நிகழ்த்துவதையே பெரிதாகக் கருதும் ஒன்ருக மாறிவிட்டது;

சாமானிய மக்களிடம், எல்லாரையும்விடத் தன்னை மேலான வனுகக் காட்டிக்கொள்ளும் ரீதியில் ஏதேதோ அதிசயம் காட்டி அவர்களைத் திகைக்கவைக்கும் ஜாலவித்தையாகக் கருதும் நிலைக்கு வந்துவிட்டது. சங்கதேவருடைய இந்த வரலாறு, 'யோகம்' என்ற பெயரில் சிலர் நடத்திவந்த இந்த மாயா ஜால ஆற்றல் கவைக்குதவாத ஒன்று என்பதை உலகம் உணரும் படி செய்வதைத்தான் இது குறிக்கிறது. உண்மையான யோகம் என்பது, பரம்பொருளைக் காணும் தூய அறிவாற்றலால் த்ருஷ்டி மாத்ரதா அல்லது ஞானமாத்ரதா) உய்த்துணரும் முறையில் 'நான்', 'எனது' என்ற அகந்தை காரணமாக எழும் யாவற்றையும் - அவை உலகியலைப் பொறுத்தவை யாயினும் சரி, உலகில் இல்லாதவற்றைப் பொறுத்தவை யாயினும் சரி - கொளுத்திச் சாம்பராக்குவதாகும். ஜீவாத்மா என்பது வெறும் சொற்களாலோ, தாமோ பிறரோ கண்ட அநுபவங்களாலோ கட்டுண்ட நிலையினின்று விடுபெற்று இயங்கும் நிலையைக் குறிப்பது.

புகைமூட்டம் போன்ற ஏதுமின்றித் தூய்மையாக நோக்கும் அறிவென்னும் ஒளி, 'நான்' என்னும் அகந்தையை 'இல்லை' (நஹிபஞ அல்லது ஸ்வரூப சூன்யதா) எனும்படி முற்றும் ஒழித்து, ஜீவாத்மாவை நித்திய சத்தியமாக (வாஸ்துப்ரபா அல்லது அர்த்தமாத்ர நிர்பாஸம்) ஒளிரும் பரம்பொருளின் முன் கொண்டுவந்து நிறுத்துகிறது.

ஞானதேவர் இப்படி, 'தன் உள்ளத்திற்கு திட வலிமையால் ஒருவன் அகந்தையை மையமாக (ஆதாரமாகக்) கொண்டு இயற் கையின் ஆற்றலை அடக்கி ஆளும் போக்குகள் கவைக்குதவா தவை' என எடுத்துக்காட்டியதோடு, 'மெய்யான பரம்பொருளை உணர முற்படுவதற்குமுன் அகந்தையை மையமாகக் கொண்ட எல்லாவித முயற்சிகளையும் விடுத்தொழிக்க வேண்டும்' என்ப தையும் அறிவுறுத்துகிருர். அவருடைய 'அநுபவாம்ருதம்' ஒளிப்பிழம்பாக - ஜோதி சொரூபமாக - விளங்கும் மெய்ப் பொருளுடன் அன்பிஞல் இணைந்து (யோகம் என்ருல் இணைந்து விளங்குதல் என்று பெயர்), தன் ஆற்றலால் குறைவற்று ஒளிரும் தங்கச் சுரங்கமாகும். சங்கதேவர், தாம் அகந்தை யுடன் புரிந்த சாதனைகள், நிகழ்த்திய அற்புத சித்திகள் யாவும் அறிவீனமானவை, பயனற்றவை என்பதை உணர்ந்ததும், 'ஸமித்' என்ற புனிதச் சுள்ளியுடன் (உண்மை வாழ் கையில் 'ஸமித்' என்ற புனிதச் சுள்ளியுடன் (உண்மை வாழ் வினைக் காணப் புரிந்திடும் வேள்வியில்) ஈடுபட்டு' திவ்விய ஒளி வீசும் பரம்பொருள் தத்துவத்தைத் தமக்கு உணர்த்திடும்

படி ஞானதேவரை வேண்டினர். அப்போது ஞானதேவர், 'சங்கதேவ பசஷ்டி' என்ற 65 பாக்கள் கொண்ட உபதேச நூலை இயற்றி அருளினர். 'அநுபவாம்ருத'த்தில் உள்ள நல்லுரைகள் அதில் சுருக்கமாக அமைந்திருப்பதைக் காணலாம்.

அதில் ஞானதேவர், ''ஓ சங்கதேவரே! பரம்பொருளின் அருள் உமக்குக் கிட்டுவதாக! இவ்வற்புத உலகின்பின் மறைந்து விளங்கும் அந்தப் பரமாத்மனைக் கண்டு தெளிவீராக. இந்த உலகை நாம் கண்டறிவது எப்படி? இறைவன் இங்குள்ள எல்லாப் பொருள்களுக்கும் அப்பால் - நம்மைப் போன்ற தனித் தனி ஜீவாத்மாக்களுக்கும் அப்பால்-ஒளிந்து விளையாடல் புரிகிறன். அப்படி அவன் ஒளிந்திராவிட்டால் இந்த உலகம் என்பதே இல்லை என்றாகிவிடும். அவன் தோன்றுவதும் இல்லை; மறைந்துவிடுவதும் இல்லை; 'அவன் என்றும் உள்ளான்; ஒவ்வொரு கணத்திலும் உள்ளான்' என்றாலே போதும்! பலவாகக் காணும் பொருளடங்கிய இந்தப் பெரும் பிரபஞ்சம், அவனது பார்வையில் வெறும் சூன்யமே போன்றது! இந்தத் திவ்விய திருஷ்டியுடன் - அரிய நோக்குடன் - கூடிய அவனது அறிவாற்றல் என்னும் நாடித்துடிப்பு, எல்லா ஜீவன்களிலும் (உயிர்களிலும்) இடையீடின்றி இருந்துகொண்டுதான் இருக்கிறது. அவனே முழுமுதற்பொருள். வேறு யாதாகவும் அவன் மாறத் தேவையில்லை; காலம் என்ற எல்லைக்கு உட்படாமல் நிலைத்து 'இருப்பவன்' அவன்: ஒவ்வொரு பொருளிலும் - அது நிலையாததாயினும் சரி, அதற்கு மாறானதாயினும் சரி, இந்த நித்தியத்துவம் (அல்லது என்றும் உள்ள தன்மை) ஒளிர்ந்திட உயிர்த் துடிப்புடன் அவன் விளங்குகிறன். நம் 'அவித்யை' (அறிவின்மை) காரணமாகவே நாம் இந்த உலகத்தை பார்ப்பவன், பார்க்கப்படுவது என இரண்டாகப் பிரித்துவைக்கிறோம். அவித்யையை அழித்தால், முழுமுதலை உள்ளது உள்ள படியே அதன் தூய்மை, பேரெழில் இவற்றுடன் காணமுடியும்.

''ஒரு துணித்துண்டு என்பது அதன் உருவைப் பொறுத்து நாம் குறிப்பிடும் பெயர். நெய்த அந்தத் துண்டைப் பிரித்தால் வெறும் பஞ்சால் ஆன நூலைத் தவிர வேறில்லை எனத் தெரியும். பார்ப்பவன், பார்க்கப்படுவது என்பவையும் வெறும் துணித் துண்டுகளை யொத்தவையே: என்றாலும், அவற்றின் ஊடே உண்மை என்ற நூல் தனிப்படப் புலனாகாமல் இழைந்து நிற்பதை உணர்கிறோம்.

''தூய்மையாக விழிப்புடன் காணும் நோக்கு என்பது அனைத்து உருவங்களுக்கும் அப்பாற்பட்டது. 'அது' (தத்)

உண்டு (ஸத்) என உணர்ந்து அதனால் உம்மையே (த்வம் = உன்னை) கண்டுகொண்டு, நீர் (நீ = த்வம்) உண்மையில் யாராக இருக்கிறீர் (அஸி = இருக்கிறாய்), தத் த்வம் அஸி - 'அதுவே நீர்' (அது நீயாக இருக்கிறாய்) என அறிந்திடும்.

''ஞானதேவனான நானும் சக்ரபாணி அல்லது சங்கதேவரான நீங்களும் கண்கள் பதித்த நிலைக்கண்ணாடிகளைப் போல் இருக்கிறோம். நம் ஆத்மாக்களே அவற்றில் பிரதிபலிப்பதைப் பார்க்கிறோம். பார்ப்பதும் பார்க்கப்படுவதுமான 'நீ' (த்வம்), அகந்தை நீங்கிய 'நான்' (அஹம்) என்பவை நம் தனித் தன்மை நீங்கிட, மெய்யான பரம்பொருளின் நோக்கில் நாம் ஒன்றிவிடுகிறோம்.

''சின்னஞ்சிறு ஜாடி ஒன்றில் உள்ள வெற்றிடத்தில் வானவெளியில் ஒரு பகுதி இருக்கிறது என்பதிலிருந்து, விண் வெளியின் (எங்கும்) பரந்த தன்மையை அறிந்துகொள்கிறோம். அதேபோல் உயிர்த்துடிப்புடன் விளங்கும் இந்தப் பிரபஞ்சம், நித்திய நிரந்தரமாக ஒளிர்ந்திடும் மெய்ப்பொருள் ஒன்று இருப்பதை நமக்கு உணர்த்துகிறது. சின்னஞ்சிறு மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களிலும், துயர நிகழ்ச்சிகளிலும், அகந்தையை மையமாகக் கொண்ட ஆசைகள்-அவலங்களிலும் சிக்கிக்கொள்ளாமல் இருப்போமானால் கண்ணுக்குப் புலனாகாமலும், நாமே அறியாத முறையிலும் நம்முள் உயிர்நாடி எனத் துடித்திடும் அந்த நித்தியப் பொருள் ஆக்கம் பெற்று, நம்மெதிரே, 'இதுவே நம் ஆத்மா' என்னும் நிலையில் நிற்கிறது; நிலைக்கண்ணாடியில் நம்மை நாமே காண்பது போன்ற நிலை இது. பிரதிபலிப்பதன் மூலமாகவன்றி நமக்குப் புலனாகாதது நம் சொந்தத் தோற்றம்; அதனை நிலைக் கண்ணாடி போன்றவற்றின் வாயிலாகத்தான், 'இது நம் முகம்; இது இன்னபடி இருக்கிறது' என்பதை நாம் உணருகிறோம். இதுபோல் நம்முள் 'ஒளிந்திருக்கும்' பொருள் திடீரெனப் 'பார்க்கப்படும்' பொருளாக உருவெடுத்து, பார்ப்பவன் – பார்க்கப்படுவது - காட்சி இப்படி மூன்று அம்சங்களைத் தோற்றுவிக்கிறது. இவற்றை மூன்று என்ற எண்ணிக்கையில் கொள்ளாமல் ஒரே பொருளின் தோற்றமாகவே காணும் போதுதான் 'ஸம்வித்தி' அல்லது என்றும் விழிப்பு நிலையில் உள்ள பரம்பொருளின் அற்புத ரகசியம் நிறைந்த அலகிலா விளையாட்டுகளை உண்மையில் உணருகின்ற (அநுபவம் அல்லது) அநுபூதி கிட்டும்.

''வாத்தியங்கள் எவையுமின்றிக் கேட்டிடும் இசையொலி போன்றது இது; ஏன், தீப்பற்றக் கூடிய விறகு முதலானவை

யின்றித் தோன்றிடும் நெருப்பைப் போன்றதுமாகும். தன்னைப் பற்றிய எல்லா விவரங்களையும் அழித்தொழித்து, என்றென்றும் நிலைத்து வாழ்வது போன்றதுமாகும் இது.

''எனவே, நிலைத்த மவுனம் ஒன்று (அது சொல்லால் உரைப்பதற்கும், உரைக்க முடியாததற்குமான நிலைக்கும் அப்பாற்பட்டது) உண்டு என்பதை மறவாமல் எதையும் உரைத்திட வேண்டும். நாம் இன்ன பொருளாக முயல வேண்டுமென்ற எண்ணமின்றி வாழ்ந்திட வேண்டும். 'தானே' ஆக நிலைத்து நின்றிடும் மெய்ப்பொருளை, என்றென்றும் மறவாமல் உலகையே அம்பரமாக, ஆடையாகக் கருதி வாழ்ந்திட வேண்டும்.

''என் அருமை நண்பரே! உங்களை அணைந்திட வேண்டும் என்ற நீங்கா ஆர்வத்துடன் வெடித்து வந்ததுபோல் இவ்வளவும் கூறினேன். ஆனல் இனிமேலும் ஏதேனும் கூறவோ, செய்யவோ அஞ்சித் தயங்குகிறேன்; காரணம், அவ்வாறு செய்தால் நாம் இருவரும் இணைந்த உண்மை நிலைகுலைந்து விடுமோ என்பதுதான். உங்களைக் கண்டு அளவளாவ வேண்டும் என்ற பேராவல் எங்கே ஒரு வடிவெடுத்து உண்மையைக் காண்பதற்குத் தடையாகி அதை நிலைகுலைத்து விடுமோ என்ற அச்சந்தான் காரணம்!

''அன்புள்ள சங்கதேவரே! இனி உங்களுக்காக ஏதும் செய்யவோ, செய்யாமலோ இருந்திடலாம் என்ருல், அன்பு மீதூர 'நான்' (அஹம்) என்ற எண்ணம் அடக்க முடியாத படி கிளர்ந்தெழுகிறதே; என்ன செய்வேன்? ஆனலும் உங்களை 'ஆத்மன்' என்ற நிலையில் காணும்போது என்னிடமுள்ள 'நான்' (அஹம்) என்ற தன்மை 'ஏதுமில்லை' என்ற ஒன்றில் மறைந்திடுவதோடு, உங்களிடமுள்ள 'நீ' (த்வம்) என்ற தன்மையும் அவ்வாறே மறைந்திடுகிறது. 'நான்' (அஹம்) 'நீ' (த்வம்) என்ற இரண்டுமே நம்முடன் இணைந்து நிற்கும் நிலையையே அப்போது காணமுடிகிறது.

''ஞானதேவனை 'நான்' இந்த அக்ஷமாலையைத் தொடுக்கும்போது, சாமானியமான உயிர்களின் உணர்வுக்கு அப்பாற்பட்டதான ஓர் உறக்க நிலையில் உள்ளேன்; அதே சமயம் சாமானியமான உறக்கத்தினின்று விழித்தெழுந்த நித்திய நிலை என்றும் இதைக் குறிப்பிடத் தோன்றுகிறது. இதை என்ன வென்பது?

ஞானதேவர் தம் அநுபவத்தால் நிறுவிய இந்த 'ஹ்ருதய ஆலயம்' அல்லது உள்ளத்தே அமைத்த பெருங்கோயிலின் உச்சிக் கலசமாக விளங்கும் ஒரு நிகழ்ச்சியை இனிக் காண் போம். ஞானதேவரின் சமகாலத்தில் வாழ்ந்தவர் பக்த நாம தேவர்; ஞானதேவரைவிடச் சில ஆண்டு மூத்தவர். ஆதி நாட்களில் பக்திமார்க்கத்தின் மையமாக விளங்கிய பண்டரீ புரத்தைச் சேர்ந்தவர். விட்டலன் அல்லது பாண்டுரங்கனுக அங்கு எழுந்தருளியுள்ள கண்ணபிரானை அவர் நேருக்கு நேர் கண்டு பேசியதாகச் சொல்வார்கள்; அவ்வளவு புகழ் பெற்றவர் அவர்.

ஞானதேவர் தம் தங்கை முக்தாவுடனும் பிற சகோதரர் களுடனும் அந்தப் பண்டரீநாதனின் ஆலயத்தில் இறைவனைத் தரிசிக்கச் சென்ருர். ஞானதேவரைப்பற்றிய, கதை போன்ற அற்புதச் செய்திகளைக் கேள்வியுற்றிருந்தார் நாமதேவர். அப்போது சுமார் இருபது வயதுக்கு உட்பட்டவர்களான அந்த நால்வரையும் எதிர்கொண்டழைக்கச் சென்ருர் நாம தேவர். நிவ்ருத்தி, ஞானதேவர், ஸோபானர் இவர்கள் நாமதேவரின்முன் மிகப் பணிவுடன் தலை வணங்கி நின்ருர்கள். ஆனல் நாமதேவர் பதில் வணக்கம் புரியாமல் சும்மா இருந்தார்; தாம் இவர்களையெல்லாம்விட வயதில் மூத்தவர், ஆத்ம ஞானத்திலும் தாம் உயர்நிலை எய்தியவர் என்ற எண்ணம், அவருக்கு. யாராலும் அடக்கமுடியாத குறும்புக் காரியாயிற்றே முக்தா! இந்த நிலையில் அவள் ஞானதேவரைப் பார்த்ததுமே, 'இவர், தம்மோடு பகவான் நேருக்குநேர் பேசு கிருர் என்று உள்ளூறச் செருக்குடன் இருக்கிருர்' எனப் புரிந்துகொண்டாள். நிவ்ருத்தி அவளை நோக்கி, ''இவரை வணங்கு, முக்தா!'' என்றபோது அவள், ''தான் என்ற அகந்தை கொண்டவரை நான் வணங்கமாட்டேன்! சந்தனமரம் இயல் பாக மணமுடையதென்ருலும், விஷப்பாம்பு அதைச் சுற்றிக் கொண்டிருந்தால் அந்த மரத்தால் என்ன பயன்? அதைப் போலத்தான் அகந்தை என்ற நச்சரவம் இவருடைய உள்ளத்தைச் சுற்றி வளைத்துக்கொண்டிருக்கிறது. ஆண்டவன் சந்நிதியிலே இருந்து, அவனுடன் நெருங்கிப் பழகுபவர் தம் அகந்தையை ஒழிக்காமல் இருப்பதுதான் எனக்கு விந்தை யாகப் படுகிறது!... நாமதேவரே! நீங்கள் ஏன் இப்படிப் புகழாசைக்கு அடிமையாகி மனத்தை அடக்காமல் இருந்து விட்டீர்கள்? பிணியுற்று மெலிந்துவிட்டது போன்றிருக்கிறது உங்கள் மனநிலை. கண்ணெதிரே சூரிய ஒளி சுடர்விட்டு விளங்கும்போது, கந்தல் துணிகளை எண்ணெயில் தோய்த்து

ஏற்றிய் தீப்பந்தத்தை எடுத்துச் செல்வது போன்ற உங்கள் போக்கு, புத்திக் கூர்மைக்கு அறிகுறியாகுமா? வாழ்வில் எப்போதும் பரம்பொருளுடன் கலந்து மகிழும் நீங்கள் இப்படிக் குருட்டுத்தனமாக நடந்துகொள்வது பொருத்தமா? (விரும்பிய எல்லாம் தரும்) கற்பக விருட்சத்தின்கீழ் அமர்ந்திருக்கும் நீங்கள், ஏன் இன்னும் கையில் பிச்சை ஓட்டை ஏந்தி யாசிக்க வேண்டுமோ தெரியவில்லை?'' என்று பொரிந்து தள்ளினாள்.

இப்படி நாமதேவரின் அகந்தையை ஒரேயடியாக வெளிப் படுத்தியதோடு நின்றுவிடவில்லை முக்தா. கோராகும்பர் என்ற ஒரு பக்தர் அந்நாளில் இருந்தார். எளிய குயவரான அவருக்கு நாமதேவரைப் போல் 'ஓகோ!' என்ற புகழ் ஏதுமில்லை. இந்தக் கோராகும்பரை முக்தா அழைத்து வந்து, ''இங்கே உள்ள மூளை என்ற பாண்டங்களுக்குள் எது பக்குவ மாகாததால் உடையக் கூடியது, எது பக்குவம் பெற்று உறுதியாக இருப்பது என்று சோதிக்க வேண்டும்'' எனக் கேட்டுக்கொண்டாள். குச்சியால் மண்பாண்டங்களைத் தட்டிப் பார்த்துப் பழகிய குயவரான கோராகும்பர் அங்கிருந் தோரின் தலைகளைத் தட்டிப் பார்த்தாராம். நாமதேவரின் தலை யைத் தட்டியதும், ''இந்தப் பாண்டம் இன்னும் வேகவில்லை; இதைச் சூளையில் போட்டு எடுக்க வேண்டும்'' என்றாராம். இதனால் கலக்கமுற்ற நாமதேவர் நேராகப் பாண்டுரங்கனின் சந்நிதிக்கு வந்து, ''விட்டலா! உன் அருமை அன்பனை நான் இப்படி அவமதிப்புக்கு ஆளாகிவிட்டேனே; இது ஏன்?'' என்று வேண்டினாராம். இறைவன், ''முக்தாவும் அவளுடைய சகோதரர்களும் சரி, கோராகும்பரும் சரி என்னை உள்ளபடி அறிந்தவர்கள். ஆனால் நீ என்னை நேரில் கண்டு பேசினாலும், நான் யார் என்ற உண்மையை இன்னும் அறியவில்லை. நான் ஏதோ இந்தச் சின்னஞ்சிறு சந்நிதிக்குள் அடங்கிக் கிடப்ப தாகவும், வேறெங்கும் இல்லை என்பது போலவும் நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய்? இதைவிட அசட்டுத்தனம் ஏது?'' என்றானும்.

பிறகு நாமதேவரிடம், ''விசோபா கேசர் என்ற மகானிடம் சென்று அவருடைய சீடனாக இருந்து இந்த அற்புத உண்மையை அறிந்துகொள்'' என்றானும் இறைவன். விசோபாவைக் காணச் சென்ற நாமதேவர் அங்கே தாம் கண்ட காட்சியினால் பேரதிர்ச்சியுற்றார். மகாதேவரின் ஆலயத்தில் சிவலிங்கத்தின் மீது கால்களை வைத்தபடி உறங்கிக் கொண்டிருந்தாராம்

விசோபா. விசோபாவின் கால்களை வெறுந் தரையில் எடுத்து வைக்க நாமதேவர் முனைந்தபோது, அங்கே மற்றொரு சிவலிங்கம் முளைத்தெழுந்ததாம்! இப்படிப் பலமுறை விசோபாவின் கால்களைத் தூக்கித் தரையில் வைக்கப் பார்த்தும் அங்கங்கே சிவலிங்கங்களே காட்சியளித்தனவாம்! நாமதேவருக்கு இனி என்ன செய்வதென்று விளங்கவில்லை. அப்போது விசோபா எழுந்து, ''நாமா! 'பகவான் கோயிலில் மட்டுந்தான் இருக்கிறான்; வேறெங்கும் இல்லை' என்று நீ எண்ணிக்கொண்டிருக்கிறாய்! இந்தப் பரந்த பிரபஞ்சத்தில் அவன் இராத இடம் ஏதேனும் உண்டோ? இதை ஏன் நீ புரிந்துகொள்ளவில்லை?'' என்றாராம்.

விசோபாவிடம மந்திர தீட்சை பெற்றதும் நாமதேவர், ஞானதேவரிடம் வந்தார். அதுமுதல் பக்திமூலம் பரம்பொருளை அடைய ஞானதேவர் அருளிய போதனைகளை எங்கும் பரப்புவதில் நாமதேவர் தீவிரமாக முனைந்தார்; நிவ்ருத்தி, ஞானதேவர், ஸோபானர், முக்தா இந்த நால்வருடனும் நாடு முழுவதிலுமுள்ள புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்றபடி மெய்ஞ்ஞான சாதனையில் முன்னேறலானார் நாமதேவர். இவர் மூலமாகத்தான் ஞானதேவரையும் அவருடைய நூல்களையும்பற்றிய ஆதாரபூர்வகமான விவரங்களை நாம் இன்று அறிகிறோம்.

ஞானதேவர் அளித்த ஊக்கத்தால் நாமதேவர், பழமையுற்றுச் சீர்குலையும் நிலையில் இருந்த பக்தி மார்க்கத்துக்குப் புதிய ஆற்றலைத் தந்தார். இதனாலேதான் மகாராஷ்டிரம் முழுவதிலும் தெய்வநம்பிக்கை தழைத்து நிலைத்திருப்பதற்குச் சான்றாகப் பாண்டுரங்கனின் ஆலயம் விளங்குகிறது. இப்படி ஞானதேவராலும் நாமதேவராலும் புதிய ஆற்றல் பெற்ற பக்திமார்க்கந்தான் 'வார்க்கரி பந்த்'; பிறப்பு, ஜாதி, வர்ணாசிரம முறை, சமய வேறுபாடு யாவற்றையும் கடந்தது இது. ஆயிரக்கணக்கானோர் பண்டரீபுரத்தில்ஆண்டுதோறும் பெருத்த அளவில் கூடி, ஞானதேவர், நாமதேவர், ஏகநாதர், துகாராம் முதலிய மகான்கள் இயற்றிய பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டே செல்வதைக் காணலாம். எழுநூறு ஆண்டுகள் ஆகியும் இந்தப் 'பந்த்' அல்லது பக்தி மார்க்கம் ஆற்றல் குன்றாமல் அப்படியே இருக்கிறது.

ஞானதேவரிடம் தமக்கு இருந்த ஆழ்ந்த ஈடுபாட்டைக் குறிப்பிடும்போதெல்லாம் நாமதேவர், தம் ஆர்வத்தை வெறும் வாய்ச் சொற்களால் விவரிக்க இயலாத நிலையில்

இருக்கிறார் : ''ஞானராஜர் (ஞானதேவர்) எனக்கு யோக மாதாவாக விளங்குகிறார். அவரது அருளினால்தான் என்னைப் போன்ற அறிவீனன் நிறைவுற ஆத்மஞானம் பெற முடிந்தது. நான் அமரவாழ்வு பெற ஞான விளக்கு ஏற்றி ஆன்மிக அறிவை - அத்யாத்ம வித்யையை - உபதேசித்தவரல்லவா அவர்? என்னிடம் இருந்த அகந்தை முடிச்சுகள் யாவற்றையும் அவிழ்த்து, நேருக்கு நேராக மெய்ப்பொருளைக் காண வைத்தவர் அவர். கீதைக்கு மராட்டியில் அவர் அருளிய அற்புத விளக்க நூல், மெய்ப்பொருள் அல்லது பரமனை அறிந்திட ஆவலுறும் மக்களுக்கெல்லாம் தெளிவாக வழிகாட்டியிருக்கிறது. உலகிலுள்ள மனித சமுதாயத்திடம் அவருக்கு உள்ள பெருங் கருணைக்குத் தெள்ளிய சான்றாக அவருடைய அந்தப் புனித நூல் விளங்குகிறது. அவரது 'ஞானேசுவரி'யில் பரம்பொருட் பேருண்மைபற்றிய அறிவு நிறைந்துள்ளது. அதில் உள்ள ஒவ்வொரு செய்யுளையும் ஒவ்வொன்றாக, ஒவ்வொரு நாள் படித்து உணர்ந்தாலும் போதும் ; விரைவில் 'வாழ்வு' என்பதன் அரும்பொருளை அறிந்திடலாம்.''

ஞானதேவர் கடைசியாக அருளிய நூல் 'ஹரி பதம்' என்பது. 'ஞானேசுவரி'யுடன் இதுவும் சேர்ந்து, மகாராஷ்டிரத்து 'வார்க்கரி' சம்பிரதாயத்தினரின் பக்தி மார்க்கத்துக்கு இட்டுச் செல்லும் திருமறையாக விளங்குகிறது. யோக மார்க்கமும் பக்தி மார்க்கமும் வேத - புராண காலந் தொட்டு வழிவழியாக இருந்து வருபவை ; அதாவது, தலைமுறை தலைமுறையாக (குருசிஷ்ய மரபுப்படி) ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு அறிவுறுத்தி வந்த மெய்ப்பொருள்பற்றிய அறிவை நாடி, அதற்காகவே தம்மை அர்ப்பணம் செய்து கொள்ளும் மார்க்கம். இவர்கள் பரஸ்பரம் சீரிய மானிடப் பண்பு உடையவர்களாய், உலகப் பற்றை அறவே விட்டொழித்தவர் [ஜீவன் முக்தர்] களாய் இருந்தால், இந்த மரபுமுறை எந்தக் கால வரம்புக்கும் உட்படாத ஒப்பற்ற ஒன்றாக விளங்கும் – சுயம்பிரகாசமாய்த் திகழும் - மெய்ப்பொருள் தத்துவத்தை உணர்த்தும் அளவுக்கு மதிப்புள்ளதாக இருந்திருக்கும் ; ஆனால் இடை இடையே அகந்தை தோன்றி, மரபு முறையாக வரும் பண்பை இழிநிலைக்குக் கொண்டு வந்து விடுகிறது ; தன் சொந்த முயற்சிகளுக்குச் சாதகமாக இயற்கையையும் மனித சமூகத்தையும் மனம் போன போக்கில் பயன்படுத்திக்கொள்வதே இந்தச் சீரழிவுக்குக் காரணம். இத்தகைய போக்கில் செல்லும் மரபு முறையில், யோக - பக்தி மார்க்கங்கள் மெய்ப்பொருளை உணரும் வழியைக்

காட்டிடத் தகுதியற்றவையாகி, பிறரை ஏமாற்றித் தன்னலத்துக்குப் பயன்படுத்துவதற்குரிய சாதனங்களாகிவிடுகின்றன.

புத்தருக்குப் பின் ஞானதேவர் ஒருவர்தாம் பழைய மரபு முறை, பண்டைய சாஸ்திரம் இவற்றின் ஆதிக்கத்தினின்றும் விடுபட்டு, மெய்ப்பொருளை அறிந்திட நேரிய வழி கண்டார் என்றே தோன்றுகிறது.

''ஆத்மஞானம் என்பது தனிச் சிறந்த ஒன்று. மூலாதாரமாக விளங்கும் இது, மெய்ப்பொருளை அறிந்திட வேறு எதனையும் பற்றுக்கோடாகக் கொள்ளத் தேவையில்லை. அப்படிக் கொள்வதாகக் கூறுவது, பொழுது விடிவதைப் பொறுத்துத்தான் சூரியன் தோன்றுகிறான் என்பது போன்றது தான்!'' (அநு. 3- 19)

''சத்தியம் அல்லது மெய்ப்பொருள் என்பது பரமசிவன் அல்லது கண்ணபிரான் அருளியதாகக் கொள்ளும் மொழிகளைப் பொறுத்து அமைந்ததன்று. அது சுயம்பிரகாசமாய் விளங்குவது; நேருக்கு நேர் அதைக் கண்டறிந்திடலாம்'' (அநுபவாம்ருதம்: 3 – 18).

''இந்த மெய்ப்பொருள் என்பது தூய அறிவுணர்ச்சி (ஞானமாத்ர) நிலையாகும். இது ஞானமும் ஆகாது; அஞ்ஞானமும் ஆகாது; 'அநுபவிப்பவன்' என்ற ஒரு நிலையின்றிக் கிட்டும் 'அநுபூதி' நிலையாகும்.'' (அநு: 4-22-23). ''நிலைத்து நின்றிடும் தூய ஆன்மநிலை இது; அகந்தை காரணமாக எழும் 'உண்டு' (அஸ்தி), 'இல்லை' (நாஸ்தி) என்ற வழக்கினுள் அடங்காத ஒன்று.'' (அநு: 4-31)

ஞானதேவர் காட்டிய வழியும் சங்கரர் வகுத்த மார்க்கமும் ஒன்றுகா. இருவருமே 'அத்வைத (இரண்டற்ற)' நிலை பற்றிக் குறிப்பிட்டாலும், சங்கரர், 'சப்த ப்ராமாண்யம் அல்லது வேத-உபநிஷதங்கள் அருளிய சொற்களை ஆதாரமாகக் கொண்டு மெய்ப்பொருளை உணர்த்துவது அத்வைதம்' என்கிறார். ஞானதேவரோ இதை மறுக்கிறார் (அநு: 4); இதோடு, 'இந்த உலகமே வெறும் (பொய் அல்லது) மாயை' என்ற 'மித்யா' வாதத்தையும் ஞானதேவர் ஏற்கவில்லை; ''இந்த உலகம் உள்ளபடியே மெய்யொளி வீசி நிலைபெற்று விளங்குகிறது; இதைப் போய் 'பொய்யானது' (மித்யை), 'மாயை' என்றெல்லாம் குறிப்பிடுவது மெய்ப்பொருளை உணராததன் விளைவேயாகும். மெய்ப்பொருளைக் கண்டிடவேண்டுமானால் இத்

தகைய கற்பனை அல்லது யூகங்களுக்கு இடம் அளிக்கக்கூடாது! மெய்ப்பொருள் என்பது, 'உண்டு', 'இல்லை' என்ற இரண்டையுமே தன்னுள் அடக்கி, எதனையும் சாராமல், எதனாலும் பாதிக்கப்பெறுமல் விளங்குவது'' என்கிறார் அவர். (அநு : 7-101-105)

பௌத்தர்களின், ''எல்லாம் சூன்யம் (ஏதும் இல்லை)'' என்ற சித்தாந்தத்தையும் ஞானதேவர் ஏற்கவில்லை. '''வஸ்து' அல்லது 'உண்மை' (உள்ளதாம் பொருள்) என்பது 'உண்டு', 'இல்லை' என்ற சொற்கட்டுக்குள் அடங்காதது; என்றும் நிலை பெற்றிருப்பது; வெறும் யூகத்தால் விளக்க முடியாதபடி எத்த எல்லைக்கும் அப்பாற்பட்டது. இந்த நிலையில் சூன்ய சித்தாந்தத்துக்கு நிலையான ஆதாரம் காட்டுவது எங்ஙனம்? எல்லா விளக்குகளையும் அணைத்து (நிர்வாணம் - விளக்கை அணைத்துவிடுதல்), அதனால் அப்படி அணைப்பவனும் அழிந்து விட்டால் ஒளியோ இருளோ உண்டு என்பதை அறிவித்திட ஏதும் இல்லையே! ஒருவன் உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும்போது இறந்துவிட்டால், அவனது உறக்கத்தில் ஏற்பட்ட அநுபவத்தைக் குறித்து அறிந்து தெரிவிக்க யாரால் முடியும்? (அநு : 4-25–29)'' என்கிறார் ஞானதேவர்.

எனவே, ''மெய்ப்பொருளை அடைவதற்குரிய வழி, குறிப் பிட்ட எந்தவித நோக்கமுமின்றி, தானாகவே முயற்சி ஏது மின்றிச் சுதந்திரமாகச் செயல்படுவதுதான்.'' (அநு : 7-171). இதை ஏதோ புதிர் என்பதாகவோ, சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வது என்பதாகவோ கொள்வதற்கில்லை. இது நிலைபெற்ற உண்மையாகும். ''நான் மூச்சு விடுகிறேன்'' என்னும்போது, நாம் இதைச் சொல்வதைப் பொறுத்தா இயல்பாக நிகழும் மூச்சு விடுதல் என்ற நிகழ்ச்சி நடைபெறு கிறது? அது எப்போதும் போல் நிகழ்கின்ற ஒன்றுதான்: 'நான்', 'உலகம்' என்பவற்றையெல்லாம் உணராமல் கிடக்கும் உறக்க நிலையிலும் இப்படி மூச்சு விடுவது அதன் பாட்டிற்கு நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. கண் விழித்ததும், 'நாம் எப்போதும்போல் மூச்சு விடுகிறோம்' என்ற உணர்வு இருந்துதான் வருகிறது. இத்தகைய விழிப்பு நிலை வலிந்து கொண்ட ஒன்றாக இன்றி இயல்பாகவே அமைந்தது; இதுதான் யோகம் அல்லது இணைந்த நிலை. நம் விருப்பப்படி அமையும் செயல் அன்று இது. அதற்கு மாறாக, 'தான்' என்ற உணர்வுடன் நிகழும் செயல்கள் யாவும் ஏற்கனவே மறைந்து முடிந்த அநுபவங்களை ஆதாரமாகக் கொண்ட அகந்தையை மையமாகக் கொண்டு எழுந்தவையே.

இது நமக்கே தெரியாமல் இருக்கலாம். ஆனால் இணைந்த நிலை (யோகம்), நாம் கவனித்தாலும் சரி, கவனிக்காவிட்டாலும் சரி 'மூச்சு விடுதல்' என்பது நிகழ்ந்துகொண்டிருப்பது போன்று இயல்பானதாகும். இந்த உண்மையை நாம் உணராமல் இருந்தால், வெறும் அகந்தை காரணமாக எழுந்த 'தான்' என்ற எண்ணம், நம்முள் நிலைத்துக் காணும் விழிப்புடன் கூடிய யோக (இணைந்த) நிலையையும் பாதிக்கத் தான் செய்யும். இந்த ஐய நிலைக்கு முடிவு ஏற்படவேண்டும். எந்த முயற்சியும் இன்றியே கவனமாக (எச்சரிக்கையுடன்) இருந்து, இயல்பான போக்கில், 'உள்ளத்திலும் புறத்திலும் இருப்பதோ நிகழ்வதோ யாது?' என்று காண்போமானால் என்ன நேரும் என்பதை ஞானதேவர் தம் அநுபவாம்ருதத்தின் 7-ஆம் அத்தியாயத்திலுள்ள (185 முதல் 192-க்குள் அடங்கிய) செய்யுட்களில் எடுத்துரைத்திருக்கிறார்.

இப்படி முயற்சியோ யூகமோ ஏதும் இன்றி உள்ள நிலையைத்தான் ஞானதேவர் 'யோக பூமிகை' அல்லது யோகத்துக்கு ஆதாரமான தூய விழிப்பினால் விளையும் செயலைக் காணும் நிலை என விவரிக்கிறார். இதற்கு ஏற்றபடி தீவிர ஆற்றலுடன் கடுந்தவ ஆற்றலும் பொருந்தியிருக்க வேண்டும்; இது இயல்பான முறையில், எதிலிருந்தும் விடுபட்ட போக்கில் 'இன்னதுதான் முடிந்த முடிபு' என்றில்லாதபடி காணும் விழிப்பு நிலையின்போதுதான் சாத்தியம் பழைய வாஸனை அல்லது நினைவுகள் காரணமாக அகந்தை சிறிது தலையெடுத்தாலும் அந்தக் கணமே 'யோக பூமிகை' என்ற தூய விழிப்பாற்றல் மங்கி மறைந்துவிடுகிறது. அதுவும் அகந்தையுமாகிய இரண்டும் இணைந்திருப்பது சாத்தியமில்லை. காரணம், வெறும் அகந்தையினால் வரும் பிரக்ஞை அல்லது உணர்வானது, கற்பனை அல்லது யூகத்தை ஆதாரமாகக் கொண்டது. 'யோக பூமிகை'யோ நிலைபெற்ற உண்மை யாகும்; நிலைபேற்றுக்கும் அறிவதற்கும் உணர்வதற்கும் அடிப்படையான ஒன்றாகும். வெறும் அகந்தை காரணமாக உள்ள உணர்வு (அல்லது பிரக்ஞை) விஞ்ஞானம், தொழில் நுட்பம் இப்படி யாதாயினும் ஒன்றால் விளைவதாக இருந்தாலும், மேல்வாரியானதே; ஒன்றையே சும்மா சுற்றி வளைத்துப் பேசும் பேச்சின் விளைவே; அற்பமானதே. கற்பனைகள், யூகங்கள், குறிப்பிட்ட கருத்துக்கள் இவற்றையே பின்பற்றுதல், அவற்றுடன் ஒன்றியிருத்தல் இவை மிகுந்து, நிலையான ஆன்மிக உண்மையை மூடி மறைத்துவிடுகின்றன. இதனால் 'நான் யார்?' என்று அறிய இயலாமல் அதினின்று ஒதுங்கிப்

போகும் நிலை ஏற்படுகிறது. உள்ளத்து உறுதி, இயல்பான போக்கில் அமைந்த முயற்சி என்னும் இரு சக்கரங்களை அகந்தை என்னும் பாரவண்டியை நகர்த்தித் தள்ளக் கூடியவை என்பதை உணர்ந்திட 'யோக பூமிகை' நமக்குத் துணை புரிகிறது. தூய விழிப்பு நிலையினால் உண்மை அல்லது பரம்பொருளின் அமைதியான இயக்கத்தைக் கூர்ந்து கவனிப்பதால் அகந்தை என்னும் பாரவண்டி தலை குப்புற வீழ்கிறது. அப்போதுதான் 'நான்' என்ற எண்ணம் ஒழிந்து, மெய்ப் பொருளைக் காண முடியும்; பழமையில் குவிந்துள்ள குப்பை கூளங்கள், நாமாக எதிர்காலம்பற்றிக் கொண்ட யூகம், கற்பனை இப்படி எல்லாவற்றினின்றும் விடுபடவும் இயலும். மெய்ப்பொருளாம் திவ்விய (நித்திய) ஒளி வெள்ளம் மடை திறந்து பாயும் அற்புதம், இந்தத் தூய உணர்வு (ஞான மாத்ரதா) காரணமாகவே நிகழ்கிறது.

# வாழ்வு, சாவு, இறவாமை

**நா**ன் யார் எனக் கண்டிட ஒருவன் ஞானதேவருடன் புறப்பட்டானானால் என்ன நேரும்?

ஞானதேவரே இதற்கு விடை கூறுகிறார்: ''இவ்வாறு ஞானம் – அஞ்ஞானம், பகல் - இரவு என்று இரட்டையாகக் காணும் வேறுபாட்டுணர்வு நம்முள் கரைந்து மறைந்ததும், நம் உள்ளம் என்னும் வானத்தில் - மன ஆகாசத்தில் - மெய்ம்மை என்று கதிரவன் ஒளி வீசித் திகழ்கிறான்.

''இப்படி ஒளிர்ந்திடும் மெய்ம்மையே தன் நிலையான நறுமணத்தை ஜீவனானது நுகர்ந்திடுதற்குரிய அற்புத ஆற்றலைத் தருகிறது; இவ்விதம் தோன்றும் நிலையில் 'அது' (தத்) என்ற மெய்ப்பொருள், ஜீவனின் செவிகளில் 'தன்'னிடம் உள்ள அரிய இரகசியங்களை மெல்ல வெளியிடுகிறது; இதே போல் அந்த ஜீவனின் விழிகளிலும் ஒளிவீசச் செய்திடு கிறது; தான் படைத்த திவ்வியப் பிரபஞ்சமே அந்த ஜீவனின் விழிகளில் நிலைக்கண்ணாடியிலே காண்பதுபோல் பிரதிபலிக்கவும் செய்கிறது. இந்தத் திவ்விய விழிகளால் காணும்போது, பிரபஞ்சத்தில் கதிரவன் தானாகவே மலர்ந்த தாமரை என விளங்குகிறான். அம்புலியாம் நிலவை நாடிச் செல்லும் சகோரப் பறவைகள் தாமே அந்த நிலவாக - அம்புலியாக - மாறிவிடுகின்றன! மலர்களோ அற்புத நிறங்கள் கொண்ட வண்ணத்துப் பூச்சிகளாக மாறுகின்றன. இளங்காதலனிடம் அன்பு செலுத்தும் இளநங்கை அவனாகவே மாறிவிடுகிறாள்!

''இப்படியாக, நுகர்வதற்குரிய பொருளும் சரி நுகர் வோனும் சரி, பார்க்கப்படும் பொருளும் சரி பார்ப்பவனும் சரி இரண்டறக் கலக்கும் (அத்வைத) நிலையை எய்துவதுடன் எல்லாம் முற்றுப் பெறுகின்றன.

''இந்த (நிலை என்று கூறுதற்கும் அரிய) அதிசய நிலையில் புலன்கள் தத்தமக்கு உரிய பொருளை நாடுகின்றன; ஆனால் இந்த இயக்கம் எத்தகையது என்றால், விழியினின்று பாயும் ஒளிக் கதிர்கள் நிலைக்கண்ணாடியில் பட, அந்த விழிகள்

தம்மையே அதில் காண்பதும், நிலைக்கண்ணாடிபற்றிய நினைவையே மறந்திடுவதும் போன்றது.

''அந்தக் கணத்தில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பொறுத்துச் சொற்களை உரைக்கிறது வாய்; என்றாலும், 'நித்தியமோனம்' என்னும் சமாதிநிலை இதனால் கலைவதில்லை.

''இதேபோல், உலக விவகாரம் யாவும் - முடிவற்ற ஆக்கச் செயல், அழிவுச் செயல் யாவும் - முன்போலவே நடந்து வந்தாலும், அவற்றால் மெய்ப்பொருளின் செயலற்ற உறுதிநிலை பாதிக்கப்படுவதில்லை.''

பின்பு ஞானதேவர், 'எப்படி எல்லாம் முயற்சிகளும் - ஞானம், பக்தி, கர்மம், யோகம் என்று கூறப்படும் யாவும் - சுயம்பிரகாசமான மெய்ம்மையின்முன் பொருளற்றவையாகி விடுகின்றன' என்பதை விவரிக்கிறார் : ''இந்த அதிசய நிலையில், பழைய நினைவுக்கும் சரி, மறதி என்பதற்கும் சரி, இடமே இல்லை. 'விருப்பம்' என்ற ஒன்று தோன்றினாலும், அது உடனே தானாகவே நிறைவுறும்படி நேருகிறது. தானே தனக்கு விதி வகுத்துக்கொள்ளும் நிலை இது. அப்போது 'சமாதி' என்பது நித்திய முக்தியும் (வீடுபேறு), நித்திய சிருஷ்டியும் (படைப்பும்) இணைந்த இயக்கமாகிவிடுகிறது. பகவானே பக்தனாகிவிடுகிறான். அசையாத புள்ளி நிலையே (பயண) முடிவை அடையும் பாட்டையாகிவிடுகிறது. முழு மோனமே அனைத்துப் பிரபஞ்சமாகிவிடுகிறது. இந்த அசாதாரண நிலையில் இறைவன் தனக்கெனத் தனிக்கோயில் அமைப்பதற்குரிய இடம் ஏதும் இராதபடி பிரபஞ்சம் முழுவதும் பரவி விளங்குகிறான். அப்போது காலம், இடம் என்ற வேறுபாடுகளும் அற்றுவிடுகின்றன. இந்த அதிசய நிலைதான் கர்மம், பக்தி, ஞானம், யோகம் யாவும் முற்றும் ஓய்வு காண்பதற்குரிய ஒன்றாக விளங்குகிறது. முடிவற்ற இந்தப் பேரானந்த நிலையில், கொடுப்பதும் நாமே, கொள்வதும் நாமே ஆகி விடுகிறோம் (அநு. 9).''

இத்தகைய அசாமானியமான வாசகங்களின் பொருளைக் கிரகிப்பது கடினமானதுதான். இப்படி அது தோற்றுவதற்குக் காரணம், நாம் ஏதோ ஒரு போக்கில் போய்க்கொண்டிருக்கிறோம்; நமது இந்த நிலையில் அந்த அருள்மொழிகளினின்று எழும் திவ்விய பரிமளத்தை - அரிய நறுமணத்தை - நுகர நம்மால் முடிவதில்லை. நாம் நின்று எதையும் கவனிப்பதுமில்லை; செவியில் வாங்கிக்கொள்வதுமில்லை. இவ்வாறு அந்த

நறுமணத்தை நாம் நுகர்ந்திட முடியாதபடி செய்துவிடுகிறது, அந்தப் பழம்போக்கு. உண்மையை அறிய இயலாமல் நாம் என்ன என்னவெல்லாமோ யூகங்களும் கற்பனைகளும் செய்து கொண்டு வாழ்கிறோம் ; எது நேர்ந்தாலும் குலையாத - நிறை அமைதியும் மோனமும் கொண்ட - நிலையில் உண்மையைக் காணவோ கேட்கவோ வாய்ப்பு நமக்கு இல்லை.

நம்மிடம் உள்ள சிக்கல் என்னவென்றால், ஏதேனும் ஒன்று வேண்டும் என்ற தீராத் தாகம் கொண்டவர்களாக நாம் இருப்பதுதான் ; ஒன்றை அடையவேண்டும் என்ற முயற்சியே நம்மை முற்றும் ஆட்கொண்டு விடுகிறது. இதுதான் வாழ்வு என்று நாம் கருதி வருகிறோம். எப்போதும் அவா என்னும் சீரழிவுக்கு இட்டுச் செல்லும் அமைதியின்மையே ஆகும் இது. நாமோ, ''எதுவும் வேண்டாம் என முயலாதிருப்பது - சும்மா இருப்பது - சாவுக்கு ஒப்பானது'' என நம்புகிறோம். 'சவம் ; தான் இன்னது வேண்டும் என்று கேட்பதில்லை ; முயற்சியும் செய்வதில்லை. எனவே, ''முயற்சி என்பதே வாழ்வின் மூச்சு ; ஒன்றைப் பெறவோ, சேர்க்கவோ முயலாவிட்டால் சவமாகி விடுவோம்'' என்ற முறையில் செல்கிறது நம் சிந்தனை யோட்டம்.

ஞானதேவர் இதற்கு என்ன பரிகாரம் சொல்கிறார் தெரியுமா ? ''ஒருதரம், 'ஏதும் வேண்டாம்' என உள்ளூற நம்பி முயலாமல் சும்மா இருந்து பாருங்களேன் ! அப்போது உண்மையிலேயே நாம் சவங்களாகிவிட்டோமா எனக் கவனி யுங்கள். இப்படிப் பரிசோதித்தால்தான், நாம் அவ்வாறு சவம் ஆவதில்லை, அதற்கு மாறாக, இந்தப் பரிசோதனையின் மூலம் நம்மிடம் ஒன்றிக்கிடந்த **பழமை** யாவும் மடிந்து (உண்மையிலேயே) **சவம்** ஆகுமெனக் காண்போம் ; ஒன்றின் மீது அவாக் கொள்வதை விட்டு, அதற்காக முயலாமல் இருக்கத் தொடங்கியதுமே, நாம் முன்பு ஏதோ ஒன்றை அடைய விரும்பி முனைந்ததால் சிக்குண்டது போன்றிருந்த நம் ஆற்றல் விடுதலை பெற்று விளங்குவதை அப்போது காணலாம். இப்படி விடுதலை பெற்ற நம் ஆத்மா, எதன் மேலும் அவா இல்லாத தூய விழிப்பு நிலையினுள் அடங்கி, எதையும் கூர்ந்து கவனிக் கும் பாங்கு உடையதாகிறது ; கற்பனை, யூகம் இவற்றை விடுத்து, பேருணர்வு கொண்டு, 'அகமும் புறமும் **உள்ளது** எது என்று அறிவதைத் தவிர வேறேதுமில்லை' என நம் நாட்டம் முழுவதும் ஈடு இணையற்ற அந்த **'ஒரு பொருள்'** மீது செல்கிறது. பழமை முற்றும் நம் எதிரே **மடிந்து**

கிடக்க, அதோடு நாமே நம்முள் அமைத்துக்கொண்ட பழைய அகந்தை யுணர்வு அறவே நீங்கி, யாவும் பொருளற்றவை ஆகின்றன.''

இறப்பு அல்லது சாவு என்றால் என்ன? 'அகந்தை அழிந்தது' என்பதுதான். சாவு என்பது நமக்கு என்றும் விளங்காத ஒன்று; அந்தச் சாவுக்கா நாம் அஞ்சுகிறோம்? இல்லை. 'நாம் வாழ்கிறோம்' என்ற அகந்தையை மையமாகக் கொண்ட போக்கு அழிவதைத்தான் தவறாகச் 'சாவு' என்று கருதிவருகிறோம். பின் அகந்தை என்பது என்ன? அது வாழ்வாகாது. நமக்கும் அப்பாற்பட்ட சக்திகளால், வாழ்வு என்னும் நீரோட்டத்தில் சிக்குண்டு கிடக்கிறோம். அதில் நாமாக வலிய அமைத்துக்கொண்ட உந்துதல்களே நம்மை உளுத்துப்போன மரக்கட்டைகள் ஆக்கி, இப்படியும் அப்படியும் அலைக்கழிக்கின்றன. இந்த நிலையில், நமக்கு இரண்டே வழிகள் தாம் உள்ளன; அவற்றில் ஒன்றை நாம் கடைப்பிடிக்க வேண்டி வருகிறது. ஒன்று, உளுத்துப்போன மரக்கட்டை யாகவே இருந்துவிடுவது; மற்றது, நாம் உண்மையிலேயே மனிதர், முற்றும் மனிதப் பண்பு கொண்டவர்தாம் என்பதை உணர்ந்த விழிப்பு நிலையில் இருப்பது. இதனால் ஓடும் வெள்ள நீர் வழிப்படும் உளுத்தகட்டை போன்று ஆகி, நாம் இறப்பைத் துணிவுடன் ஏற்று அதன்மூலம் அமரவாழ்வு எய்தலாம்.

ஞானதேவர் அருளியது இத்தகைய உண்மையான மனிதப் பண்புகொண்ட உயர் மானிடனின் வாக்காகும். 'இது பொருளற்ற ஒன்று' என்று பட்டால், நமக்கு நாமே; 'பின் பொருள் உள்ளது என்று கருதுவதுதான் எது?' எனக் கேட்டுக்கொள்ள வேண்டும். நாமாகக் கொண்ட யூகம் என்ற முறையிலன்றி உள்ளூற ஆன்மிக முறையில் இந்த வினாவை நம்முள் கேட்டுக்கொள்ள வேண்டும். ஒளி தோன்றியதும் இருளையே காணாத நிலை ஏற்படுவதுபோல் அப்போது நம் ஆன்மிக ஆற்றலால் அகம், புறம் எங்கும் உள்ளதை உள்ள படி கவனித்திடும் விழிப்புநிலை தோன்றிச் சாவு என்பதே இராத அமரவாழ்வை நேருக்கு நேர் காணமுடியும் போலும்!

தாம் அருளிய 'அநுபவாம்ருத'த்துக்குத் தமக்குப் பின்னால் தலைமுறைதோறும் எதிர்ப்புகள் தோன்றக்கூடும் என்று அவர் எண்ணியிருக்க வேண்டும். அதனால்தான் திடீரென்று ஒரு நாள் எல்லோரும் வியப்புற்று நிற்கும்படி, 'பறவை தான் தங்கியிருந்த கூட்டை விட்டுப் பறந்து செல்வதுபோல்'

இந்த உடலை விட்டுத் தாம் பறந்துவிடப் போவதாகத் தெரிவித்தார். இத்தகைய அசாதாரணமான அறிவிப்பு அவருடன் நெருங்கிப் பழகிய அன்பர்களைத் திடுக்கிட வைத்தது. பின்பு தாம் சொன்னபடியே ஞானதேவர் ஆலந்தியில் சித்தேசுவரருடைய கோயிலுக்கு அருகிலே நிலத்தில் குகை போல் பள்ளம் தோண்ட வைத்து, அதில் நுழைந்து யோகாசனத்தில் அமர்ந்து சமாதி நிலை அடைந்ததையும், அவரது ஆத்மா என்னும் பறவை, வாழ்வு - சாவு என்னும் இரு சிறகுகளையும் விரித்துப் பறந்து சென்றதையும் அப்படியே நம் கண்முன் காட்சி தரும் முறையில் நாமதேவர் விவரித்துள்ளார். 'அநுபவாம்ருதம்' என்பது வெறும் சொல்லளவோடு நிற்கவில்லை ; ஞானதேவர் அருளிய மொழியும் ஆத்மனும் இணைபிரியாது ஒன்றிய நிலையை இதன் வாயிலாக உணர்கிறோம். இப்படி 'அநுபவம்' என்பது அதை 'அநுபவித்திடுபவன்' இன்றி அமர நிலை பெற்றுவிட்டது ; எங்கும் நிலைத்தொளிரும நித்திய சத்தியம் அல்லது மெய்ப்பொருளில் கலந்து மறைந்துவிட்டது !

இவ்வளவும் நாமதேவர், மற்றும் பல சாதுக்களின் முன் நடந்தவை யென்றால் பாருங்கள்! இப்படிச் சக ஆண்டு 1281-இல் ( கி.பி. 25-10-1296) ஞானதேவர் சமாதி அடைந்தார்.

நாமதேவர் சொல்கிறார்: ''எனக்கு அப்போது எவ்வளவு வேதனை தெரியுமா ? அவரிடம் எனக்கு உள்ள அன்பு காரணமாக என் விழிகளிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகியது. அந்தப் பெருமோனத்தை எந்தச் சொற்களாலும் கலைத்திட முடியாத நிலை. என் ஆத்மாவே பறந்து செல்வதாக உணர்ந்தேன். அவரோ ஆழ்ந்த மெய்ப்பொருள் செறிந்து விளங்கிய அமுதப் பெருங்கடல் (அநுபவாம்ருத ஸாகரம்); மறை பொருளாம் (ஆத்யாத்மிக) ஆன்மிக உண்மையின் உருவாக விளங்கியவர். அவர் தமது அருள்வாக்கின்மூலம் 'மனிதசமூகம் இன்னது செய்திட வேண்டும்; இன்னது செய்யக் கூடாது' என அறிவுறுத்தியவர். மூவுலகிலும் அவருடைய புகழ் ஒளி வீசுகிறது. 'மானிடன் உண்மையான விழிப்பு நிலையில் இருந்தால் எளிதில் அமரனாக முடியும் என்பதில் ஐயமில்லை' என அவர் நிரூபித்து விட்டார். அவர் சமாதி நிலையிலேயே ஆழ்ந்து மறைந்து விட்டார். பரம்பொருள் அல்லது பிரம்மத்துடன் ஐக்கியமாகி விட்டார் (தோற்றம்-மறைவு இப்படி எதனாலும் பாதிக்கப் படாத மெய்ப்பொருள் நம் முன் தோன்றி மறைவதை யொத்த நிலை இது).''

உண்மையான மானுடம் அல்லது மனிதப்பண்பு மலர்வதைத்தான் ஞானதேவர் 'அமரத்துவம்' எனக் குறிப்பிடுகிறார். ஒவ்வொரு மனிதனிடமும் இந்த மலர்ச் செடியின் வித்து, முளையும் இலையும் தண்டும் விட்டு மலரவும் காத்திருக்கிறது. அவன் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான்; இவ்வுலகில் இயல்பாக உள்ள நிலையில் வீணே தலையிடாமலும், 'நாமாக அமைத்துக்கொண்ட விருப்பு - வெறுப்புகளை அடிப்படையாகக் கொண்டு எல்லாவற்றையும் மாற்றிவிடலாம்' என எண்ணி வீண்முயற்சி செய்யாமலும், உள்ளும் புறமும் விளங்கும் உண்மைப் பொருளைக் காணும் விழிப்பு நிலையிலேயே இருந்திட வேண்டும். தன்னை ஒரு பொருளாகவே கருதாமல், தனியே தவவொழுக்கத்தைக் கடைப்பிடித்து நிற்கவேண்டும். இத்தகைய தூய விழிப்பு நிலையில் தெளிவும் பிறந்திடும். இப்படி (தன்னை ஒரு பொருளாகக் கருதாது), பணிவும் கபடற்ற தன்மையும் தோன்றும்போது ஞான - அஞ்ஞானங்களின் போக்கை, அவற்றுள் சிக்காதபடி அப்பால் இருந்து காண முடியும். தான் யார் என்பதை உணர்ந்துவிட்ட இந்த அரியதொரு நிலையில் மன அடக்கத்தை, நீங்காத பெருமோனத்தைத் துய்த்திடலாம். வாலில்லாக் குரங்கினின்று வெறும் மானிடன் தோன்றியது போன்று வெறும் மானிடன் என்பதினின்றே அதிமானுடம் அல்லது அமரத்துவம் எய்திய ஜீவனின் பரிணும நிலையாகும் இது.

ஆதிமனிதன் பழைய இயல்பான நிலையிலிருந்து பண்பாடு உடையவனுக மாற முனைந்ததுமுதல் மனித இனத்திடையே ஒரு பெரும் பிரச்னை தோன்றிவிட்டது; ஆதியில் இன்னபடி இருந்தோம், எதிர்காலத்தில் இப்படி வாழ்ந்திடுவோம் என்றெல்லாம் நினைப்பது முற்றும் அறிவின்மையாகும். இவை யாவும் வீண்முயற்சி எனக் கண்டுகொண்டதால் தோன்றிய புதிய பண்பாட்டு உணர்வுதான் இந்தப் பிரச்னைக்கு மூலகாரணம். உள்ளதை உள்ளபடி உணராதொதுக்கி வெறும் கற்பனையில் திளைப்பதால் பயனில்லை என்று அறிந்ததால் தோன்றியது இது. 'எல்லா வகையிலும் மனிதனுக்கும் மனிதனுக்குமிடையேயும், மனிதனுக்கும் இயற்கைக்குமிடையேயும் உள்ள பரஸ்பர முரண்பாடுகளை நீடிக்கச் செய்திடும் போக்கு அறவே ஒழியவேண்டும்' என்பதை வலியுறுத்துவதே இந்தப் புதிய முயற்சியின் நோக்கமாகும். மனிதனை மனிதன் சுரண்டுவதும், அம்மனிதன் இயற்கையைச் சுரண்டுவதும் மானிட வாழ்வில் ஓர் அம்சமெனக் கருதிவந்ததால் மனிதரிடையே சச்சரவும் சண்டையும் ஏற்படுகின்றன;

இயற்கையைச் சுரண்டுவதால் உலகம் முழுவதும் உள்ள சுற்றுச் சூழ்நிலை கெட்டு, 'மனிதனும் பிற உயிர்களும் இனி வாழ்வது சாத்தியமா?' என்ற அவலநிலை நம்மை அச்சுறுத்துகிறது. பழையபடி அகந்தையையே முக்கியமானதாகக் கொண்டு பிளவுபட்டு அழிவுறும் விதத்தில் வாழ்ந்து வந்தால் இந்த அறைகூவலைச் சமாளிக்க முடியாது. எனவே, நாம் இதற்காகச் சாகவும் துணிந்து, 'தான்', 'தனது' என்ற நினைவை ஒழித்து, மனம் இயல்பான அமைதியும் மோனமும் இணைந்த நிலையில் இருந்தபடி தன் முழு ஆற்றலுடனும் செயல் புரிந்திட முனையவேண்டும். இதுவரை அகந்தையுடனும் பிளவுபட்டும் வாழ்ந்தது போதும்; மரணத்தை எதிர்நோக்கும் இந்தச் சோதனையில் ஈடுபட்டு, பழைய வழிகளைக் கடைப்பிடிப்பதை அறவே நீக்கிட வேண்டும்! புதிதாக மலரும் அமரவாழ்வை ஏற்றல்தான் இன்றைய அவல நிலையினின்று மனிதன் மீள முடியும்.

இவ்வாறு பழமையை ஒழித்து, ஏதுமில்லை என்ற நிலையில் புதுமை தோன்றுவதை எதிர்பார்த்து நிற்கும் போது, கர்மசக்கரம் மேலும் நகர இடங்கொடாதபடி-வினைப்பயன் மேலும் விளைவதற்கு இடமளிக்காதபடி-எப்போதும் உள்ளும் புறமும் என்ன நிகழ்கிறது எனக் கூர்ந்து காணும் விழிப்பு நிலையிலேயே இருந்திட வேண்டும். இது ஒன்றுதான் கர்மபலன் அல்லது வினைப்பயனினின்று நீங்கி, முன்னேற ஒரே வழி. இந்த வழியைத்தான் ஞானதேவர் அற்புதமான செஞ்சொற்களில் நமக்கு எடுத்துரைக்கிறார்; என்றும் நிலைத்துள்ள மெய்ப்பொருளின் அமர ஒளி வீசித் திகழ்வதை அவற்றில் நாம் காண்கிறோம்.

ஞானதேவர் அல்லது 'ஞானேசுவரர்' மராட்டிய பக்த கவிகளான மகான்களுள் மிகமிகப் போற்றப்படுபவர் (கி. பி. 1275-1296). இளவயதிலேயே இவர், 'கீதை'க்கு 9000 'ஓவி' என்று செய்யுள் வடிவில் உரை எழுதி யுள்ளார்; அதுதான் 'ஞானேசுவரி'. இவருடைய தந்தை விட்டல்பந்த் குலகர்ணியை, சந்நியாசி ஆனபின் மீண்டும் இல்லறத்தானாக மாறியதை மகா பாவச் செயல் என்று சாக்குச் சொல்லி, வைதிகப் பிராமணர்கள், ஜாதியை விட்டே விலக்கிவிட்டார்கள். இதனால் அவருடைய நாலு குழந்தைகளும் அவதியுற நேர்ந்தது.

'ஞானேசுவரி'யைத் தவிர ஞானதேவர், 'அம்ருதாநுபவம்', 'சங்கதேவ பசஷ்டி' என்ற தத்துவ நூல்கள் இரண்டை யும், மற்றும் உணர்ச்சி மிக்க பல பாடல்களையும் அருளி யிருக்கிறார். அவை யாவும் ஆழ்ந்து விளங்கும் மகத்தான தத்துவங்களும், ஆன்மிகப் பேரறிவும் கொண்டவை. நடையழகும், கற்பனையின் சிகரமுமாக விளங்குவதால், முந்தைய மராட்டியக் கவிதைத் துறையில் மிக உயர்ந் தவையாக இவை போற்றப்படுகின்றன. 'வாழ்வு என்றும் நிலைபெற்ற ஒன்று' என்ற நுண்ணிய கருத்தை இந்தச் சிறு நூலில் எடுத்துக் காட்டியிருக்கிறார் ஆசிரியர்.

இதனை எழுதிய ஸ்ரீ புருஷோத்தம் யஷ்வந்த் தேஷ் பாண்டே பிரபலமான மராட்டிய நாவலாசிரியரும் சிந்தனையாளரும் ஆவார். தம் மராட்டிய மொழி நூலுக்காக 1962இல் சாகித்திய அக்காதெமிப் பரிசு பெற்றவர்.

அட்டை அமைப்பு : சத்யஜித் ராய்

உருவப்படம் : சந்திரகாந்த் ருத்ரா விலை: ரூ. 5.